உ

சிவமயம்

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

# அண்ட ஒளி திருமூலர் திருமந்திரம்

## சூனிய சம்பாதனை (எம) 70

(சூனிய சம்பாஷணை)

(ஞானத் தெளிவு உரை விளக்கம்)



"தமிழ் வேத நாவலர்"
"வைத்தியமணி"
சற்குரு. சித.வே. ஷண்முகநாத பிள்ளை
முத்தமிழ் வேதத் திருச்சபை
தேவகோட்டை.

உ
சிவமயம்

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

# அண்டஒளி திருமூலர் திருமந்திரம்

சூனிய சம்பாதனை (௭௰) 70 மந்திரம்

ஞானத் தெளிவு உரை விளக்கம்

இந்நூலாசிரியர்
"தமிழ் வேத நாவலர்"
முத்தமிழ் வேதத் திருச்சபை
சற்குரு சித.வே. ஷண்முகநாத பிள்ளை
தேவகோட்டை.

இங்ஙனம்
கனடா டாக்டர் **சித. ஏகப்பன் செட்டியார்** அவர்கள்
ஆர்வத்தினாலும் பேரன்பினாலும்

தேவகோட்டை
ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸில் பதிப்பிக்கப் பெற்றது.

வெளியீடு
**முத்தமிழ் வேதத் திருச்சபை**
முத்தாத்தாள் நடுநிலைப் பள்ளி
வ.பெரி.மு. தெரு, தேவகோட்டை - 630 302.

அரிஓம் நன்றாக குருவாழ்க
குருவே துணை

முதற்பதிப்பு : விஷு ஆண்டு புரட்டாசி திங்கள் 16
02-10-2001

விலை : [redacted]

பதிப்புரிமை : முத்தமிழ் வேதத் திருச்சபையோர்
தேவகோட்டை

கிடைக்குமிடம் : Dr. SV. **முருகேஷ்** R.I.M.P. A.M.I.H.
முத்தமிழ் வேதத் திருச்சபைத் தலைவர்
சித்த மருத்துவம்
கிணற்றுநீர் நிபுணர்
புதுக்கோட்டை

**நலந்தா புத்தகக் கடை**
வடக்கு வல்லம்பர் தெரு
காரைக்குடி - 630 001. ☎ 434807

**இராம. ஆதிரெத்தினம்**
இணைச் செயலாளர்
முத்தமிழ் வேதத் திருச்சபை
19, ரெகுநாதபுரம் மேற்கு
தேவகோட்டை - 630 302. ☎ 370113

கணினி & அச்சு அமைப்பு : **ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸ்**
பஸ் ஸ்டாண்டு தெரு
SBI எதிரில்
தேவகோட்டை - 630 302. ☎ 373347
email : swamirajbal@hotmail.com

உ
சிவமயம்

அரிஓம் நன்றுக குருவாழ்க குருவே துணை

# அண்டஒளி திருமூலர் திருமந்திரம்

சூனிய சம்பாதனை (எய) 70 மந்திரம்

ஞானத் தெளிவு உரை விளக்கம்

இந்நூலாசிரியர்

"தமிழ் வேத நாவலர்"
முத்தமிழ் வேதத் திருச்சபை
சற்குரு சித.வே. ஷண்முகநாத பிள்ளை
தேவகோட்டை.

இங்ஙனம்
கனடா டாக்டர் **சித. ஏகப்பன் செட்டியார்** அவர்கள்
ஆர்வத்தினாலும் பேரன்பினாலும்

தேவகோட்டை
ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸில் பதிப்பிக்கப் பெற்றது.

வெளியீடு
**முத்தமிழ் வேதத் திருச்சபை**
முத்தாத்தாள் நடுநிலைப் பள்ளி
வ.பெரி.மு. தெரு, தேவகோட்டை - 630 302.

அரிஓம் நன்றாக குருவாழ்க
குருவே துணை

முதற்பதிப்பு : விஷு ஆண்டு புரட்டாசி திங்கள் 16
02-10-2001

விலை : ரூ. 51/- (ருயக)

பதிப்புரிமை : முத்தமிழ் வேதத் திருச்சபையோர்
தேவகோட்டை

கிடைக்குமிடம் : Dr. SV. **முருகேஷ்** R.I.M.P. A.M.I.H.
முத்தமிழ் வேதத் திருச்சபைத் தலைவர்
சித்த மருத்துவம்
கிணற்றுநீர் நிபுணர்
புதுக்கோட்டை

**நலந்தா புத்தகக் கடை**
வடக்கு வல்லம்பர் தெரு
காரைக்குடி - 630 001. ☎ 434807

**இராம. ஆதிரெத்தினம்**
இணைச் செயலாளர்
முத்தமிழ் வேதத் திருச்சபை
19, ரெகுநாதபுரம் மேற்கு
தேவகோட்டை - 630 302. ☎ 370113

கணினி & அச்சு அமைப்பு : **ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸ்**
பஸ் ஸ்டாண்டு தெரு
SBI எதிரில்
தேவகோட்டை - 630 302. ☎ 373347
email : swamirajbal@hotmail.com

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

ஓங்காரத்தின் உட்பொருளை ஓதி உணர்ந்த எம் ஞானதெளிவு குருவின் திருவடி என் உச்சிமேற் கொண்டு அண்டஒளி துரியாதீத நிலை மூல குரு திருமூலரின் திருமந்திரம் ஒன்பதாம் தந்திரம் சூனிய சம்பாதனை 70 (எழுபது) (எய) மந்திரங்களுக்கு ஞானத் தெளிவு உரை எழுதிய நூலிற்கு முன்னுரை எழுதுவோமாக.

மண்நீர் அனல் காற்று வான் சூரியன், சந்திரன், அக்னி தாரகை ஆகிய ஒன்பது நிலைபெறுகின்ற ஓங்காரமாகிய பிரணவம். முதற் பொருளாகிய சத்தின் நின்றும் தோன்றிய சித்து ஓர் உருக் கொண்ட துவித சித்தாந்தம் என்னும் உயிர்நிலையின் யிடத்து தோன்றிய ஒலி வடிவமாகிய அகத்தின் அச்சாம் வாசியாகிய சுருதி அகச்சு "நால்வகை யோனி எழுவகை தோற்றத்து எண்பத்து நான்கு லக்கமாய் விரிந்து காணப்பெறுவன ஆனவையெல்லாம்'' - கருப்பையில் தோன்றுவது, முட்டையில் தோன்றுவது வித்தில் தோன்றுவது இந்த மூன்றின் அழிவுநிலை கழிவுப் பொருளில் தோன்றுவது ஆகிய நான்கு பிறப்பிடங்களைக் கொண்டு கருவாயும், உருவாயும், குழவியாயும், பாலப் பருவமாயும், பாலியற் பருவமாயும், வளமெய்இயைவன பருவமாயும், முதிர்வுப் பருவமாயம், ஆகிய எழுவகைத் தோற்றத்தே கொண்டுள்ள உயிரினங்கள் அனைத்தையும் நூல்வழக்கில் "பவம், பாலவம், கௌலவம், தைதுலை, கரசை, வனசை, பத்திரை, சகுணம், சதுஷ்பாதம், நாகபம், கிமிஸ்துக்னம் என்று வழங்கப்படும். இதை பதினொரு கரணங்கள் என்று கூறுவர். பவம், பாலவம் என்னும் இரண்டும் மக்கள் இனத்தைக் குறிக்கும். பவம் என்பது பிறப்பறுத்த ஞானியர்களையும் பாலவம் என்பது மண்மேல் பிறந்து இறந்து உழலும் மக்கள் இனத்தையும் குறிக்கும். கௌலவம் என்பது கவிழ்ந்த நடையினை உடைய உயிரினம். தைதுலை என்பது தத்தி உழல்வனவான உயிரினம். கரசை என்பது கரத்தை அசைத்து பறப்பனவான உயிரினம். வனசை என்பது வலிமையின் அசைந்து செல்லும் உயிரினம். பத்திரை என்பது பத்திரம் என்னும் இலைகளை உடைய மூலத்தைக் கொண்ட மூலிகை இனம். இவைகள் ஏழுவகை தோற்றத்தினதாகும். இந்த ஏழுவகையும் ஒன்று கூடின நிறை உடம்பு கொண்டவன் மனிதன். இதனுலேயே தான் மானிடப் பிறவிதான் முதன்மைத்தானது என உணரலாம்.

சூழ் எனச் சொல்லும் சுற்றிவளைத்தலாம் சூழலில் அன்னியம் சூனியம் என்ப. சூனியம் என்னச் சொல்லும் இயற்பொருள் வெட்டவெளியாம் வெறுமையைக் குறிக்கும். வெறுமையுற்ற வறிய ஒருவன் தேடும் பொருளாம் தேட்டம் விரும்பிக் கவர்தல் வலிதாம் கவறு

செய்யல் ஆம் தொழில் சூதென அறையும் நற்றமிழ் ஆகையால் சூனிய சம்பாதனைச் சொற்பொருள் விளங்கச் சூதினைக் குறித்துச் சொல்லலுற்றது காயம் பலகை கவறைந்து கண்மூன்றென்ன தொடங்கும் இனிய மந்திரம்.

மூலமுதற்குரு திருமூலர் சித்த மரபின் முதல்வர் விலங்கினங்கள், புல்லினங்கள், செடிகொடி முதலிய தாவர இனங்கள் உழவுத் தொழில் உலகியற்கை விநோதங்கள் இப்படியாக தொகைப்படுத்தி சூனிய சம்பாதனையை அமைத்திருக்கின்றார். இதன் உட்கிடக்கை தெரிந்ததைக் கொண்டு தெரியாததை நமக்குக் காட்டத்ததான்.

"விண்ணின்றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு" வந்தவர்கள் நாம். விண்ணில் பிரமத்துடன் ஒன்றி இருந்த நாம் வெளிமுகமாகப் பார்க்கும் காலை பிரமத்தை விட்டு விட்டணுவாகி இருட்டில் தவிக்க ஆரம்பித்தோம். விட்ட அணு ஓங்குநாதத்தோடு உறவு கொண்டு விந்தில் அமைவது முதல் பிறவி. மோகத்தினால் பெண்ணிடம் கருப்பாசயஞ்சாரல் இரண்டாம் பிறவி. குழந்தை உருவாய் பிறத்தல் மூன்றாம் பிறவி. கரணங்கள் தோன்றாத பருவம் பெற்றோர் பேணி வளர்க்கும் பாலப்பருவம் நான்காம் பிறவி. மனம் முதலிய அந்த கரணங்கள் தோன்றும் யௌவனப்பருவம் ஐந்தாம் பிறவி. விருத்தப் பருவம் ஆறாம் பிறவி. சூக்கும சரீரத்தில் உயிர்நிலை கொண்டு தேவ உருவடைதல் ஏழாம் பிறவி. நாம் செய்யும் செயல்களின் விளைவாக பிறவிப்பெருங்கடல் தொடர்கிறது. பிரமத்தை விட்டுவந்த விட்டணுவாகிய உயிர்ப்பொலி மீண்டும் பிரமத்தை நாடிச் செல்ல வகுத்த வழியாகிய நெறிதான் சிவராஜயோகம். அதில் நிலைத்து சேதனமானவை யாவும் சிவமயமாய் வேதனைதீர அருளிச் செய்ய நான்கு வேதமாகிறது. வேதம் இது என்று ஞானாசிரியன் வியந்து உணர்த்தும் போதந்தருங்கலை ஒன்றற் கொன்று என்றும் பொருத்தமிலாப் பேதந்தருந்தலை வாயிலில் ஆடல் செய்வதால் வேதம் எனப் பெயர் பெற்று நான்காக விளங்குகிறது. சிவராஜ யோகத்திற்குச் சரியையாகச் சொல்லியது தான் புராணம், ஆகமங்கள், ஓமம், தற்பணம், வேள்வி முதலான மார்க்கங்கள் யோகச் செயலுக்கு கிரியையே. வியாதர் மாணுக்கர் என விளங்கும் பயிலர், இசை மினி, விசும்பயணர், சுகர், சுமந்து என புராணங்களில் வரும். வியாதராகிய உயிர்ப்பொலி காது, நா, மூக்கு, கண், மெய்யிலளவளவுந் தசவித நாதச் சரியை இணைந்து வேத வேதாந்தமாய் இயக்காய வர்க்கமாக அமைகிறது. உயிர்ப்பொலி கூட்டத்தினால் அமைந்தது அகம் எனத் தெளிந்துதெய்வத்தின் ஆரவாரமாகிய தேவாரம் பதிகம் ஆக சமைத்து தந்திருக்கின்றார்கள் மூவரும்.

அகத்தின் ஒலியை ஒருமுறைப்படுத்த அகத்தியமான அகத்தியம் ஓர்ந்து தெளிந்தவாறு (70) எழுபது திருமந்திரங்களுக்கும் ஞானத் தெளிவு உரை தந்திருக்கின்றார்கள். திருமூலர் பாடல்கள் மட்டும் ஏன் திருமந்திரம்

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

ஓங்காரத்தின் உட்பொருளை ஓதி உணர்ந்த எம் ஞானதெளிவு குருவின் திருவடி என் உச்சிமேற் கொண்டு அண்டஒளி துரியாதீத நிலை மூல குரு திருமூலரின் திருமந்திரம் ஒன்பதாம் தந்திரம் சூனிய சம்பாதனை 70 (எழுபது) (எய) மந்திரங்களுக்கு ஞானத் தெளிவு உரை எழுதிய நூலிற்கு முன்னுரை எழுதுவோமாக.

மண்நீர் அனல் காற்று வான் சூரியன், சந்திரன், அக்னி தாரகை ஆகிய ஒன்பது நிலைபெறுகின்ற ஓங்காரமாகிய பிரணவம். முதற் பொருளாகிய சத்தின் நின்றும் தோன்றிய சித்து ஓர் உருக் கொண்ட துவித சித்தாந்தம் என்னும் உயிர்நிலையின் யிடத்து தோன்றிய ஒலி வடிவமாகிய அகத்தின் அச்சாம் வாசியாகிய சுருதி அகச்சு "நால்வகை யோனி எழுவகை தோற்றத்து எண்பத்து நான்கு லக்கமாய் விரிந்து காணப்பெறுவன ஆனவையெல்லாம்" - கருப்பையில் தோன்றுவது, முட்டையில் தோன்றுவது வித்தில் தோன்றுவது இந்த மூன்றின் அழிவுநிலை கழிவுப் பொருளில் தோன்றுவது ஆகிய நான்கு பிறப்பிடங்களைக் கொண்டு கருவாயும், உருவாயும், குழலியாயும், பாலப் பருவமாயும், பாலியற் பருவமாயும், வளமெய்இயைவன பருவமாயும், முதிர்வுப் பருவமாயம், ஆகிய எழுவகைத் தோற்றத்தே கொண்டுள்ள உயிரினங்கள் அனைத்தையும் நூல்வழக்கில் "பவம், பாலவம், கௌலவம், தைதுலை, கரசை, வனசை, பத்திரை, சகுணம், சதுஷ்பாதம், நாகபம், கிமிஸ்துக்னம் என்று வழங்கப்படும். இதை பதினொரு கரணங்கள் என்று கூறுவர். பவம், பாலவம் என்னும் இரண்டும் மக்கள் இனத்தைக் குறிக்கும். பவம் என்பது பிறப்பறுத்த ஞானியர்களையும் பாலவம் என்பது மண்மேல் பிறந்து இறந்து உழலும் மக்கள் இனத்தையும் குறிக்கும். கௌலவம் என்பது கவிழ்ந்த நடையினை உடைய உயிரினம். தைதுலை என்பது தத்தி உழல்வனவான உயிரினம். கரசை என்பது கரத்தை அசைத்து பறப்பனவான உயிரினம். வனசை என்பது வலிமையின் அசைந்து செல்லும் உயிரினம். பத்திரை என்பது பத்திரம் என்னும் இலைகளை உடைய மூலத்தைக் கொண்ட மூலிகை இனம். இவைகள் ஏழுவகை தோற்றத்தினதாகும். இந்த ஏழுவகையும் ஒன்று கூடின நிறை உடம்பு கொண்டவன் மனிதன். இதனாலேயே தான் மானிடப் பிறவிதான் முதன்மைத்தானது என உணரலாம்.

சூழ் எனச் சொல்லும் சுற்றிவளைத்தலாம் சூழலில் அன்னியம் சூனியம் என்ப. சூனியம் என்னச் சொல்லும் இயற்பொருள் வெட்டவெளியாம் வெறுமையைக் குறிக்கும். வெறுமையுற்ற வறிய னொருவன் தேடும் பொருளாம் தேட்டம் விரும்பிக் கவர்தல் வலிதாம் கவறு

செய்யல் ஆம் தொழில் சூதென அறையும் நற்றமிழ் ஆகையால் சூனிய சம்பாதனைச் சொற்பொருள் விளங்கச் சூதினைக் குறித்துச் சொல்லலுற்றது காயம் பலகை கவறைந்து கண்மூன்றென்ன தொடங்கும் இனிய மந்திரம்.

மூலமுதற்குரு திருமூலர் சித்த மரபின் முதல்வர் விலங்கினங்கள், புல்லினங்கள், செடிகொடி முதலிய தாவர இனங்கள் உழவுத் தொழில் உலகியற்கை விநோதங்கள் இப்படியாக தொகைப்படுத்தி சூனிய சம்பாதனையை அமைத்திருக்கின்றார். இதன் உட்கிடக்கை தெரிந்ததைக் கொண்டு தெரியாததை நமக்குக் காட்டத்தான்.

"விண்ணின்றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு" வந்தவர்கள் நாம். விண்ணில் பிரமத்துடன் ஒன்றி இருந்த நாம் வெளிமுகமாகப் பார்க்கும் காலை பிரமத்தை விட்டு விட்டணுவாகி இருட்டில் தவிக்க ஆரம்பித்தோம். விட்ட அணு ஓங்குநாதத்தோடு உறவு கொண்டு விந்தில் அமைவது முதல் பிறவி. மோகத்தினால் பெண்ணிடம் கருப்பாசயஞ்சாரல் இரண்டாம் பிறவி. குழந்தை உருவாய் பிறத்தல் மூன்றாம் பிறவி. கரணங்கள் தோன்றாத பருவம் பெற்றோர் பேணி வளர்க்கும் பாலப்பருவம் நான்காம் பிறவி. மனம் முதலிய அந்த கரணங்கள் தோன்றும் யௌவனப்பருவம் ஐந்தாம் பிறவி. விருத்தப் பருவம் ஆறாம் பிறவி. சூக்கும சரீரத்தில் உயிர்நிலை கொண்டு தேவ உருவடைதல் ஏழாம் பிறவி. நாம் செய்யும் செயல்களின் வினைவாக பிறவிப்பெருங்கடல் தொடர்கிறது. பிரமத்தை விட்டுவந்த விட்டணுவாகிய உயிர்ப்பொலி மீண்டும் பிரமத்தை நாடிச் செல்ல வகுத்த வழியாகிய நெறிதான் சிவராஜயோகம். அதில் நிலைத்து சேதனமானவை யாவும் சிவமயமாய் வேதனைதீர அருளிச் செய்ய நான்கு வேதமாகிறது. வேதம் இது என்று ஞானசிரியன் வியந்து உணர்த்தும் போதந்தருங்கலை ஒன்றற் கொன்று என்றும் பொருத்தமிலாப் பேதந்தருந்தலை வாயிலில் ஆடல் செய்வதால் வேதம் எனப் பெயர் பெற்று நான்காக விளங்குகிறது. சிவராஜ யோகத்திற்குச் சரியையாகச் சொல்லியது தான் புராணம், ஆகமங்கள், ஓமம், தற்பணம், வேள்வி முதலான மார்க்கங்கள் யோகச் செயலுக்கு கிரியையே. வியாதர் மாணுக்கர் என விளங்கும் பயிலர், இசை மினி, விசும்பயணர், சுகர், சுமந்து என புராணங்களில் வரும். வியாதராகிய உயிர்ப்பொலி காது, நா, மூக்கு, கண், மெய்யிலளவளவுந் தசவித நாதச் சரியை இணைந்து வேத வேதாந்தமாய் இயக்காய வர்க்கமாக அமைகிறது. உயிர்ப்பொலி கூட்டத்தினால் அமைந்தது அகம் எனத் தெளிந்துதெய்வத்தின் ஆரவாரமாகிய தேவாரம் பதிகம் ஆக சமைத்து தந்திருக்கின்றார்கள் மூவரும்.

அகத்தின் ஒலியை ஒருமுறைப்படுத்த அகத்தியமான அகத்தியம் ஓர்ந்து தெளிந்தவாறு (70) எழுபது திருமந்திரங்களுக்கும் ஞானத் தெளிவு உரை தந்திருக்கின்றார்கள். திருமூலர் பாடல்கள் மட்டும் ஏன் திருமந்திரம்

என வழங்குகிறது என்றால் அது ஆகமம். ஆகமம் என்றால் உயிர் நிறைந்திருப்பது எனப் பொருள்படும். எப்படி என்றால் உயிர்க்கலை பனிரெண்டு அட்சரங்கள் ஐம்பத்தி ஒன்று. சந்திரபூரணகலை பதினாறு. சூரியகலை பனிரெண்டு. பெருவாயில்கள் ஒன்பது. சூரியகலை சந்திரகலை இருபத்தெட்டு. இந்த அமைப்பின்படி ஒன்பது தந்திரம். ஒவ்வொரு தந்திரமும் இருபத்தெட்டு உட்பிரிவுகளைக் கொண்டது. ஒருவரிக்கு 12 (பனிரெண்டு) எழுத்தாக 48 நாற்பத்தெட்டு மெய்எழுத்து ஒன்று பாவும் பொருளும் ஆக 51 ஐம்பத்தி ஒன்று ஆகவும் வரிக்கு (4) நான்கு சொல் வீதம் 16 பதினாறு சொற்களாலும் அமைந்து மன இருளை நீக்கி மனதை செம்மைப்படுத்தி ஞானக் கலையால் உயிரை நிரப்ப துரியாதீத நிலையில் இருந்து ஆக்கியதால் திருமந்திரம் எனப் பெயர் பெற்றது. சித்தாந்த தத்துவம் 36 (௩௰௬) தூலத்தில் ஆன்மா இடம் பெறுவது ஆன்மத்துவம் 24 (௨௰௪). தூலகாரணத்தில் வாசியிடம் பெறுவது வித்தியாதத்துவம் 7 (எ) சூக்குமமாகிய மன இருளை அகற்ற சிவமே தத்துவமாய்தோன்றல் சிவதத்துவம் 5 (ரு). வாசி மனத்தைக் கூட மனம் உயிரைக் கூட உயிர் பிரமத்தைக் கூடும்.

எம் ஞானத்தெளிவு குரு சித.வே. ஷண்முகநாதபிள்ளை அவர்கள் எழுதிய திருமுறைப் பெருநூல் விளக்கத்தில் "திருமுறைக் குழுக்குறி விளக்கப் பஞ்சரத்திர வைகாநேய ஆகம மறை நுதலிப்புகுதல்" இதையே வேத சங்கேத பாஞ்சராத்திர வைகாநஸ ஆகமச் சுருதிச் சணுகிறகம் என்பர் வடநூலார்.

அடங்கலுந் தன்னுள் ளடக்கி யடங்கும்
இயல்புள நாதத் தியைந்து விளங்க
வமைதிரு முறையே யடங்கன் முறையாம் (க)

அடங்கன் முறையாய் அடக்கி யடங்குந்
தன்மை யதனாற் சபையெனும் அம்பரம் (உ)

அம்பரம் என்னும் அகண்ட வெளியில்
விளங்குஞ் சித்தெனும் விந்துவை நாதம்
என்னுஞ் சத்தி இயைந்து நோக்கஅச்
சித்தம் பரத்திற் றிருநடம் ஆகும். (௩)

சித்தம் பரத்திற் றிருநடஞ் செய்யும்
அசைவாற் பிறக்கும் ஆர வாரம்அத்
தெய்வார வாரமே தேவாரம்என்ப (ச)

தேவார வாரமாய்த் திகழுஞ் சத்துசித்
தனந்த நடன மாயசிற் றம்பலம்
எழுதாக் கிளவி எனும் முதன் மறையாம் (ரு)

இவ்வைந்தும் பஞ்சரத்திரம்.

சித்தம்பரத்திற் றிருநடஞ் செய்யும் அசைவாற் பிறக்கும் ஆரவாரத்தை சும்மா இருந்து அம்மா பொருளை சூனியத்தில் உணர்ந்து நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என 70 எழுபது மந்திரங்களில் தந்திருக்கிறுர் திருமூலர். திருமூலர் வழி வந்த எம் ஞானத் தெளிவு குரு சித.வே. ஷண்முகநாத பிள்ளை அவர்கள் முப்பத்தெட்டாம் மந்திரம் காலம் வரும் பொழுது உணர்வார்கள் மக்கள் என்று விட்டுவிட்டு அதற்கு பதிலாக "போதிரண்டாகிப் புரிந்தருள் செய்திட்டு" எனத் தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி நிறைவு செய்திருக்கிறுர்கள். மேலும் ஓரிரு சொல்லை திருத்தி உள்ளார்கள். இந்நூல் கிடைத்து வாசிக்கும் சிவபுண்ணிய சீல மெய்யன்பர்கள் இயம நியம நெறி நின்றுல் தெள்ளத் தெளிவாக புரியும். வாசிக்க வாசிக்க இனிமை பெருகும். பலதடவைகள் வாசித்தால் தான் மனஇருள் நீங்கும். மன இருள் நீங்கினுல் அண்ட ஒளியாகிய மங்காத ஜோதியில் நிலைத்து நிற்கலாம். இந்நூலை வாசிப்பவர்கள் பத்தனுகும் தகுதியைப் பெறுவர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இந்நூலை வாசித்து அறிந்தவர்கள் சோராத சுகம் அடைய முயலுவார்கள் என்பதிலும் ஐயமில்லை.

உலக மக்கள் உய்வு எய்த வேண்டும் என எண்ணி எழுதிய சூனிய சம்பாதனை எம் ஞானத் தெளிவு குருவின் கனிந்த நல் ஆசியால் சிவபுண்ணிய சீலமெய்யன்பர்களுக்கு கிடைக்க கனடாவில் இருக்கும் டாக்டர். சித. ஏகப்பன் செட்டியார் அவர்கள் பொருளுதவியாலும் வெளி வருகிறது. திரு. சிதம்பரம் செட்டியார் அவர்கள் மகனும். திரு. கரு. முத்தையா செட்டியார் அவர்கள் மருமகனும் ஆகிய டாக்டர் திரு. சித. ஏகப்பன் அவர்கள் ஞானத் தெளிவுகுருவின் அன்பிற்குரியவர். மிகவும் எளிமை யானவர். சொல்லும் செயலும் ஒன்றுக இருக்க கூடிய மாமனிதர் அன்னுர் குடும்பத்திற்கு முத்தமிழ் வேதத் திருச்சபையாரின் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேம். என்றும் நிலைத்திருக்கின்ற தமிழ் எழுத்துக்களை எங்கள் விருப்பத்திற்கேற்ப பொறுமையாக கணினி மூலம் ஆரம்பம் முதல் நிறைவு வரை சிறந்த முறையில் அச்சு அமைத்துத் தந்த ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸ் குடும்பத்தார்களுக்கு எங்களது நன்றி கலந்த வணக்கம் உரித்தாகட்டும். இந்நூலிற்கு முன்னுரை எம் ஞானத் தெளிவு குரு உள்ளிருந்து உணர்த்த உணர்ந்ததை எழுதியுள்ளோம் என்பதை மிகவும் பணிவன்புடன் தெரிவித்து என்றும் முத்தமிழ் வேதத் திருச்சபையின் ஞானத் தெளிவு குருவின் அடிமையாக வாழ இறைவனை வேண்டிக் கொண்டு நிறைவு செய்கின்றேன்.

இங்ஙனம்

**இராம. ஆதிரெத்தினம்**
முத்தமிழ் வேதத் திருச்சபை

அரிஓம் நன்ருக குருவாழ்க
குருவே துணை

காயம் பலகை கவறைந்து கண்மூன்று
அயம் பொருவதோர் ஐம்பத்தோ ரக்கரம்
ஏய பெருமான் இருந்து பொருகின்ற
மாயக் கவற்றின் மறைப்பறி யேனே. க (1)

காயம் - காமகுரோதிகளால் காயப்படும் தன்மை பெரிதும் உள்ளதால் உடம்பிற்கு காயம் என்று பெயர் உள்ளது. 'காமக் கனலில் கருகும் சருகு' என்பார் பட்டினத்தார். சித்தர்கள் காய்ந்த பொருளையும் காரம் உள்ள பொருளையும் காயச் சரக்கென்று கூறுவர்.

காயம் பலகை என்பதால் - பலகை என்பதை கையாளப் பெறும் பொழுது சிறப்புடைத்தாய் இருக்கும். அல்லாதபோது கட்டையாகிவிடும். ஆகவே, உயிரும் உயிர்ப்பும் உயிருக்கு உயிரான ஆதியும் அமைந்திருக்கும் பொழுது பலகை பீடுபெற்றுக் காணும் பீடம் எனப்பெறும். இல்லையேல் பயனற்றுக் கிடக்கும் கட்டையாகிவிடும். இத்தகவு பற்றி திருமூலர் காயம் பலகை என்று சொல்லுகின்ருர். காயம் பலகை என்பது சூனிய சம்பாதனையில் காயம் பலகையைக் குறிக்கின்றது. தாயப் பலகை என்னும் சொல்லே உரிமைப்பாடு கொள்ளப்படும் பலகை என்பது பொருள். அதே போன்று சரீரத்தில் உயிரும் உயிர்ப்பும் உயிர்க்குயிராம் ஆதியும் உரிமைப்பாடு கொண்டு இலங்குகின்றது. அவ்வுரிமைப் பாட்டின் பதிவுச்சுவடே தாயப் பலகையில் தோன்றும் பதிவுக் கட்டங்கள். அப்பதிவு கட்டம் கொண்ட பலகையில் செயற்பாடு கொள்ளும் தாய விளையாட்டில் பயன்படுத்தப் படுவது கவறு என்னும் சோவியாகும். அதற்கு கவறு என்று பெயர்வரக் காரணம் காயம் பலகையாம் நம் சரீரத்தில் செயற்பாடு கொள்ளப்பெறும் பொருள் ஐந்து ஆகிய ஐம்பூதம். ஐம்பூதத்தால் இயக்கப்படுகின்றபடியால் சரீரத்திற்கும் பூதியம் என்று பெயர். இப்பூத பூதியத்திற்கு ஆதியாய் நிற்பது ஒன்று உண்டு. ஆகவே, 'க' என்னும் ஒன்ருேடு சேர்ந்து அது ஆறுகின்ற படியாலும் ஐந்துதான் தோன்றும் பொருள் ஒன்று தோன்ருப் பொருளாக இருக்கின்றபடியாலும் கவறு ஐந்தென்று சொல்லுகின்ருர்.

ஆய விளையாட்டில் தொடக்கம் கொள்ளும் சிறப்பு ஐந்திற்கு உண்டு. ஆறிற்கு இல்லை.

காயமாகிய பலகையில் கவறு ஐந்தாகிய பூதியம் செயற்பாடுங்கால் அச்செயற்பாட்டின் சலனம் விளங்கி பலவகைப்பட்ட இன்னல்களுக்கு உள்ளாவது போன்று அடித்தும், வெட்டியும், குத்தியும் திரிபு அடையும்.

அத்திரிபை எல்லாம் கடந்து சலனம் அற்று காய்முற்றி கனியும் நிலையாகிய முத்திநிலைப்பேறை அடைவது தாய விளையாட்டில் பழம் எனப்படுகின்றது. அப்பழத்தை அடைவதற்கு கண் மூன்றைக் கடக்க வேண்டும். அம்மூன்று புறப்புறமாகிய வெளியகத்து நின்று உள்ளே புகுதலாகிய தொடக்கம் அதுவே புறம். அதைவிடுத்து இரண்டாம் சுற்று உள்புகுவது அகப்புறம். அதையும் கடந்து மூன்ரும் சுற்றை அடையும் பேறே பழம் எனப்படும். இதைக்கண் மூன்று என்று சொல்லுகின்ருர். கண் என்பது இடத்திற்கு பெயர். இடத்தில் தங்கப்பெறும் செயற்பாடு ஒன்றுடைத்தாதலே இடத்திற்கும் சிறப்பு. கண்ணென்பது உடம்பில் உள்ள உயிர்நிலையத்தளவும் தொடர்பு கொள்ளக் கூடிய கருவி. இறைவன் தங்கும் இடத்தை திருக்கண் என்று சொல்லுவதைக் காணலாம். அதே போன்று ஆன்மா தொடர்பு கொண்டு நிலைக்குமிடம் கண் எனப்படுகிறது. அக்கண் தூலம் காரணம் சூக்குமம் என மூவகைப்படும். வெளிநிலையை விட்டு தூலகாரணங்கள் கடந்து சூக்குமத்தை அடைந்தால்தான் பூவாகிப் பிஞ்சாகி காயாகிப் பழுத்து அப்பழத்தில் முத்து கிடைக்கும் (முத்து - விதை) இயலே முக்தி எனப்படும். அஃது தாய விளையாட்டில் கட்டத்தை விட்டு அலைந்து திரியும் பொழுது நாய் என்றும் அதைக்கடந்து உட்புகும்போது காய் என்றும் முற்றுதல் அடையும் போது பழம் என்றும் சொல்லப்பெறுகிறது. ஏழு அத்துக்களை உடைய எழுத்தென்னும் கலையின் பகுநிலை 51 (ருயக) ஆக அமையும். இதையே அகர முதல எழுத்தெல்லாம் என வள்ளுவரும். அகரமுதலென உரைசெய் ஐம்பத்தோரட்சரமும் என அருணகிரிநாதரும் கூறுவதோடு மறைவிளக்கம் கூறும்நூல்கள் எல்லாம் கூறுகின்றன. இதில் ஏழேழு நாற்பத்தி ஒன்பதையும் துவக்கமும் முடிவும் ஆகிய இரண்டும் சேர்ந்து ஐம்பத்தொன்றே எனக்காட்டுகின்றது.

இவ்ஐம்பத்தொன்றும் கூடும் இடத்து தோன்றல், திரிதல், கெடுதல் போன்ற விகாரங்கள் அடைவது ஆயம் பொருவது ஆகும். பொருதுதல் சண்டையிடுதல் ஆகும்.

இந்த எழுத்து நிலைபேறுபெற்று (தீர்க்கம்) விளங்கும் இடம் கலையாகும். அக்கலை அறுபத்திநான்காக விளங்கும். அது தாயப்பலகையில் எட்டு எட்டாக அமைந்து அறுபத்திநான்கு கலையைக் காட்டும் கோவாக இருக்கின்றது. இந்தக்காயப் பலகையில் முதற்பொருள் சூக்குமமாய் இருக்கின்ருன். அவனேடு பொருந்தி விளையாடும் சக்தி காரணமாக இருக்கின்றது. இந்த சூக்கும காரணத்தினுலேயே நம் அகமான சரீரத்திலும் புறமாகிய அண்ட பிண்டத்திலும் எல்லாவகை விளைவுகளும் காணப்பெறுகிறது.

இவ்வாறு இயைய வல்ல முதற்பொருள் எங்கோ மறைந்திருக்கிறுன். ஆனுல் செயல்பாடு நடக்கின்றது. இதை ஒரு ஞானநூலாசிரியர் அரசன் அறியமால் அவன் பேருரைத்து தரைதனை ஆண்ட சமன் என்று கூறுகின்ருர்.

இவ்வியக்கம் தரும் விளைவு நாம் காண்பதைத் தவிர இயக்குபவனைக் காண இயலவில்லை. அதை நற்றமிழ்ல் இயமானுன் என்று கூறுகின்ரேம். இதன் திரியே எஜமானன் என்று வடமொழியில் ஆயிற்று. இயமானன் என்று உயிருக்கு ஒருபெயர். இந்த மாயம் தரும் மாயாவல்லபத்தை நாம் பார்பதல்லாது மறைந்துள்ள மறைப்பொருளைக் காண இயலவில்லை என்று கூறுகின்ருர்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

*தூறு படர்ந்து கிடந்தது தூநெறி*
*மாறிக் கிடக்கும் வகையறி வாரில்லை*
*மாறிக் கிடக்கும் வகையறி வாளர்க்கு*
*ஊறிக் கிடந்தெதன் உள்ளன்பு தானே.* உ (2)

தூய்மை பொருந்திய நல்லவழி தூர்ந்து போய் வழியை மூடியதோடு மட்டும் அல்லாமல் அந்த தூறு மேலும் படர்ச்சியுற்று மல்கிவிட்டது. அப்படி தூறு படர்ந்து தூநெறியை அடைத்து பல்கிப் பெருகிய தோடல்லாமல் அதையாரும் கருத்திற் கொள்ளாமலே கிடக்கின்றது. அந்ததூறை மாற்றி வழியாக்கும் வகையை நாட தெரிந்தவர்கள் இல்லை. அவ்வாறு உள்ள தூறைத் தவிர்த்து மாற்றி கிடக்கும்படி செய்யும் வகையை அறிந்த அறிவாளர்கட்கு ஊற்றுப்பெருக்கெடுத்து கிடக்கின்றது என்னுடைய உள்ளன்பு என்று கூறுவதில் நல்ல வழியாக இருப்பின் அதில் நடைகொள்ளாமல் இருக்க முடியாது நடைகொண்டிருந்தால் வழி தூருது. ஆகவே, தூநெறி தூர்ந்து கிடக்கின்றது என்று சொல்லுவது இல்லாத ஒன்ருய்த் தோன்றுகின்றது. வழியை செப்பம் செய்து நல்வழியாக மாற்றுபவர்கள் இல்லை என்றும் அப்படி மாற்றுபவர்களிடத்து என் உள்ளன்பு கனிந்து பெருகுகின்றது என்றும் கூறுவது ஒரு சிறிய காரியத்தைப் பெரிதாக்கியும் எளிதாகச் செய்யக் கூடியவற்றைச் செய்ய முடியாததென்றும் மிகைப்படுத்திக் கூறுவதாகத் தோன்றுகின்றது. இது நிகழ்ச்சியில் காண ஒன்றை சூனியமாக அமைந்திருக்கின்றது. அது எவ்வாறு காணக் கிடைக்கின்றது என்ற சூனிய சம்பாதனை உரை வருமாறு.

வழி என்பது ஒரு பதியை நாடிச் செல்லும். வழியே சென்ருல் பதியை அடையலாம். பதியை நாடிச் செல்லுவதால் நாடிச்செல்வோன்

இருக்கும் இடத்திற்கு நாடு என்று ஒரு பெயர் உண்டு. நாடும் தன்மையுள்ளவனுக நாடிச்செல்வோன் செல்லும் வழியே நாடியாகும். அந்நாடி பெருநாடி ஒன்ருகவும் அதிற்கிளைத்து எழும்நாடி இரண்டாகவும் அதிற்படர்ச்சியுறும் நாடி பத்தாகவும் அஃதே பல்கிப்பெருகும் நாடி எழுபத்தியீராயிரமாகவும் இருக்கின்றது. அதனுலேயே தூறு படர்ந்து கிடந்தது தூநெறி என்று சொல்லுகின்ருர். நீர் பெருக்கெடுத்துச் செல்லும் ஓர் ஆறு வழி அடைக்கப்பட்டு தூர்ந்துபோகுமானுல் அதன் கிளை நதிகள் எல்லாம் அதிற்கால்கொண்டு எழும் கால்வாய்கள் எல்லாம் தூர்ந்து போவன போன்று பெருநாடி தூறும் காலையில் எல்லாமும் தூர்ந்து போகும். அப்படித் தூர்ந்து போயிருப்பதன் காரணமாகவே இடகலை பின்கலை சுழுமுனை என்னும் நாடியாம் ஆற்றில் சலம் பாய்தல் என்னச் சலனம் செய்யும் வாசி உந்திநிலையில் இருந்து மேல் எழும்பிமுட்டித் திரும்பி நாசிவழியாக ஓடி வீணுகின்றது. அதன் காரணத்தால் ஆற்றில் உள்ள நீர்ப்பெருக்கு செல்லும் வழி அடைப்படுங்கால் பாழாகப் பாய்ந்து வீணுவது போன்று இப்பொழுது வாசி அழிவுறுகின்றது.

அதைத்தடுக்க அடைப்பட்டுக்கிடக்கும் அடைப்பை நீக்க வேண்டும். அப்படி நீக்குவதே யோக சாதன செயற்பாட்டின் நாடிசுத்தியெனப் பெயர்பெறும். அந்த நாடியை தூய்மைப்படுத்துவதற்கு உரிய இடங்கள் இரண்டு அதை மேல்மூலம் என்றும் கீழ்மூலம் என்றும் யோகநூல் சொல்லும். அவ்வாறு நாடிசுத்தி செய்ய மேல்மூலம் கீழ்மூலம் இரண்டினையும் சுத்தம் செய்தால் எல்லா நாடிகளும் சுத்திபெறும். காரணம் ஒரு மரத்தின் வேரில் நீர் பாய்ச்சினுல் மரம் அனைத்திற்கும் சாறும். அதே போன்று நமது உடம்பிற்கு வேராக இருப்பதால் அதற்கு மூலம் என்று பெயர். மரம் மரத்தின் கிளைகள் எல்லாம் அசையலுற்ருலும் வேர் மட்டும் அசையாது. வேரும் அசையின் மரமே பட்டுப்போய்விடும். அவ்வாறு நம் உடம்பில் எல்லா நரம்புகளும் சலனம் செய்ய சலனமின்றி இருக்கின்ற நாடி எதுவோ அதற்கு மூலநாடி என்று பெயர். அது முள்ளந்தண்டின் அடிப்பாகத்திலும் முள்ளந்தண்டின் கொழுந்தின்மேற் பாகத்திலும் இருக்கின்றது. அதில் ஏற்படும் மாசுகளை அகற்றுவது மேல்மூலசுத்தி கீழ்மூலசுத்திகளாகும். அதைவளிநிலைச் சாதன செயற்பாட்டைக் கூறும் நூலாசிரியர்கள் கரிசலாஞ் சாறும் பசு நெய்யும் கொண்டு அண்ணுக்கிற்றடவி மேல் மூலத்தை சுத்தம் செய்யுமாறும், சோற்றுக் கற்ருளைச்சாறும் ஆமநீக்கியின் நெய்யும் கலந்து காய்ச்சி வடித்து கீழ்மூல வாயிலும் செலுத்தி மாசகற்றுமாறு கூறியிருக்கிருர்கள். இதையே "மூலமாம் குளத்திலே முளைத்தெழுந்த கோரையை காலமே எழுந்திருந்து நாலுகட்டு அறுப்பிரேல்" என்று சிவவாக்கியர் கூறுகின்ருர். "நாலு கட்டு அறுப்பீரேல் இதில் நாலு கட்டு என்பது (நாலைக் கட்ட என்பது)

நாலுகட்டு என்ருகியுள்ளது. நாலு என்பது முந்நான்கும் இரு நான்குமாய் நிற்கும் வாசியைக் குறிக்கும். முந்நான்கு இருநான்குமாய் வாசியிருந்தாலும் நான்கே சிறப்புடையது. அதனுல் நாலுகட்ட என்று சொல்லுகின்ருர்.

வாசிக்குக் கால் என்று பெயர். காலிக்கு கால்நடை என்றுபெயர். கால்நடை என்னும் பசு நடைகொள்ளுவதால் சிறப்புடையது. அதனுல் முன்நான்கும் இருநான்குமாக இருந்தாலும் கால் நான்கு கொண்டுள்ளது பசு என்னும் உயிர் சிறப்புடையதாகக் குறிக்கும் பொருட்டு நாலுகட்டு என்று கூறுகின்ருர்.

அவ்வாறு நாலும் கட்டுண்டு நிற்கும் நிலயம் கீழ்மூலம் ஆகையாலும் அந்த இடத்திற்குக் கும்பியென்றும் பெயர் உள்ளதாலும் அவ்விடமே காலியாம் உயிர்ப்பு கட்டுண்டு சலனமின்றி நிற்கும் இடமாகையாலும் அதற்குக் கும்பகம் என்று பெயர். இவ்வாறு தூறு படர்ந்து கிடந்த தூநெறியைச் சுத்தம் செய்து மாறிக்கிடக்கும் வகையை யறிந்து வளிநிலைச் சாதனம் செய்தவர்களே சித்தர்கள். இந்தச் சாதன வகையை யறிபவர்கள் இல்லை. அவ்வகையை யறிந்து விளங்கும் அறிவாளரிடம் என் உள்ளன்பு ஊறிக்கிடக்கும் என்று கூறுவது இச்சாதன சித்திபெற்றவர்கள் யாராயிருந்தாலும் அவர்கள் மூலவர்க்கத்தவர்களே யாகையால் உறவு பாராட்டிப் பேசுகிருர். இதுவே, காணக் கிடைக்காத சூனியத்திற் றேடிக் கண்ட தோட்டமாம் சூனிய சம்பாதனை உரையென்றறிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

(சரியை) சரியையாய் ஞான சாதனம் கூறுதல்

ஆறு தெருவில் அகப்பட்ட சந்தியிற்
சாறு படுவன நான்கு பனையுள
ஏறற் கரியதோர் ஏணியிட் டப்பனை
ஏறலுற் றேன்கடல் ஏழுங் கண்டேனே. ௩ (3)

ஆறு தெருக்கள் ஒன்று கூடக்கூடிய சந்தி ஒன்று உள்ளது. அச்சந்தியினிடத்து போதத்தைத் தரும் பானத்தை ஈயும் பனைகள் நான்குண்டு. ஆனுல் அந்தப் பனை கால்கட்டி ஏற முடியாது. ஏற முடியாத ஏணியிட்டு அந்த பனையின் உச்சிக்கு செல்ல வேண்டும். அப்படிச் சென்று ஏழு கடல்களையும் கண்டேன் என்று கூறுகின்ருர் திருமூலர். இதில் ஆறு தெருவில் அகப்பட்ட சந்தியில் என்று சொல்லுகின்ருர். முச்சந்தி தான் உண்டே தவிர ஆறுசந்தி கிடையாது. தெருக்கள் என்பது மக்களும் மற்றும்

உயிரினங்களும் ஊர்திகளும் செல்லக் கூடிய இடம். அதில் நட்ட நடுவில் பனைமரம் இருக்க முடியாது. அதிலும் நான்கு பனைமரம் இருப்பதாகச் சொல்லுகின்றார். அந்நான்கும் கள் இறக்கக் கூடியது. கள் இறக்கும் பனை சந்திலோ தெருவிலோ இருக்கும்படி விட்டு வைப்பதும் இல்லை. பனைமரம் ஏறுவதற்கு கால் கட்டித் தான் ஏறுவது உண்டே தவிர பனைமரத்தில் ஏணி வைத்து ஏறும் செயற்பாடும் கிடையாது. அதுவும் ஏற முடியாத ஏணி என்று சொல்லுகின்றார். அந்த ஏணி வைத்து அந்த மரத்தில் ஏறினால் ஏழுகடலும் காணக் கிடைக்கும். அப்படி நான் கண்டேன் என்றும் சொல்லுகின்றார். மரம் அல்ல மலையில் ஏறினாலும் கூட ஒரு சமுத்திரத்தின் எல்லையை முற்றிலும் காண முடியாது. இது பனை மரத்தில் ஏறி ஏழு கடலையும் கண்டேன் என்று கூறுவது முற்றிலும் சுத்த சூனியமாகக் காணக் கிடைக்காத ஒன்று. அவ்வாறு காணும் முறையை தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

தெரு என்பது நடைகொள்ளுமிடம். நடை கொள்ள இயக்கம் தருவது கால். கால் என்பது மேலும் கீழுமாக நடை கொள்ளும் வாசி. அந்த வாசியின் நடைக்கு இடமாம் வழித்தடம் ஆறு உண்டு. அந்த ஆறும் அகம் புறம் என்ற ஈருறாக இருக்கும். அந்த ஓராறும் ஈராறும் கூடும் இடமே சந்தி. அதையே ஆறுதெருவில் அகப்பட்ட சந்தியிற் என்று சொல்லுகின்றார். அந்த சந்தியாகிய பிரமரரந்திரம் என்னும் அறுகால் பறவை தொளையே அமிர்ததாரணையைத் தரும் இடமாகும். அமிர்த தாரணையைத் தரும் பனை ஒரு நான்குள்ளது என்பது வாய் கண் செவி மூக்கு ஆகிய விழை பொறி புலப்பாடாகும். அவ்விழை பொறிபுலப்பாடு இணைந்து காணுமிடம் அமிர்த தாரணையைத் தரும் முனை வாயிலாக இருக்கின்றபடியால் சாறுபடுவன நான்கு பனையுள என்று சொல்லுகின்றார். இந்த அமிர்தத்தை பருக விரும்புவதாயின் கால் என்னும் வாசியாம் பஞ்சை நூலாக்க வேண்டும். அப்படி காலை நூலாக்கினால் முற்கூறிய பனை உச்சிக்கு இந்த நூல் ஏணியை வைத்துச் செல்ல முடியும். ஆனால் இந்த ஏணியை அமைப்பது என்பது செயற்கருஞ்செயல். அதற்காக அப்படியொரு ஏணியை அமைக்க முடியாது, என்றும் எண்ண வேண்டம். நான் அமைத்து ஏறியிருக்கின்றேன். அந்த ஏற்றத்தில் ஏழு கடல்களையும் பார்த்திருக்கின்றேன் என்று சொல்வது காலை நூலாக்கி பிரமரரந்திரமாம் கண்ணைத் திறந்து அமிர்தம் உண்ணும் செயல். இச்செயற்பாட்டிற்கு காரணமாக இருப்பது பத்து நாடியில் முதன்மை வாய்ந்த இடகலை பின்கலை சுழிமுனை என்ற மூன்று நாடியுமாகும். அந்த மூன்று நாடியில் சஞ்சாரம் செய்யும் பிராணன் அபானன் சமானன் என்னும் மூன்று வாயுக்களே அமிர்தமாக அமைகின்றது. அவ்வமிர்தத்தைத் தரும் இடத்தில் விழைபொறி புலப்பாடுகள் நான்கும் அமைவுற்று காண்கின்றது. பத்து

நாடியில் மூன்று நாடியும் பத்து வாயுக்களில் மூன்று வாயுக்களும் அமுத கதியாற் அமைய மிகுதியுள்ள ஏழு நாடியும் ஏழு வாயுவுமே ஏழு சமுத்திரங்களாகும். இதையே ஏறற் கரியதோர் ஏணியிட்டப்பனை ஏறலுற்றேன் கடல் ஏழுங் கண்டேனே என்று கூறுகின்ருர். இந்த ஏழு நாடியில் தோன்றும் ஏழு கடல்கள் யாவன. (க) உமிழ்நீர் - நல்லதண்ணீர் கடல் (உ) எச்சில் - கள்ளுக்கடல் (௩) சலி - தயிர் கடல் (ச) கண்ணில் நீர் வறண்டு ஒதுங்கும் பீளை - பாற்கடல் (ரு) சிறுநீர் - உப்புக் கடல் (சு) செவிமலம் ஆகிய குறும்பி - கருப்பஞ் சாற்றுக் கடல் (எ) உப்புக் கசிவு கொள்ளும் வியர்வை - நெய் கடல் இந்த ஏழு வகை கடலுக்கு இடமாய் உள்ள ஒரு மேல்நிலை ஊசித் துளை என்னும் சுழி முனை வாசலாகும். இப்பொழுது இந்த ஏழும் ஏழுமலமாக இருக்கின்றது. கால் கொண்டு கட்டி கனல் கொண்டு மேலேறும் செயற் பாடாகிய ஏறற்கரிய ஏணியிட்டு ஏறினல் முற்கூறிய ஏழும் அமிர்தமயமாய்விடும். இதுவே பரிசுத்தமாகிய ஏழுகடல் ஆகும். இது சுத்த சூனியமாய்த் தோன்றும் வெறும் பாழில் தேடிக்கண்ட தேட்டமாம் சம்பாதனை என்னும் சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

(கிரியை) மங்கலம் சிவமாய் வழங்கும் உருவகம்

**வழுதலை வித்திட பாகல் முளைத்தது**
**புழுதியைத் தோண்டினேன் பூசினை பூத்தது**
**தொழுதுகொண் டோடினர் தோட்டக் குடிகள்**
**முழுதும் பழுத்தது வாழைக் கனியே.** ச (4)

எனக்கு ஒரு தோட்டம் உண்டு. அத்தோட்டத்தில் கத்தரி விதையை விதைத்தேன். முளைத்தது பலா கன்று. அப்பலா கன்றிற்கு புழுதி எடுத்து விட்டேன். அதில் பூசினை பூ பூத்தது. தோட்டத்திலிருந்த குடிகள் எல்லாம் அதற்கு கும்பிடு போட்டுவிட்டு ஓடியே போய் விட்டார்கள். முடிவில் கத்தரி காய்க்கவும் இல்லை. பலா பழுக்கவும் இல்லை. பூசினை காயக்கவும் இல்லை. நன்ருக கனிந்து பழுத்தது வாழைக் கனியாயிற்று.

மூலமந்திரம் சொல்கின்றது இது நம் உலகத்திற் காணக் கிடைக்காத முரண்பாடு உள்ள காட்சியாக இருக்கின்றது. காணக் கிடைக்காத சூனியமாம் வெரும்பாழிலில் தேடிக் காணப்பெறும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

வழுதலை வித்திடப் பாகல் முளைத்தது என்பது வழுதலைக்கு கத்தரி என்று பெயர். கத்தரி வலம் இடமாகவும் இடம் வலமாகவும் மாறிக் காணப்

பெறுவது. அவ்வாறன மாற்றத்தையுடையது இடகலை என்றும் பின்கலை என்றும் சொல்லப் பெறும் நாடி அந்த நாடி யோக சாதன வித்தையால் சிரத்தினை முட்டித் திரும்பும் பொழுது வட்ட வடிவத்தை அடையும். அந்த இடம் அமிர்த கலை பொருந்திய சந்திர மண்டலம் ஆகும். அச்சந்திர மண்டலம் அமிர்தமயமாய் கசிவு கொள்ளப் பெறும் ஒன்றல்லாத பலதலைப்புக்களைக் கொண்டு விளங்குவதால் பலா என்றும் அவ்அமிர்த கலை செழுஞ்சுவை உள்ளதாகையால் அதை பாகு என்றும் சொல்ல முடியாது ஆகையால் பாகல் என்று கூறினர். இதுவே வழுதலை வித்திட பாகல் முளைத்தது. அப்பாகலாகிய பலாக்கன்று வளம்பெறும் பொருட்டு புழுதி தோண்டுதல் ஆதார நிலையத்தில் உள்ள கசடு அறச் செய்தல். அவ்வாறு கசடு அறச் செய்தால் மேன்மண்டலம் சார்ந்த வாசிநிலை கீழ்நோக்காக மூலாதாரத்தைச் சாரும். அம் மூலாதாரமானது அண்ட வடிவத்தைக் கொண்டுள்ளது. அது மலர்ச்சி அடையுங்கால் காணப் பெறும் தோற்றத்தை உருவகப்படுத்தி பூசினை என்று கூறுகின்றனர். பூசினை என்பது சினை என்றால் அண்டம் அதிற்காணும் மலர்ச்சிப் பொழிவு பூ எனப்படுகிறது. ஆகவே அதை பூசினை என்று சொல்லுகின்றனர். பூசினையாகிய மூலாதாரம் அமிர்ததாரணையால் வளம் பெறும் பொழுது முழுதும் பழுத்தது வாழைக் கனியே என்று சொல்லுகின்றனர். வாழையானது மேற்சென்று வளைந்து கீழ்முகமாகி பலமுகம் கொண்ட சீப்புசீப்பாய் நின்று கனிவைத் தருதலால் முழுதும் பழுத்தது வாழைக்கனியே என்று அமிர்ததாரணையைக் கூறுகின்றனர். இந்நிலையில் தொண்ணூற்றி ஆறு தத்துவக் கூட்டங்களும் விலகிவிடும். அதையே தொழுது கொண்டோடினர் தோட்டக்குடிகள் முழுதும் பழுத்தது வாழைக்கனியே என்று கூறப்பெறுகிறது. இதில் உள்ளீடாகக் காணப் பெறும் சிறப்பியல் ஒன்றுண்டு அதையும் காட்டுகின்றோம். தொழுதுக் கொண்டோடினர் தோட்டக் குடிகள் என்று கூறும் போது தோட்டக்குடிகள் என்னும் தத்துவக் கூட்டங்கள் வெருண்டு ஓடவில்லை. தெய்வமாகக் கருதி வணங்கி தெய்வம் இருக்கும் இடத்தில் நாம் இருக்கக் கூடாது என்று கருதி ஒதுக்கம் பெற்று விடுகிறது. குடிகள் அவ்வாறு வணக்கம் செலுத்தி விலகக் கண்ட தோற்றம் எவ்வாறு உள்ளது என ஆராயும் போது வலம் இடமாகவும் இடம் வலமாகவும் காணப்பெறும்.




க - கத்திரி

உ - பாகல் என்னும் பலா

ங - பூசினை பூத்தது

ச - வாழைக் கனி

கத்தரிபோல் மாறலில் காணப்பெறலாய பலாவின் உருவத்தையும் அதற்கு புழுதி தோண்ட பெறுங்கால் பூத்த பூசிணையின் உருவத்தினையும் வாழைக்கனி சீப்புச் சீப்பாய் கனிந்து தோன்றும் உருவத்தையும் இணைத்துப் பார்த்தால் வாழ்நாள் மங்கலமாக தோன்றும் அத்தோற்றம் தெய்வீக உருவாகையால் தொழுது கொண்டோடினர் தோட்டக் குடிகள் என்று சொல்லப் பெறுகிறது. தொழுது கொண்டோடின தோற்றத்தை வரைந்து காட்டுகிறோம்.

மேலே வரைந்து காட்டியது ஆருதார மண்டல நாடி உருவ அமிர்த தாரணை உருவகம். இதுவே சூனியம் என்னும் வெரும் பாழில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

இவ்வுரையில் காணப்பெறும் சிறப்பியல் விதை ஒன்று போட சுரை ஒன்று முளைக்குமா? என்பதில் சுரை ஒன்றும் முளைக்காது. எங்கள் நாட்டில் விதை ஒன்று போட சுளை ஒன்று முளைக்கும் அதோடு மட்டும் அல்ல பூசிணைக்கு புழுதியும் எடுத்து விடுவோம். அது பூக்கும் பொழுது வாழை பழுக்கும் என்பது சிறப்பியல் உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

**ஐயென்னும் வித்தினில் ஆனை விளைப்பதோர்**
**செய்யுண்டு செய்யின் தெளிவறி வாரில்லை**
**மையணி கண்டன் மனம் பெறின் அந்நிலம்**
**பொய்யொன்று மின்றி புகஎளி தாமே.** ரு (5)

சிறப்பியல் வாய்ந்த செய்யொன்று இருக்கின்றது. அந்தச் செய்யின் தெளிவையறிபவர்கள் யாருமில்லை. கறைமிடற்றண்ணல் கருணை பெற்றால் அந்தச் செய்யினிடத்து புகுதல் மிக எளிதாகும். அச்செய்யினுடைய சிறப்பியல் என்னவென்றால் கடுகை விதைத்தால் யானை முளைக்கும். என்று விந்தை திறம்மிகு மெய்மொழி சித்தர் சொல்லுகின்றார். இது எங்ஙனம் தேடிக் காணக் கிடைக்காத சுத்த சூனியம் இதில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

சொல் இறந்த இடமாகிய மூலாதாரத்தை 'ஐ' என்னும் வித்தென்று கூறுகின்றார். ஐ என்பது பற்கடிப்பிற்றோன்றும் ஒலி. பற்கடிப்பும் பகையும் ஒருங்கு சேர்ந்து இருக்குமானால் யாரும் பேசமாட்டார்கள். கடிப்பகை என்பது கடுகிற்குப் பெயர். அதுவும் வெண்கடுகிற்கு பெயர். கடுகு என்றாலே கொடுநிலம் என்பதைக் குறிக்கும். 'கடு' கடுமையையும் 'கு' நிலத்தையும் குறிக்கும். ஆகவே கடுகு என்றால் கொடு நிலம் என்பதாகும். அக்கினி மண்டலமாக இருப்பதாலும் அவ்விடத்தில் கருவி கரணாதிகள்

எல்லாம் முடிவுறுவதாலும் அதை கொடு நிலம் என்ற பெயர்க் குறிப்பையுடைய கடுகு என்று கூறுகின்றார். அதில் வெண்கடுகு என்பது வெள்ளை நிறமாகிய சுழி முனை நாடியின் பந்திப்பு இருக்கின்ற படியால் வெண்கடுகு என்று சொல்லுகிறார். இதுவே 'ஐ' யெனும் வித்து. அந்த இடத்தில் செல்லும் வாசி இடம் வலம் இரண்டும் இல்லாத நடுவாகிய கையைக் கொண்ட யானை போன்று வலிமை மிக்கதாக அமையும் நடுநாடியில் செல்வது யாகையால் அதை ஐ யென்னும் வித்தினில் ஆனை விளைப்பதோர் செய்யென்று கூறுகின்றார். விளைவிப்பது வேறு விளைப்பது வேறு. விளைவிப்பது என்பது வினை பொருளை நாம் விளையும் படி செய்வது. விளைப்பது என்பது நம் செயற்பாட்டில் இல்லாமல் காணப் பெறும் விளைவு. இதில் யானை விளைப்பதோர் செய்யுண்டு என்று கூறுவது சுழி முனை நாடியில் செல்லும் வாசி விளக்கும் செயற்பாட்டைக் காட்டுகின்றது. இவ்வாறு சிறந்த விளைவு ஏற்பட வேண்டும் என்றால் மூலாதாரம் களங்கம் அற்றதாக அமைவுற செய்ய வேண்டும். மூலாதாரம் களங்கம் நிறைந்த இடம். களங்கம் என்றாலே இருள் நிறைந்த உறுப்பு என்ற பெயர்க் காரணத்தை உடைத்தாயிருப்பதைக் குறிக்கும். இதை வைத்திய பரிபாசையில் தாமிரமாகிய செம்பு என்று கூறுவார்கள். செம்பு களங்கமே உருவாகிய ஒரு பொருள். மேலும் இதை வேற்றுமையாகக் கருதும் ஒற்றுமை மொழியில் கார்ப்புரு (Copper) என்று கூறுவர். இதைக் கும்பி குளத்திலே அம்பலமாம் அந்த கூலக்கரு வூரிற் சேருமெத்த என்று ஞானக் கும்மி கூறும். இந்த கசடற நீங்கித் தெளிவுறக் கண்டாலே 'ஐ' யென்னும் வித்தினில் யானை விளைப்பதோர் செய் நமக்கு வசப்படும். ஆகையால் செய்யின் தெளிவாறில்லை என்று கூறுகின்றார். இச் செய்யை தெளிவு படுத்த முற்படும் செயலே கீழ்மூலச் சுத்தியாகும். இந்த சுத்தியை மூலத்திற்கு செம்பை உவமித்துக் கூறும் முறைப்படி செம்பை துலக்கம் பெறச் செய்வது புளியாகையால் மூலம் தெளிவு பெற சுத்தி செய்யும் செயற்பாட்டு இயல்காரணப் பொருளை மூலப்புளி என்று திருவள்ளுவர் கூறுகின்றார். இத்தகைய சிறப்புடைய மூலாதாரத்தைச் சுத்தி செய்தாலன்றி 'ஐ' என்னும் வித்தினில் யானை விளைக்கச் செய்ய முடியாது. இந்த சுத்தி செய்வதற்கு முதலாவதாக மேற்கொள்ளப் பெறுவது இயம நியமாதிகள். அந்த இயம நியமாதிகள் விரித்துக் கூறப்பெறும் பொழுது பத்தும் பத்தும் இருபதாக இருந்தாலும் அதை சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் முறையில் "மையணி கண்டன் மனம் பெறின்" என்று கூறுகின்றார். மையணி கண்டன் மனம் எத்தகையது எனப் பார்க்கும் பொழுது மிக்கார் அமுதுண்ண நஞ்சுண்ட மேலவன் என்று பிரிதோர் இடத்தில் கூறுகின்றபடி உயிரிரக்கம் கொண்டு தன்னைப் பற்றிய சிந்தனையில்லாமல் இறைவன் தேவர்களெல்லாம் அமுதர்களாக தான் நஞ்சுண்டதை காட்டும் மனோ நிலையை நாம் உடையவர்களாகப் பெற

வேண்டும் என்ற குறிப்பில் இயம நியமாதிகளை அடக்கிக் காட்டுகின்றூர். இயம நியமாதிகள் கைவரப் பட்டாலன்றி மேற் கூறிய சாதனையாம் 'ஐ' என்னும் வித்தினில் யானை விளைப்பதோர் செய்யை நம்மதாகப் பெற முடியாது. அப்படிப் பெற்றூல் அந்நிலம் புக எளிதாகும் என்று கீழ் மூல சுத்தியையும் அக் கீழ் மூலச்சுத்திக்கு ஆதார மூலமான இயம நியமாதிகளையும் நான்கு வரியில் பதினாறு சொல்லில் ஐம்பத்தொரு எழுத்தில் மந்திர உபதேசமாக ஆகமக் குறிப்பில் காட்டுகின்றூர் மூலகுரு. இதுவே காணக் கிடைக்காத சுத்த சூனியம் என்னும் சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

**பள்ளச்செய் ஒன்றுண்டு பாழ்ச்செய் இரண்டுள**
**கள்ளச்செய் யங்கே கலந்து கிடந்த**
**துள்ளச்செய்யங்கே உழவுசெய் வார்கட்கு**
**வெள்ளச்செய் யாகி விளைந்தது தானே. ௬ (6)**

நீர்தேங்கி நிற்கும் பள்ளச்செய் ஒன்றுண்டு. நீர் தேங்காமல் திடர் கொண்டு விளங்கும் வெறும் செய்கள் இரண்டுண்டு. இந்த மூன்று செய்களிலும் கள்ளச் செய்யங்கே கலந்து கிடக்கின்றது. அப்படிக் கிடப்பினும் உள்ள அச்செய்யை அவ்விடத்தில் உழவு செய்பவர்களுக்கு கள்ளச் செய்யாக இல்லாமல் வெள்ளச் செய்யாகி விளையும் என்று கூறுகின்றூர். இதில் பள்ளச்செய் நீர் தேக்கம் கொள்ளலால் விளைவு செய்வதற்கு முடியாமல் இருப்பதோடு விதையும் அழுகி போய்விடக் கூடும். திடர்பட்டுக் கிடக்கும் பாழ்ச் செய் இரண்டில் நீர் தேங்காமையால் அதுவும் உழவுக்கு வராது. இவ்வாறாகிய செய்யில் கள்ளச் செய்யும் கலந்து கிடக்கின்றதாம். உள்ள இச் செய்யை உழவு செய்ய முடிந்து உழவு செய்பவர்களுக்கு கொஞ்சம் நஞ்சம் அல்ல வெள்ளமாய் விளையும் என்று சொல்லுகின்றூர் பத்தாம் திருமுறைச் செல்வர்.

இதில் பள்ளச்செய்யையும் பாழ்ச் செய்யையும் உழவு செய்ய முடியாது இருக்கின்றது. இந்த மூன்று செய்கள் தான்.இதை முடிந்து உழவு செய்தால் வெள்ளக்கணக்காய் விளையும் என்பது நடவாத காரியமாகிய சூனியம். இச்சூனியத்தில் தேடிக்காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

பள்ளச் செய் என்பது உட்புகும் வாசியாகிய நடுநிலைத் தானத்தில் உள்ள நாடி. பாழ்ச் செய் இரண்டுள்ளது என்பது வாசியை வீணாக போக்கும் செயற்பாட்டு துடிப்பையுடைய இரண்டு நாடிகள் உள்ளது

இந்த மூன்று செய்கள் தான் எனக் கூறுவது மூவகை நாடியே. இம்மூவகை நாடியிலும் வாசியாகிய நீர்த்தேக்கமும் வாசி வெளிப்போந்து அழிவைத்தரும் பாழ்ச் செய்யாகிய இருவகை நாடியும் ஆகிய மூன்றிலும் கள்ளச் செய்யாக இவைகள் பயன் தராமல் போம்படி செய்யக் கூடிய மனமும் கூடியிருக்கின்றது. அதனுல் இதிற்செய்யும் உழவு பயன்தராமல் போகும்.இதையே பள்ளச்செய் ஒன்றுண்டு பாழ்ச்செய் இரண்டுள கள்ளச்செய் யங்கே கலந்து கிடந்தது என்று கூறுகிறுர். இந்தச் செய்யாகிய நாடியில் வாசியாகிய உழவைச் செய்தால் கள்ளச் செய்யும் வெள்ளச் செய்யாகிவிடும். விளைவதும் வெள்ள வெள்ளமாய் விளையும் என்று கூறுவது வாசியாகிய உழவை குருமுகமாக தெரிந்து கொண்டு செய்வதாம். அப்படிச் செய்தால் அது உழவாக இருக்கும். உழவு என்பது சென்ற அளவே திரும்பி வருவது. அந்த உழவைச் செய்தால் கள்ளச் செய் என்கின்ற மனமானது வெள்ளச் செய்யாக மாறிவிடும். அதில் விளையும்விளைவு போரானந்த வெள்ளமாக இருக்கும். குருமுகமாக சென்ற அளவு திரும்பும் வாசி ஓட்டமாகிய உழவை தெரிந்து கொள்ளாவிட்டால் அந்த உழவுச் சால் கோணமான சாலாகிவிடும். அதில் கள்ளச் செய் கலந்துவிடும். ஆகையால் அது விளைவைத் தராது. அதற்கு உழவு என்றும் பெயரல்ல என்று வாசி வித்தையாம் உபதசத்தை குருமுகமாக தெரிந்து கொள் என்று நமக்கு காட்டப் பெறுவதே காணக்கிடைக்காத சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

சரியை, அருள்வழி செல்லாது அகந்தை கொண்டு
மருள்வழி செல்லும் வகைகண்டிரங்கல்

மூவணை யேறு முழுவது முக்காணி
தாமணி கோலித் தறியுறப் பாய்ந்திடு
நாவணை கோலி நடுவுற செறுவுழார்
காலணை கோலி களறுழு வாரே. எ (7)

உழவு செய்ய வேண்டியது முக்காணிச் செய் அதற்கு மூன்று அணையுளதாயிருக்கின்றது. ஏரும் இருக்கின்றது. வரிசைப்படுத்த வேண்டியதுமில்லை. தாமே வரிசைப் படுத்தி கட்டியும் கரடுமாய்க் காணும் தறியை நெருங்கி நீரைப்பாச்சிடும் நடுநிலைப்பாடு கொண்டுள்ள இதை கோலுதல் செய்து நடுப்பகுதியுளதாய இந்த செய்யை உழவு செய்யாமல் காலால் அணைகோலிக் கொண்டு களர்நிலம் என்னும் உவர் நிலத்தை உழுகின்றுர்களே, என்று விபரீத புத்தியைக் கண்டு கழிவிரக்கங் கொள்ளுகிறுர் திருமூலர் என்னும் வியத்தகு செயற்பாட்டை கண்ட. நாம்

தேடிக் காணாத சூனியத்திற் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை விளக்கம் வருமாறு.

நாம் அணை கோல வேண்டியதில்லை. இடகலை, பின்கலை சுழிமுனை என்ற மூவகை நாடிகள் வாசியாகிய நீரை சிதறலில்லாமல் பாய்ச்சலுறும் படியே யாக்கப் பெற்றிருக்கின்றது. அதுதானே வரிசைப்படுத்திக் கொண்டு பாச்சலுறும் செய்யானது சூக்கும காரண தூலம் என்னும் நமக்குரிமைப் பாடுள்ள இடமாக இருக்கின்றபடியால் அதை முக்காணிச் செய்யென்று கூறுகிறார். இதையே மூவணை ஏரும் உழுவதும் முக்காணி தாமணி கோலித் தறியுறப் பாய்ச்சிடும் என்கின்றார். இச்செயற்பாட்டிற்கு நாவானது மேல்மூல துவாரத்தில் அணையலுறும். அவ்வாறு அணைவுறச் செய்தால் நடுநிலைப்பாடுள்ள மூன்றாகிய வயலை உழவு செய்யலாகும். இவ்வாறு தானே அமைக்கப் பெற்றிருக்கிறது இறைவன் ஆக்கிய நம் சரீரமாகிய நாட்டில் இதை உழவு செய்யாமல் காலால் அணை கோலிக் களர் நிலத்தை உழுகின்றார்களே என உலக மக்கள் தேடும் தேட்டமாகி ஒன்றுக்கும் ஆகாத பாழ் விளைவைக் கண்டு இரங்குகின்றார் திருமூலர்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

**ஏற்றம் இரண்டுள ஏழு துரவுள**
**மூத்தாள் இறைக்க இளையாள் படுத்தநீர்**
**பாத்தியிற் பாயாது பாழ்ப்பாய்ந்து போயிடிற்**
**கூத்தி வளர்த்ததோர் கோழிப்புள் ளாமே.** அ (8)

பண்ணை நிலத்தில் நீர் பாய்ச்சுவதற்கு ஏற்ற மரங்கள் இரண்டு இருக்கின்றன. நீர்பாயத் தக்க தோட்டம் அல்லாத துரவு நிலங்கள் ஏழுஇருக்கின்றன. அவ்வேழிற்கும் முறையே நீர் பாய்ச்சுபவர்கள் இருவர். அந்த இருவரில் மூத்தாளே நீர் இறைக்கின்றவள். இளையாள் பாத்தியில் நீர்பாய்ச்சுபவள். மூத்தவள் இறைக்க நீர்பாய்ச்சுபவளாகிய இளையாள் பாத்தியில் சரியாய் பாய்ச்சாமல் நீரானது வீணானால் அது நாடகக் கணிகையாம் கூத்தி வளர்க்கின்ற கோழிப் பறவையை கலங்க அடிக்கும் குலமகளிரைப் போல ஆகிவிடும். இதில் ஏற்றம் இரண்டைக் கொண்டு நீர்பாய்ச்ச முற்படுபவர்கள் பெண்கள். அவர்கள் நீர்பாய்ச்சுவதில் மூத்தவள் இறைக்கின்றாளாம். இளையவள் நீர் பாய்ச்சுகின்றாளாம். அது சரியாய் பாய்ச்சப் பெறாமல் போனால் அதன் விளைவு எவ்வாறாகும் என்பதை கூத்தி வளர்த்த கோழிப் புள்ளுக்கு ஒப்பிடுகின்றார்.

ஒருவனுக்கு இரு மனைவியர் இருந்தால் ஒருத்திக்கு மூத்தாள் என்றும். மற்றவளுக்கு இளையாள் என்றும் கூறப் பெறுவதுண்டு. அவர்கள் இருவரும் சமம் சமமாக பங்கு போட்டுக் கொண்டு வேலை பார்ப்பார்களே தவிர ஒருத்தி கடினமான வேலையையும் ஒருத்தி எளிமையான வேலையையும் மேற்கொள்ள மாட்டார்கள். இதில் ஒருத்தி கடினமான வேலையையும் ஒருத்தி மிக எளிமையான வேலையையும் மேற்கொள்வதாகக் கூறுவதும் பெண்கள் ஏற்றம் பிடித்து இறைப்பதும் ஏழுதுரவுகளுக்கு பெண்கள் தண்ணீர் பாய்ச்சுவதும் காணக் கிடைக்காத காட்சி. இவ்வாறு நடைபெறுகிறது என்று மூல ஆகம நூலாசிரியர் கூறுகின்றார். இது சூனியம்.இதில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

ஏற்றம் இரண்டு என்பது வலமிடமாகிய இடகலை பின்கலை நாடிகள். அதில் இறைக்கப் பெறும் நீர் என்பது அந்த நாடியில் சஞ்சாரம் செய்யும் கலைகள் அதில் ஈடுபடும் இரண்டு பெண்களில் மூத்தாள் என்பது கீழ் மூலமாகிய குண்டலி சத்தி. இளையாள் என்பது குண்டலி சத்திக்குப் பின்னர் தோன்றிய மேல் மூலமாம் மனோன்மணி சத்தி. கீழ் மூலத்தினின்று மேல் நோக்கி வரும் வாசி செல்ல வேண்டிய இடத்திற்குச் செல்லாமல் பனிரெண்டும் எட்டுமாகி நான்கு வீணாகி விடுகிறது. அவ்வாறு வீணாகச் செய்யாமல் மேல் மூலாதாரச் சத்தி ஆறுதார மண்டலமாம் ஏழு துரவுகளிலும் அவ்வாசியாகிய நீரைப் பாய்ச்சினால் நல்ல விளைவு உண்டாகும், அதையே ஏற்றம் இரண்டுகள ஏழுதுரவுள மூத்தாள் இரைக்க இளையாள் படுத்த நீர் என்று கூறுகின்றார். வாசியாகிய நீர் பாழானால் ஏற்படும் விளைவை நிலை கொள்ளாமல் பறக்கடிக்கப்படும் கோழிப் புள்ளிற்கு ஒப்பிடுகின்றார். இதில் ஆறுதார மண்டலங்களில் நடை கொள்ளும் வாசி வீணாகாமல் மேல் மூலாதார சக்தியின் திருந்திய செயற்பாட்டால் ஆறுதார மண்டலமாம் ஏழு இடங்களிலும் வாசியை நிரப்ப வேண்டும். அப்படிக்கில்லாமல் வீணாக்கினால் கூத்தி வளர்த்ததோர் கோழிப்புள் என்ன கூத்தனுக்கு ஆளாகி வேண்டிவரும் என்று நமக்கு அறிவுறுத்துகின்றார். இதுவே பொருத்த மற்றதெனக் காணப் பெறும் சூனியத்தில் பொருத்தமுற்றதாக தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

பட்டிப் பசுக்கள் இருபத்து நாலுள
குட்டிப் பசுக்களோ ரேழுள ஐந்துள
குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரியினும்
பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்ததே. ௯ (9)

உழைப்பு மாடுகள் இருபத்து நான்கு இருக்கின்றன. குட்டிப்பசுக்கள் ஏழு ஒரு தொகுதியாகவும். ஐந்துஒரு பகுதியாகவும்இருக்கின்றன. குட்டிப்பசுவாகிய கன்று குடங்குடமாகப் பால் சொரிகின்றது. அப்படி குடங்குடமாகப் பால் சொரிந்தாலும் உழைப்பு மாடு என்னும் பட்டிப்பசுவே அந்தணன் என்னும் பார்ப்பனனுக்கு வாய்க்கப் பெற்று இருக்கின்றது என்பது நம் உலகத்தில் காண முடியாத காட்சி. மாடு வளர்ப்பவர்கள் அதன் பயன்துய்க்கும் பொருட்டு அதை வளர்க்கின்ருர்கள். மற்றையோர்களைக் காட்டிலும் பார்ப்பனர்களுக்கு பசுவினிடத்துக் கிடைக்கும் நுகர்பொருள்கள் மிக விருப்பத்தைத்தரக் கூடியது. அதில் ஒரு பார்ப்பனனுக்கு பட்டிப் பசுக்கள் இருபத்து நாலும் குட்டிப் பசுக்கள் என்னும் பசுங்கன்றுகள் ஏழும் மற்றுமோர் ஐந்துமாய் இருக்கின்றன. பசுங்கன்றுகள் குடங் குடமாக பால் சொரிகின்றன. ஆனுல் பால் சொரிகின்ற பசுங்கன்றுகள் அவனுக்கு வாய்க்கவில்லை பால் கறக்காத உழைப்பு மாடுகளே அவனுக்கு வாய்த்திருக்கின்றதென்று குறிப்பிடப் பெறுவது இவ்வுலகத்தில் சூனியம். ஏனெனில் கன்று பால் குடிக்குமே தவிர பால் தராது. இதில் குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரிகின்றது என்று சொல்லுகின்ருர். அது எவ்வாறு என்பதை இச்சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

பட்டிப் பசுக்கள் என்ருல் அன்மதத்துவம் இருபத்தி நான்கினைக் குறிக்கின்றது. ஆன்ம தத்துவம் என்பது பூதம் 5 (ரு), புலன் 5 (ரு), ஞானேந்திரியம் 5 (ரு), கன்மேந்திரியம் 5 (ரு), கரணம் 4 (௪) ஆகிய இருபத்தி நான்கு. இவைகள் பட்டிப்பசுக்கள். பட்டிப்பசு என்ருல் பாடுபட்டு அதன் பயனை நமக்கு ஈந்து நாம் நுகர முடியாத மிகுதிப் பாட்டை தான் தூய்ப்பது காரணமாக வந்ததன் பெயர். பாடுபட்டு ஈதலினுல் பட்டி என்னும் பெயர் வந்தது. அப்பட்டிப் பசுபோன்று இந்த இருபத்தி நான்கு தத்துவங்களும் ஆன்மா தலைப்பட செயல்படும் ஆகவே பட்டிப் பசுவே பனவர்க்கு வாய்த்தது என்று சொல்லுகின்ருர். அன்மா இல்லையானுல் ஏதும் செயல்பட முடியாமல் அழிவெய்து பார்ப்பான் அகமாகிய நம் அகத்தில் மேற்கூறிய தத்துவங்கள் இருபத்து நான்கேயாயினும் இதன் புறமாகவும் அகப்புறமாகவும் தொண்ணூற்ருறு அமைந்துள்ளதாகிய தொண்ணூற்ருறு தத்துவங்களிலும் தலைப்பட்டுக் காணும் ஒரு பொருள் உயிரேயாகும்.

அவ்வுயிரிற்கு நிலைக் காரணமாகிய பௌதீகாரமாகிய சரீரத்தில் செயல்பாடுபெற உழைப்பன அந்த இருபத்து நான்கு தத்துவங்களே ஆகும். அதனுல் ஆன்ம தத்துவம் எனப் பெயர் வந்தது. ஆன்மாஇந்த இருபத்தி நான்கொடு கூடவில்லையென்ருல் மேற்கூறியபடி அழிவு நிலையை எய்தும். அவ்வாறு எய்தாமல் நடைபெறும் படியாக செயலாக்கம் தருவது உயிர்ப்பு அவ்வுயிர்ப்பு வாயுவின் கதியாக இருக்கின்ற படியாலும் அவ்வுயிரால் தான் செயல்படுகின்ற படியாலும் அதற்கு உயிரின் மலர்ச்சியாம் உயிர்ப்பூ என்று பெயர் வந்தது. அவ்வுயிர்ப்பு மூலம் தொடங்கி ஆறு ஆதாரச் சார்பு வரை கூடிய ஏழின் அத்தைக் கொண்டு எழுத்தாகக் காணும் இவ்வெழுத்துக்களையே ஐம்பத்தோர் எழுத்து என்று வகுத்து இலக்கணம் செய்துள்ளார்கள். ஆகையால் இதற்கு வித்தியாதத்துவம் என்று பெயர். வித்தைக்கு கலை என்று ஒரு பெயர் உண்டு. இது ஏழாக பகுப்பாக இருக்கின்ற படியால் வித்தியா தத்துவம் ஏழாயிற்று. இது போதல் வருதல் ஆகிய செயற்பாடு கொண்டு விளங்கும். போதல் சூரியன் வருதல் சந்திரன் இதையே போம் வாயு சிவம் உள்ளே புகுதல் சத்தி என்று சரநூல் கூறுவதோடு போகில் விடம் புகில் அமுதம் என்றும் பொழியும் சந்திரன் அமுதமயமான வெள்ளிய குளிர்ந்த கிரணங்களை உடையவன் அச்சந்திரன் வெள்ளிய குளிர்ந்த கிரணங்களைக் கொண்டு உட்புகுந்து தன் அமுதமயமாகிய கிரணத்தால் சரீரம் முழுதும் வெப்பத்தை நீக்கி உயிர் தளிர்க்கச் செய்யும் செழுமையை அளிக்கின்ருன். சந்திரகலை பாயவில்லை என்ருல் சரீரத்தில் நீர்ப் பசையே அற்றுப் போகும். இச்சந்திரகலை சரீரத்தின் மேற்குத் திசையில் சென்று பாய்கின்றபடியால் மேற்குத் திசைக்கு குடக்கு என்று ஒரு பெயர் உள்ளமையால் குடப்பால் சொரிகின்றது என்று சொல்லுகின்ருர்.

அப்படி குடப்பால் சொரிந்தாலும் பட்டிப்பசு என்னும் உழைப்புமாடே பணவனுகிய சரீரிக்கு வாய்க்கப் பெற்றிருக்கின்றது. அது மேலும் விளக்க வேண்டாமல் மேற் கூறியவையே விளக்கும்.

இதில் மேலும் சிவதத்துவம் ஐந்து எனக் குறிப்பிடுவது சத்த இயைபு உச்சிதத்தை தரும் சத்தியோசாதமும். அக உரம் என்னும் மார்பகமாம் அகோரமும். வாமம் அது இயையும் வாம தேவமாம் கண்ணும் (வாமம் என்பது குறுகலையும் குளியையும் குறிக்கும்) ஈசன் நேயம் என்னும் ஈசானமும் இணை பிரியாத ஒன்றிரண்டாக இரண்டொன்ருக இருப்பதால் சுவாச கதியைத் தரும் மூக்கிற்கு ஈசானம் எனப் பெயர் வந்தது. தான் எனப் புரிந்து கொள்ளலாகிய வெற்றிடமாகிய மேலாம் உடம்பை தற்புரி இடம் தற்புருஷம் என்றும் ஆகிய இந்த ஐந்தின் அமைவு பெற்றுக் காணும் மனேகதிக்கு அஞ்ஞான நீக்கம் தந்து சிவமாக்கிக் கொள்ளும் தன்மை வாய்க்க வேண்டுவன ஆகையால் இதை சிவதத்துவம் ஐந்து என சித்தாந்த

நூல் வகுத்துக் காட்டும் ஆக ஆன்ம தத்துவம் வித்தியா தத்துவம் சிவ தத்துவம் ஆகிய முப்பத்தாறு தத்துவங்களை சித்தாந்த தத்துவம் என்று கூறுவர் (இதில் உட்கிடக்கையாவது வாசி மனத்தைக் கூட மனம் உயிரைக் கூட உயிர் பிரமத்தைக் கூடுதலாகும்) உயிர் என்பது சித்து அது பல்வகை யோனியில் உடம்பெடுத்து உழலாமல் முடிவு நிலை எய்துகின்ற படியால் சித்தாந்தம் என்று பெயர் வந்தது.

இவ்வகைக் கூட்டத்திற்கு யோகம் என்று பெயர். யோகம் என்பது கூடுதல். வியோகம் என்றால் பிரிதல். இவ்வகையான சாதனத்தை குருமுகமாகத் தெரிந்து செய்வதே யோகம். இதில் மேலும் விளக்கங்கள் பலவுண்டு. இதன் விரிவே சைவ சித்தாந்த நூல் ஆகும். இதுவே வெறும் பாழாம் சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரையாகும்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

ஞானம் : சித்தாந்த தத்துவச் சிறப்பியல் விளக்கம்

ஈற்றுப் பசுக்கள் இருபத்து நாலுள
ஊற்றுப் பசுக்கள் ஒருகுடம் பால்போதும்
காற்றுப் பசுக்கள் கறந்துண்ணுங் காலத்து
மாற்றுப் பசுக்கள் வரவறி யோமே. ய (10)

கருவுற்று நிற்கும் ஈற்றுப் பசுக்கள் இருபத்து நான்கு ஆகவுள்ள பால் சுரந்து சொரியும் சுரபிகளின் பால் ஒரு குடமே போதுமானது ஆனால் அதைக் காற்றுப் பசுக்கள் கறந்து குடித்து விடுகின்றன. அப்பொழுது அந்த மாற்றுப் பசுக்களின் வருகை தெரிவதில்லை என்று கூறுவதில் பால் கறவாப்பசு கறக்காமலே சுரக்கும் பசு அப்படிச் சுரந்து சொரிவதைத் திருட்டுத் தனமாய் உண்ணும் பசு என்று வகைப்படுத்தப் படுகிறது. பசு மற்றொரு பசுவினிடத்துப் பால் கறந்துண்பது இல்லாதவொன்று அதை உள்ளதாகக் கூறுவதைக் காணும் சூனிய சம்பாதனையைப் பார்ப்போம்.

இச்சரீரமானது தொண்ணூற்றாறு கருவிக் கூட்டங்களைக் கொண்டதாக விளங்கினாலும் அவைகள் யாவும் மூன்று பகுப்புள்ளடங்கும். அதை ஆன்ம தத்துவம் என்றும் வித்தியா தத்துவம் என்றும் சிவ தத்துவம் என்றும் சித்தாந்த நூல் பிரித்துக் கூறும். அதையே மற்றொரு வகையால் பார்க்குங்கால் காயம் வாக்கு மனம் என்னும் கூறுபாட்டுள் அமைவு பெறும் அதை முக்கரணம் என்று கூறுவர். முக்கரணங்களும் ஒன்றோடொன்று தொடர்புடையவை. அத்தொடர்பு ஆன்மாவால் உண்டாயவையாகையால் எல்லாவற்றையும் பசுபேதமாக

ஆன்ம பேதமாகக் காட்டுகின்றார். ஆன்மா கரந்துரையும் ஈற்றுப் பசுவாக இல்லாவிட்டால் இருபத்து நான்கு தத்துவமும் செயலற்றதாகிவிடும் அவ்விருபத்து நான்கில் வாசி சஞ்சாரமில்லா விட்டால் வாக்கென்ப தொன்றில்லையாய் விடும். வ. என்று கூறப்படுவது வாசியாகிய கால்வாசியும் வெளியும் இல்லையென்றால் ஒலித்தல் என்பது இல்லை. ஒலித்தல் இல்லையேல் வித்தை என்று கூறப்படும் கலையாகிய கல்வியில்லை. ஆகையால் தத்துவக் கூட்டத்தைச் சார்ந்து நிற்கும் வாசிக் கூட்டத்திற்கு வித்தியாதத்துவம் எனப் பெயர் வந்தது. இந்த வித்தியா தத்துவமாய் நிற்கும் வாசி ஊற்றாகச் சுரந்து கொண்டேயிருப்பதால் ஊற்றுப் பசுக்கள் என்று சொல்லுகின்றார் குடம் என்பது கும்பம் கும்பம் என்னும் கும்பியாம் வயிறு ஒன்றேயொன்று தான் அந்த ஒரு குடத்தை நிறைக்காமல் வாசியை கும்பகம் செய்யமால் காற்றாகிய பசுவைக் கறந்துண்டு விடுகின்றன. மாற்றுப் பசுக்கள் என்று வாசியைச் சார்ந்து நிற்கும் அதாவது வித்யாதத்துவத்தைச் சார்ந்து நிற்கும் மனோதத்துவமாகிய சிவ தத்துவத்தைக் கூறுகின்றார். இப்பொழுதுள்ள சரீரதத்துவ நிலையில் தூலத்தில் ஆன்மா இடம் பெற்று ஆன்ம தத்துவமாக விளங்கி நிற்க தூல காரணத்தில் வாசியிடம் பெற்று வித்தியா தத்துவமாய் விளங்கி நிற்கிறது. ஆனால் தூல காரணத்தை ஆட்டிப் படைக்கும் சூக்குமமாகிய மனதில் சிவ தத்துவம் தோன்ற வேண்டும். அதற்குப் பதில் மாயா தத்துவமாகிய காமகுரோதிகள் தோன்றி நின்று அலைக்கழிக்கின்றன. சரீரம் சடமாகையால் அதில் ஆன்மா தோற்றம் தந்து அவலத்தைப் போக்குகின்றது. வித்தியா தத்துவம்ஞானசாதனத்தால் வாசி வித்தையாக மாற்றம் பெறாவிட்டாலும் சரியை கிரியை யாதிகளால் ஓரளவு மாற்றம் பெறப்படுகிறது. இவைகளிரண்டும் கண்ணுற் காணப் பெறும் தூல காரணத்தைத் தொடர்புடையவை. சூக்குமம்கட்புலனுக்கு அகப்படாமல் முற்கூறிய இரண்டு தத்துவத்திற்கும் கேடு சூழ்கின்ற தென்பதையே மாற்றுப் பசுக்கள் வரவறியோமே என்கிறார். இந்தயிடர்பாடுகள் நீங்க ஊற்றுப் பசுக்களின் ஒரு குடம் பாலே போதுமென கும்பக சித்திசெய்த வேண்டுவதைக் கூறுகிறார் தூலத்தில் ஆன்மாவும் காரணத்தில் ஆன்மீகக் கலாவித்தையும் தோன்றி நலம்பெறுகிறது. மனமோ மாயா தத்துவ மூட்டமாகிய அஞ்ஞான இருளில் மூழ்கிக் கிடப்பதால் அதையொழிக்கச் சிவமே தத்துவமாய்த் தோன்ற வேண்டியுள்ளது என்பதே காணக் கிடையாத சூனியத்திற்றேடிக் கண்ட சூனிய சம்பாதனை உரையாம்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

தட்டான் அகத்தில் தலையான மச்சின்மேல்
மொட்டா யெழுந்தது செம்பால் மலர்ந்தது
வட்டம் படவேண்டி வாயை மடித்திட்டுத்
தட்டான் அதனை தகைந்து கொண்டானே. ௰௧ (11)

ஒரு பொற்கொல்லன் வீடு இருக்கின்றது. அவ்வீட்டிற்கு மச்சு உள்ள முகப்பு இருக்கின்றது. அம் முகப்பின் மச்சில் கட்டியான ஒரு வட்டு இருக்கின்றது. அதையே மொட்டு என்று கூறுகின்றார். அவ்வட்டு செம்பால் விளக்கம் பெற்று பொழிவடைகிறது. அதை வாசியில்லாமல் வட்டம் பெற வேண்டி அப்பொற்கொல்லன் வாயை மடித்து நிலைப்படுத்த புகுகின்றான். வாசியின்றி வட்டமாக விலைதகையப் பெற்றுக் கொள்கின்றான். இதில் பொற் கொல்லன் வீட்டில் வட்டாக இருக்கும் கட்டி தங்கமாய்த் தான் இருக்க வேண்டும் வேறு உலோகங்களை முகப்பின் மச்சில் வைத்து பத்திரப்படுத்த மாட்டான். தங்கமானது செம்பால் வட்டமாகாமல் வாசியாகுமே தவிர பொன் ஒலி மலர்ச்சி பெற்று விளங்காது. அவ்வாறு செம்பால் மலர்ச்சி பெற்ற தங்கத்தை வாசியில்லாமல் வட்டம் பெற வேண்டிவாய் மடிப்பாக அமையச் செய்கின்றான். அதை கடையில் விலைப்படுத்தி வாசியில்லாமல் வட்டமாய் விலையையும் பெறுகின்றான் என்பது நடைபெறாத ஒன்று. இவ்வாறு காணப்பெறாத காட்சியாம் சூனியத்தில் தேடிக்காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

உயிருக்கு உயிராய் நிற்கும் முதற்பொருள் தத்துவக் கூட்டங்கள் எதற்கும் தட்டுப்படாமல் இருக்கின்ற படியால் அதற்கு தட்டான் என்று கூறுகின்றார். அத்தட்டானின் அகமாகிய சரீரத்தில் மேல் மூலாதாரமான நிலையம் விளங்கும் இடம் சிரம் ஆகையால் அதை முகப்பு என்றும் மச்சு என்றும் கூறுகின்றார். அவ்விடத்தில் மொட்டாய் எழுந்தது என்று கூறப்பெறுவது மேல் மூலவாசல் அடைப்பு. அது மலர்ச்சியடையாமல் அடைபட்டு இருக்கின்ற படியால் மொட்டாய் யெழுந்தது என்று சொல்லுகின்றார். அம்மொட்டாகிய வட்டு கீழ் மூலமாகிய செம்பின் சேர்க்கையால் தான் மலர வேண்டும். அப்படி மலர்ந்தால் அது வட்டம் பெறும். அப்படி வட்டம் பெறுவதற்கு கீழ்மூலமாகிய செம்பிற் கால் கொண்டெழும் வாசியானது மேல் மூலத்தை முட்ட வேண்டும். அப்படி முட்டுவதற்கு நாக்கை மடித்து மேல்மூலவாசல் வெளிக்கதவாம் பொறிவாயில்களை அடைத்து உயிர்நிலை துளையை திறக்க வேண்டும். அப்படி திறக்கும் பொழுது அகார உகார மகாரமாய் நின்ற கலை வட்ட வடிவமாகி பிறழ் நவமாம் அதுவே வட்டம் பெற வேண்டி வாயை மடித்திட்டு தட்டான் அதனை தகைந்து கொண்டானே என்று பிரணவப்

பொருளாய் விளங்கும் லிங்காகாரத் தோற்றத்தை குறிப்பிடுகின்றார். இதுவே வெறும் வெளியில் தேடிக் காணப் பெறும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

**அரிக்கின்ற நாற்றங்கால் அள்ளற் கழனி**
**திரிக்கின்ற கொட்டகம் சிக்கெனக் கட்டி**
**கரிக்கின்ற நல்லான் கறவையைப் பூட்டில்**
**விரிக்கின்ற வெள்ளரி வித்து வித்தாமே.** ௰௨ (12)

நாற்று வளர்க்கக் கூடிய நாற்றங்காலும் நாற்றை நடக்கூடிய வயலும் இருக்கின்றன. அதில் நாற்றங்கால் நீர்நிரம்பி அரித்து எடுக்கக் கூடிய இயல்புடைத்தாய் இருக்கின்றது. நடவு நட வேண்டிய வயல் சேரு நிரம்பியதாக இருக்கின்றது. அதில் உழைக்கின்ற உழைப்பு மாடுகள் கட்டும் கொட்டமாகிய கொட்டகம் ஒருவழியல்லாமல் மறுவழியும் உடையதாக இருக்கின்றது. அதில் கட்டக் கூடிய உழைப்பு மாடுகள் கறவைப் பசுவாக இருக்கின்றன. நிலத்தில் விதைக்க வேண்டிய விதை நெல் வெள்ளரி விதையாக இருக்கின்றன என்று அறிவாற்றல் விளக்கக் காட்சியை நம்மிடம் சோதிக்கும் சோதனையாளராகிய மகுடாகம ஆசிரியர்ப் பெருந்தகை கூறுகின்றார். இச்சோதனை முற்றிலும் வாதனையைத் தருவதாக காண்கிறது. நாற்றங்கால் சேராக இருக்கும். அதில் நாற்று நாளின் எல்லையாகிய நாள் அத்தின் பறித்து நடக் கூடிய வயல் நீரோடு நிரம்பிய சேர் உள்ளதாக இருக்கும். இதில் உழைக்கும் உழைப்பு மாடு வரும்வழி போம்வழி ஒரு வழியாக இருந்தால் தான் திரிபாகிய மாறுபாடின்றி இருக்கும். மேலும் உழைப்பு மாடு காளையாக இருக்குமேயொழிய கறவைப்பசுவாக இருப்பதில்லை. வித்தாக வித்தும் விதைநெல் நீரில் விழுந்தால் மிதக்காமல் உள் அழுந்தக் கூடியதாக இருக்கும். அப்படி இருந்தால் தான் விதை விளைவைத் தரும். இவ்வாறெல்லாம் இல்லாததோடு விதையும் வெள்ளரி விதையாக மிதக்கின்றதாம் இவ்வாறு இருந்தால் வாழ்வில் செயம் பெறும் விபவ செயமாம் விவசாயி எப்படி விளைவைப் பெறமுடியும் என்ற கேள்வியை மகுடாகம ஆசிரியர் ஆன்மஞான சாதனையாளனாகிய ஆகமப் பயிற்சியாளரிடம் கேட்கின்றார். மேற்கூறிய அனைத்தும் நடைமுறையில் செயல்பட முடியாத சூனியமாக இருக்கின்றன. இவ்வாறான சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

அரிக்கின்ற நாற்றங்கால் என்பது மேல் மூலத்தைக் குறிக்கும் உடம்பில் கீழ்மூலம் நடுமூலம் மேல்மூலம் என்பன முறையே அக்கினி மண்டலம் ஆதித்த மண்டலம் சந்திர மண்டலத்தைக் குறிக்கும். அதில்

ஈண்டு கூறிய அரிக்கின்ற நாற்றங்கால் என்பது செலத்துவத் தானமாகிய மேல் மூலம். அது நீர் நிலைப்பாடு கொண்டு நீர்ப் பிணக்குறும் நிலையமாக இருப்பதால் அதை அரிக்கின்ற நாற்றங்கால் என்று கூறுகின்றார். நாற்றங்கால் என்பது நாளை அத்து எனும் எல்லையாகக் கொண்ட நிலையம். நாளிற்குரிய கோளாகிய சூரியன் சந்திரன் சஞ்சாரம் கொள்ளும் நிலையமாகிய நாசியாக இருக்கின்றது. அதனாலேயே நீர்நிலையமாகிய அந்தத் தானத்தை அரிக்கின்ற நாற்றங்கால் என்று சொல்லுகின்றார். நாற்று இருந்தால் அதைப் பிடுங்கி நடக் கூடிய வயல் ஒன்று வேண்டும். அதை அள்ளல் கழனி என்று சொல்லுகின்றார். அள்ளல் என்பது சேறு. கீழ் மூலமானது மலாசயம். சலாசயம். பக்குவாசயம். ஆமாசயம் ஆகிய அள்ளல் என்னும் சேற்றின் தன்மையுடைய நிலையமாக இருக்கின்றது. அதை கழனி என்று நமக்கு விளக்கிக் கூறும் சிறப்பான சொல்லைக் கொண்டு காட்டுகிறார். அஃது ஐம்பத்தொரு எழுத்தில் தலையாய உயிர்மெய்யாம் 'க' கரம் தோன்றும் இடமாகவும் உட்சுழிக்கச் செய்யும் 'ழ' காரம் தோன்றும் இடமாகவும் முடிவில் முப்பாழும் பாழாய் முடிவில் ஒரு சூனியமாய் என்றபடி ஒன்றாகிய 'க' கரமும் உட்சுழித்துக் காணும் மகரத்தைக் கொண்டு விளங்கும் உயிராகிய அகரத்தை அடிப்படையாகக் கொண்ட தமிழ் சிறப்பெழுத்தாகிய 'ழ' காரத்தை அமைத்து இவ்விரண்டும் கடந்த சூனியம் என்பதைக் குறிக்க 'னி' என்ற எழுத்தை வைத்து 'கழனி' என்று கூறுகின்றார். இதை சொற்குறிப்பாக நோக்கில் ஒன்றும் இல்லாதது என்று ஆகும். இவ்வாறான இடம் முற்கூறியவாறு கும்பியும் குளம்புமாக இருக்கின்றபடியால் இதை அள்ளற் கழனி என்கின்றார். இக்கழனி நடவு செய்யும்நிலமாகமாற அவ்விடத்தில் உள்ள சேறாகிய மலசலங்களை சுத்திகரிக்க வேண்டும். இதுவே கீழ் மூலச் சுத்தி. முற் கூறிய அரிக்கின்ற நாற்றங்கால் செலுத்துவம் என்னும் கப நீரால் சூழப்பெற்றுள்ள தாகையால் அக்கப நீரைஅகற்றச் செய்யும் சாதனமே மேல்மூலச் சுத்தியாகும். இவ்விரண்டையும் செய்தால் நாளின் அத்தாகிய நாத்து என்னும் ரவிமதியைகழனி என்னும் கீழ்மூலமாகிய குண்டலித் தானத்தில் நடலாம். அவ்வாறு நடுவதற்கு முதற் சாதனமாகிய உழவு செய்யும் பசு திரிகின்ற கொட்டமாகிய அகத்தில் இருப்பனவாக கூறுகின்றார். அது பசுவாகிய பிராணன் எதிர்மாறான இரண்டு வழிகளை கொண்டுள்ள கொட்டகத்தில் தன்னேக்காய் சஞ்சரித்து திரிகின்றது. அதை சிக்கெனப் பிடித்து கட்டினால் வசி என்று இருக்கின்ற மாறுபாடுற்ற நிலையை மாறுபாடு அற்ற நிலையாகச் செய்தால் வசி சிவ என்று ஆகும். சிவ என ஆனால் பிராணன் அலைபாயாது ஒருநிலைப்படும். அவ்வாறு ஒரு நிலைப்படும் போது பசுவாகிய பிராணன் அலையாது கோட்டமாகிய கொட்டத்தினின்று நீங்கி பாசத்தலை அகன்று ஏறி இழுக்கும் காளையாக திறம் பெற்றுவிடும். இதையே கரிக்கின்ற நல்லான் கறவையைப் பூட்டில்

என்று கூறுகின்றார். இவ்வாறாகிய உழவுச் செயலைச் செய்யும் சிவசாதனத்தால் விளையும் பயனே விபவ செயமாம் விவசாயம். அவ்விவசாயமே சிவயோக வித்தையென்னும் வித்து இயற் சாதனம். அவ்வித்தே வெள்ளரியாக சிவசாதனம் அல்லாதவர்களுக்கு இருக்கின்றது. வெள்ளரி வித்தை வித்தினால் முளை கொண்டிலங்கும் போது முப்பதாம் நாள் முறுக்கு பிஞ்சு. நாற்பதாம் நாள் நறுக்குப் பிஞ்சு. ஐம்பதாவது நாள் அழிதோட்டம் என்று சொல்லத்தக்கனவான வாலிப முறுக்கும் முனைப்பு உள்ள பருவமாகிய முப்பது வயதையும் நறுக்குப் பிஞ்சென சொல்லத் தக்கனவாம் கண்டனம் உள்ள நாற்பது வயதையும் ஐம்பதாம் நாள் அழிதோட்டம் என்று சொல்லத் தக்கனவான நூறில் ஒரு பாதியாம் ஐம்பது வயதை அடைந்து வரவர பொலிவிழந்து போக தக்கனவாகிய அழிதோட்டம் என்னும் தன்மையுடைய வெள்ளரிப் பழம் என்று அதில் வித்து என்றும் பயனற்றுப் போகும் சரீரத்தில் உள்ள வித்தாம் வெள்ளரி விதை வெள்அரி வித்து வித்தாகுமாம். வெள்ளரி என்பது நீரில் அழுந்தாமல் மிதக்கச் செய்யும் போலியாகிய வித்து. அந்த வித்தாக இல்லாமல் அதை வெள்அரியாக்கி நல்ல அரியாக இந்த வித்து அமையுமாம். அதுவே நன்நெல் இவ்விடத்தில் வித்து போலியை வெள்ளரி என்றும் வித்தக் கூடிய வித்தை அரியாம் நெல்லாகவும் காட்டுகின்றார். இதையே

மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பென்னும் வித்தை வித்து
பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறையென்னும் நீரைப் பாய்ச்சி
தம்மையே நோக்கிக் கண்டு தகவேனும்வேலியிட்டு
செம்மையுள் நிற்பாராகிற் சிவகதி விளையுமன்றே.

என்று அப்பர் சுவாமிகள் கூறுகின்றார். இதன் சுருக்கம் மேல்மூல கீழ் மூல சுத்தி செய்து நேர்மாறான இரண்டு வாசல்களை அடைத்து ரேசக பூரகமாகிய உழவைச் செய்து கும்பகமாகிய கீழ்மூல நிலையத்தில் வாசிப் பயிரை நட்டு அதன் விளைவை அடைய வேண்டும் என்று நமக்கு ஆசிரியர் அறிவுறுத்துகின்றார். இதுவே தேடிக் காண முடியாத சூனியம் என்னும் நிலையத்தில் தேடிக்கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

இடர்கண்டு நீவி எருவிட்டு வித்திக்
கிடர்கண்டு பூட்டி கிளரி முளையை
மிடர்கண்டு சோறட்டு மெள்ள விழுங்கார்
அடர்கண்டு செந்நெல் அறுக்கின்ற வாறே. மசூ (13)

ஒரு நிலத்தில் அறுவடை நடக்கின்றது. அவ் அறுவடையின் பயனைக் கொள்பவர் பலராகி என்னது என்னது என்று சண்டை போட்டுக் கொள்கிறார்கள். அப்படிச் சண்டையிடுபவர்கள் யாரும் விதையில் சோடை போக்கி தெரிந்தெடுத்து ஏர்பூட்டி உழுது களையை நீக்கி விளைவைச் செய்து நீர் அருந்தி உணவை உண்டவர்கள் அல்லர். அப்படிக்கிருக்க விளைவின் பயனை என்னது என்னது என்று ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொள்கின்றார்கள் என்று விளைவது தெரிந்த வித்தகர் கூறுகின்றார். அதில் பயிர் விளைத்தலுக்குரிய உழவும் விதை விதைத்தலும் அதன்பயனை முன் எப்போதும் கொண்டவர்கள் அல்ல ஒருவரும் அப்படிக்கிருக்க என்னது என்னது என்று சண்டை போடுகின்றார்களாம். இதில் நெல் விளைவித்தற்குரிய செயற்பாடுகள் ஏதும் செய்யாமல் சண்டையிட்டுக் கொள்வது என்பது எங்ஙனும் காணக் கிடைக்காத காட்சியாம் சூனியம். அச்சூனியத்தில் தேடிக்கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

முளைக்கப் பெறாத சோடையாம் வித்தினை நீக்கி நல்ல விதையாக பொருக்கி எடுத்து நிலத்திற்கு எருவிட்டு கரடு முரடாயும் களை மண்டியும் இருப்பதை ஏரைப்பூட்டி கீழ் இடரச் செய்தலாம் கிடரைச் செய்து அவ் உழவினால் முளைத்துக் கிடக்கும் களைகளை வேரறப் பெயர்த்து ஆழ உழுது விளை நிலத்தில் வித்திடுவதை இடர்கண்டு நீவி எருவிட்டு வித்திக் கிடர் க்கண்டு பூட்டி கிளரி முளையை என்று குறிப்பிடுகிறார். மிடர் கண்டு சோறட்டு மெள்ள விழுங்கார் என்று உண்ணும் முன் நீர் அருந்தி சமைத்த உணவை வட்டித்து ஒருக்காலும் உண்டவர்கள் அல்ல இப்பொழுது சண்டை போடுகின்றவர்கள் என்பதில் இடர்கண்டு நீவல் என்பது அட்டாங்கத்தில் முதலாவதாகிய இயமம்பத்து. அந்த இயமம் பத்து என்பது

கொல்லான் பொய் கூறான் களவிலான் எண்குணன் நல்லான் னடக்கமுடையான் நடுச்செய்ய வல்லான் பகுத்துண்பான் மாசிலான் கட்காமம் இல்லான் இயமத்திடை நின்றானே என்று கூறும் ஆகம மொழியால் உணர்க. இதுவே இடர்கண்டு நீவல். எருவிட்டு வித்தல் என்பது நியமம் பத்து. அவையாவன. தவம் செபம் சந்தோடம் ஆத்திகம் தானம் சிவன்றன் விரதமே சித்தாந்தக் கேள்வி மகம் சிவபூசை மதிசொல் யீரைந்து நிவம்பல செய்யில் நியமத்தனுமே. என்று கூறுவதைக்

கொண்டு உணர்க. கிடர் கொண்டு பூட்டல் என்பது இயம நியம சாதனப் பயனுல் கிடைக்கும் ஆசனம். அது பற்பலவாக இருப்பினும் அதில் சாலச் சிறந்தது ஒன்பது. கிளரி முளையை என்று கூறுவது பிராணயாமம். அது ஐவகைப்படும். அது சோறடுதல் தாரணையும் மெள்ள விழுங்கல் தியானமும் ஆகும். தியானம் பத்து வகைப் பகுப்புக்குள் அடங்கும். இவ்வொன்பதும் நிறைவு பெற்ருல் தானே அமைவது சமாதி ஐவகையாம். இவ்வொன்பதைக் கூறி சமாதியைக் கூருமல் விட்டது. இவ்வொன்பதும் கைவரப்பெற்ருல் சமாதி தானே அமையும். ஆகையால் அதைக் கூறவில்லை. இவைகள் நெல்விளைவிப்பதில் செயலாற்ற வேண்டிய செயற் கூறுபாடுகளாம். இவைகள் ஒன்றுமில்லாமல் முன் எப்போதுமே இச்சாதன இயலில் ஈடுபடாமலும் இருப்பவர்கள் என் சமயம் மேலானது என்று பலரும் கூறி சண்டையிடுவதை நிபவ செயல் விளைவாம் விவசாயத் தொழிலில் ஈடுபடாமலும் அவ் விவசாயத்தில் விளைந்த விளைவாம் சோற்றை நீர் அருந்தி உண்ணுமலும் உள்ளவர்கள் சண்டை போடுவதை ஒத்தது சமய சாத்திர தருக்கவாத பூசல்கள் என்று குறிப்பிடுகின்ருர். வித்தின் விளைவறிந்த வித்தகர். இதுவே வெறும் வெளியாம் சூனியத்தில் தேடிக்கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

குறிப்புரை:- இடர்கண்டு நீவல் இயமம் என்பது நல்விளைவாம் சிவயோக சாதன விளைவைத் தவிர்க்கும் தீச்செயல்கள். அதை இடர் எனக் கண்டு நீக்குவதே இயமம். அந்த இயமம் கைவரப் பெற்ருல் வாய்க்கும் பயன் எருவிட்டுவித்தல் இயமநியம சாதனத்தால் அமைவு பெறும் ஆசனம் கீழ் இடரச் செய்யும் உழவாம் கிடர்கண்டு பூட்டல் ஆசனம் கைவரப் பெற்ற பின்னர் பிராணயாமம் செய்வது விளைவைத் தடுக்கும் களையை கிளரி முளையைப் போக்குவது மிடர் கண்டு என்பது உணவுண்ணவும் களை நீக்கித் தெளிவைத் தரும் நீர் உண்ணலாகிய பிரத்தியாகாரம் இவைகள் எல்லாம் கைவரபெற்ற பின் அங்கிதாரணை அமிததாரணை பலிக்கப் பெறுவது உணவு உண்ணல் ஆகிய சோறடுதல் போன்றது. அவ்வுணவை குறை போகாமல் விக்காமல் மெல்ல விழுங்குதல் தியானம் போன்றது. இச்சாதன விளைவுகள் ஏதும் இல்லாமல் வெறும் ஏட்டுப் படிப்பாக சமய சாத்திர தருக்கவாத பூசல்கள் புரிவது மெய்யுணர்வு இல்லாதவர்கள் பேசும் தருக்க வாதம் ஆம் என சமயவாதிகளின் இழிவை கூறுவதாகும் இதிற்கண்ட அரும் பொருளுரை.



அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

விளைந்து கிடந்தது மேலைக்கு வித்து
விளைந்து கிடந்தது மேலைக்குக் காதம்
விளைந்து விளைந்து விளைந்து கொள்வார்க்கு
விளைந்து கிடந்தது மேவுமுக் காதமே. மாச (14)

மேல்வரும் காலத்திற்கு பயன்தூய்க்கும் படியாக முத்தி விளைந்து கிடைக்கின்றது. அதற்கு மேலும் பயன்படுத்தப்படும் படியாகவும் விளைந்து கிடைக்கின்றது. இவ்வாறு விளைந்து விளைந்து உள்ளதை விளைந்து கொள்பவர்களுக்கு விளைந்து கிடைக்கின்றது முக்காதத்திற்கு என்பது முக்கால விளைவறி முனிவர் வாக்கு. பயன் தூய்க்கப்படும் வித்து விளைவிக்க வேண்டுமேயொழிய தானாய் விளைந்து கிடக்காது. மேலும், வித்தின் விளைவுகால அளவைக்குட்பட்டதே. அந்த வித்தை விளைவிப்பதும் நாட்கணக்காகிய எல்லைக்குட்பட்டதே. அதனாலேயே நாத்து என்கின்றோம் ஒரு அத்துக்குட்பட்ட நாளில் நடவேண்டியதாக உள்ளமையால் அதற்கு நாத்து என்று பெயர். அந்த நாத்தை விளைவிக்கும் வித்தும் ஒரு காலவரம்பிற்குள் உட்பட்டதே. அதனாலேயே நெருநெல் ஞென்நெல் என்று சென்ற நாளை குறிப்பிட்டுச் சொல்லப் பெறுகிறது. வித்திடுவதற்கு நேரும் காலவரையறைக்குட்பட்டதை நேர்நெல் என்பது நெரு நெல் என்று ஆயிற்று. ஞென்நெல் என்பது நில்நெல் நெல்லின் விளைவுறு தன்மை நின்று போன காலத்தை குறிப்பிடுவதால் நில்நெல் என்பது ஞென் நெல் என்று ஆயிற்று. ஆகவே விளைந்து கிடந்தது மேலைக்கு வித்து என்பதும் அதற்கு மேலும் விளைந்து கிடைக்கின்றது என்பதும் இவ்விருவகைக்கு மேற்கொள்ளவும் விளைந்து கிடைக்கின்றது என்று கூறுவது நடைமுறை நிகழ்ச்சிக்கு மாறானது. நெல்விளைவிப்பதைத் தவிர தானாய் விளையாது. விளைவதும் காலவரம்பை மீறி பயன்படுத்த உதவாது. அப்படிக்கில்லாமல் விளைந்து கிடைக்கின்ற வித்து முக்காலத்திற்கும் ஆகும் என்று கூறுவது காணக் கிடைக்காத சூனியம். அதிற் காணக் கிடைக்கும்படியாக தேடும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

நாம் செய்யும் செயற்பாடாம் கருமத்தால் விளையும் விளைவை வித்தென்று கூறுகின்றார். செய்வது செயல். அச்செயலால் என்ன விளைவு ஏற்படும் என்பது சிந்தித்துக் காணப் பெறாத ஒன்று. சிந்தித்து காணப் பெறவில்லையென்றாலும் அதன்விளைவு ஏற்பட்டே தீரும் அதன் விளைவு முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்என்பது போல் மேல் வரும்காலமாகிய பிற்காலத்தில் தான் அவ்வினைப்பயனை தூய்க்க வேண்டி வரும். வித்திவித்தினால் உடனே பயன்தராது. அதற்கு ஒரு காலம் உண்டு. அதைத்தான் விளைந்து கிடந்தது மேலைக்கு வித்து என்று கூறுகின்றார்.

இதை செயும் சித்தம் என்று தீந்தமிழிலும் தமிழின் திரிபான வடமொழியில் சஞ்சிதம் என்றும் கூறப்பெறும். நாம் இப்பொழுது செய்யும் இருவினைகளின் விளைவே செயும் சித்தமாம் மேலைக்கு வித்தாகின்றது. அந்த இருவினை பயன் துய்க்கலாகும் சமயத்தையே ஆகும் அமயம் என்று நம் தமிழ் கூறும். அதை தமிழின் திரிபாகிய வடமொழியில் ஆகாமியம் என்று கூறுவார்கள். இவ்வாறு விளைந்து விளைந்து நம் செயலால் வந்த வினைப்பயனை நல்லதாய் அமைய தவம் செய்ய வேண்டும். அத்தவத்தால் தீயனவும் நல்லனவாக மாறும். அப்படி தீயன நல்லனவாக மாறினாலும் அத்தீயவை வெல்லும் ஆற்றல் கிடைக்குமே ஒழிய இல்லாமல் செய்ய முடியாது. அவ்வாறு நல்லனவாக பெற உரு தவமே தமிழ்திரிபாகிய வடமொழியில் பிராரப்தம் என்று ஆயிற்று. இதையே விளைந்து விளைந்து விளைந்து கொள்வார்க்கு விளைந்து கிடந்தது மேவுமுக் காதமே என்று கூறுகின்றார். காதம் என்பது செல்லும் வழி. நம்முடைய காலப் போக்காகிய மேற்செல்லும் வழியில் இவைகளை சந்திக்கப் பெறுவதால் காதம் என்று கூறுகிறார். இதில் வினை வலிமையையும் தவவலிமையையும் காட்டுகின்றார். முக்காலம் உணரும் முனிவர் பெருமான். இதுவே நடைமுறை நிகழ்ச்சிக்கு இலக்காகாதது எனப்படும் சூனியத்தில் தேடிக் கண்ட சூனிய சம்பாதனை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

களருழு வார்கள் கருத்தை யறியோங்
களருழு வார்கள் கருதலு மில்லை
களருழு வார்கள் களரின் முளைத்த
வளரின வஞ்சியின் மாய்தலு மாமே. ௰ரு (15)

சூனிய சம்பாதனை சொல்லிய எழுபது பாடலுக்கும் ஒரு தனிப்பெரும் சிறப்புண்டு. அது யாதெனில் பெரியோர்கள் கண்டதைக் கொண்டு காணுததைக் காட்டும் வழிமுறைப்படி சொல்லப்பட்டது அகத்துறைப் பாடல்கள். அகத்துறை யென்றாலே உட்கிடக்கைப் பொருள்கோள் என்று தான் அதன் சொற்றெளிவு அமையப்பெறும் புல்லிய அறிவுடைய மாந்தர்கள் அதை அதற்கு எதிரிடையான செயற்பாட்டைக் காட்டும் பெண்ணின்பமாகவே கருதிவிட்டார்கள். அதற்கு உலகாயதம் என்றும் பெரியோர்கள் சொல்லுவார்கள். அதை தாயுமானார் சொல்லும் பொழுது யாருக்கும் விளங்கும்படியாக விவரித்துக் கூறுகிறார். மின்னனைய பொய்யுடலை நிலையென்று துவங்கும் பாடலில் விரிவாகக் கூறுகின்றார். மௌன குரு வணக்கம் என்ற தலைப்பில் உள்ளது. அதைச் சுருக்கமாகக் கூறும் பொழுது

வல்லவர்பாற் கல்வி மதம்ஆணவம் போக்கும்
அல்லவர்பாற் கல்வி அவைஆக்கும் - நல்லிடத்தில்
யோகம்பயில்வார் உயர்ந்தோர் இழிந்தோர்கள்
போகம்பயில்வார் புரிந்து. என்பதை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

இதை மனத்தகத்துக் கொண்ட சித்த மரபின் முதல்வர் அவ்வகையாக எழுபது பாட்டில் ஓரிடத்தும் கூருமல் விலங்கினங்கள் புல்லினங்கள் செடிகொடி முதலிய தாவர இனங்கள் உழவுத்தொழில் உலகியற்கை விநோதங்கள் இப்படியாக தொகைப்படுத்தி சூனிய சம்பாதனையை அமைந்திருக்கின்ருர். அவ்வமைப்பில் யோக சாதன விளைவை விளைநிலத்திற்கு ஒப்பிட்டுக் கூறும் அகம மந்திரம் பாடல்கள் வருகின்ற இடத்தில் புல்லறிவாளருடைய இழிதகவை காட்டும் விளக்கமாக ஈண்டு கூறப்படும் திருமந்திரம் பாடல் அமைகின்றது.

களருழு வார்கள் கருத்தை யறியோங்
களருழு வார்கள் கருதலு மில்லை
களருழு வார்கள் களரின் முளைத்த
வளரின வஞ்சியின் மாய்தலு மாமே.

உவர்நிலம் உப்பு தான் விளையும். விளைப் பொருள்கள் அதில் ஏதும் விளையாது. அப்படிக்கிருக்க அந்த களர் நிலத்தையே உழுது கொண்டு இருக்கின்ருர்கள். ஏன் அப்படி உழுகின்ருர்கள் என்ற கருத்து நமக்குத் தெரியவில்லை. உழுபவர்களும் ஏன் இதை உழ வேண்டும் என்று நினைத்துப் பார்ப்பதும் இல்லை. அப்படி உப்பு விளையும் பூமியை உழுத விளைவில் விளையும் பொருளாக ஒன்று விளைந்தது. அது நன்ருய் வளர்ந்தது வஞ்சிக் கொடியாய் துவன்றது. துவளுகின்றதே என்று அதற்கு கொழுகொம்பாக நின்றவர்கள் பட்டுப் போய்விட்டார்கள். இது எங்ஙனம் காணக் கிடைக்காத சூனிய விளைவு. களம் என்ருல் சண்டையிட்டு மடியும் இடத்திற்குப் பெயர். அது போன்று விளைபொருட்கள் வீழ்ந்தால் அதை அழிக்கும் செயற்பாடு உடைய உவர் நிலத்திற்கு களர் நிலம் என்று பெயர் வந்தது. அந்த களர்நிலத்தை உழ வேண்டிய அவசியம் ஏதும் இல்லை. அப்படிக்கிருக்க அதை உழுகின்ருர்கள். எதற்காக உழுகின்ருேம் என்பதும் அவர்களுக்குத் தெரியவில்லை. அப்படி உழுகின்ற நிலத்திலும் ஒரு வஞ்சிக் கொடி தோன்றி வளமையுடன் துவள்கின்றது. அந்த துவள்ச்சியை நீக்கும் பொருட்டு ஒரு கொழு கொம்பும் அமைகின்றது. அவ்வஞ்சிக் கொடி துவன்று தழுவிப்படரும் தன்மையால் அக்கொழுகொம்பாகிய மரமும் பட்டுப் போய் விடுகிறது என்னும் காணக்கிடைக்காத வெறும் பாழில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வரமாறு. இதை நமது அப்பர் சுவாமிகள்

எழுது பாவைநல்லார் திரம் விட்டுநான்
தொழுது கொண்டுநின் றேனையும் சூழ்ந்து கொண்டு
உழுத சால்வழியே யுழுவான் பொருட்டு
இழுதை நெஞ்சமி தென்படுகின்றதே

என்ற பாடலும் இந்த திருமந்திர பாடலின் குறிப்பைக் கொண்டதேயாகும். நன்னீர் பாயும் நஞ்சை நிலத்தில் வித்திட்டு விளைவை செய்வதற்கு எதிரிடையாக உவர்நீர்பாயும் நிலத்தில் உயிர்விளைவைத் தரும் வித்தினை வித்துகின்றான் என்பது பெண்பாற் போகத்தைக் குறிக்கின்றது. வளமை பொருந்திய வளரிளம்பிராயத்திற் தோன்றாத இவ்விச்சை எவ்வாறு தோன்றிற்று என்பதை நினைக்காமல் செயல்படுகின்றான் மனிதன் என்பதையே களருழுவார்கள் கருத்தை யறியோம் என்று கூறுகின்றார். அப்படி களர்நிலத்தை உழவிட்டு வித்துபவர்கள் இதன்விளைவு என்னவாம் என்றும் கருதுவதும் இல்லை இதையே களருழுவார்கள் கருதலுமில்லை என்று கூறுகின்றார். அப்படி களர்நிலத்தை உழவு செய்த நிலத்திலும் ஒரு தாவர இனம் வளர்கின்றது. அது எழில் கொஞ்சும் இளமையும் வளமையும் கூடி துவளும் கொடியாம் பெண்பாலாக இருக்கின்றதை அதன் துவட்சியை நீக்க கொழுக்கொம்பாய் ஒரு ஆண்மகன் ஏற்படுகின்றான் அதனைத் தழுவி வளரும் வளரிளவஞ்சி கொடியாளாம் கொழு கொம்பாய் நின்ற ஆண்மகன் மாய்கின்றான் என்பதை களருழுவார்கள் களரின் முளைத்த வளரிள வஞ்சியின் மாய்தலுமாமே என்று கூறுகின்றார். இதுவே காணக்கிடைக்காத சூனியமாம் வெறும் பாழில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை. இதில் சிறப்புரை வருமாறு.

கொடியின் தன்மையுடையவர்களையே கொடியர் என்கின்றோம். கொடியினுடைய இயல் தலைவணங்கி சுற்றிச் சுற்றி வரும். அதற்கு ஒரு கொழு கொம்பு கிடைத்தால் அதை தழுவி நிற்கும். இவ்வாறாய நிலையில் அக்கொடியானது ஆக்கம் பெறும் பொழுது கொழு கொம்பாய் நின்ற மரத்தை அதன் இயற்கைப் படி பருக்க விடாமல் சுற்றி வளைந்து சூழ்ந்து இறுக்கி அதை மாய்க்க ஆரம்பிக்கும். இதுவே கொடியின் இயல்பு. இத்தன்மை வாய்ந்தவர்களைத் தான் கொடியர் என்று கூறுகின்றோம். இதை வளரிள வஞ்சிக்கொடி போல்வார் என்று வருணிக்கப் பெறும் மாதர்களைச் சுட்டி கூறுகின்றார். நன்னீர் நிலத்தில் விளையாமல் உவர்நீர் நிலத்தில் விளையப் பெற்றது எப்படி நல்லதாக இருக்க முடியும். பெண் இச்சையானது வளரிளம் பிராயத்தில் இல்லாமல் நிலை தளர் முதிர்வு காலத்திலும் இல்லாமல் இடைநிலையில் இது எப்படி வந்தது என்பதை பிறிதோர் இடத்தில் நாயனார் விளக்குகின்றார்.

*அன்னையும் அத்தனும் அன்புற்ற தல்லது*
*அன்னையும் அத்தனு மாரறி வாரென்னை*
*அன்னையும் அத்தனும் யானும் உடனிருந்*
*தன்னையும் அத்தனை யான்புரந்தேனே.*

என்ற திருமந்திரப் பாடலை ஆழ்ந்து நோக்கினால் ஈண்டு கூறப்பட்ட களர் நில உழவின் விளக்கம் காணப்பெறும்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

சரியை : யோகசாதன உயர்வை நவின்றது

*கூப்பிடு கொள்ளாக் குறுநரிக் கொட்டகத்*
*தாப்பிடு பாசத்தை யங்கியுள் வைத்திட்டு*
*நாட்பட நின்று நலம்புகுந் தாயிழை*
*ஏற்பட இல்லத் தினிதிருந் தானே.* மசா (16)

ஊளை வாய்நரி ஊளையிட்டழைப்பதைக் கருதாமல் ஊர்க்குட் புகுந்து திருடித் திரியும் குள்ள நரியைக் கொட்டகத்து அகப்படும்படியாய் (கோட்ட அகம் கொட்டகம் வளைத்துப்பிடிக்கும் படியான இடம்) அதுவிரும்பும் புலால் உணவை வேகும்படியாய் நெருப்பினுள் வைத்திட்டு அந்தவாடையில் மயங்கிச் சிக்கி நெருப்பவிந்ததும் உண்ணலாம் என்று எண்ணிக் கிடைகொள்ளச் செய்து நாட்கள் பலகழிந்து நல்ல நாள் வரும் போது பெண்பாலாள் இல்லாளாயமைய வீடுபேறுடையவனாக இனிதே இருக்கின்றான் என்று கூறுவது உலகியற்கையிற் காணக்கிடைக்காத தொன்று. சமிதை நெய் கொண்டு ஓமம் வளர்த்து அக்கினி சாட்சியாய் விவாகம் செய்தல் உலகியற்கை குள்ள நரியைக் கொட்டகத்துள் அடைத்து வைத்து அந்நரி நுகரப்புன்புலாற்றுண்டத்தை நெருப்பிலிட்டு நாட்பார்த்துக் கல்யாணம் செய்து இல்லறம் ஒருவன் நடத்தி இன்புற்றிருக்கின்றான் என்பது எவ்வாறு என்பதை ஒன்றுமற்ற சூனியத்திற் றேடிக்காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

இழிசெயலும் திருட்டுத்தனமும் உடைய குள்ளநரி என மனக்கலங்கம் தரும் ஆசாபாசம் கொண்ட சிந்தையைக் குறிப்பிடுகிறார். அதுவே கூப்பிடு கொள்ளக் குறுநரி. அதை கொட்டகத்து ஆப்பிடும்படி பாசத்தை அங்கியுள் வைத்திடுதல் பிராணாயாமத்தில் ஓங்கார வடிவமுள்ள நடுநாடியிற்ச் சென்று மூலாக்கினியை எழுப்பி அதில் காமாதி துர்க்குணங்கள் அழியக் கண்டு மனம் தன்னியல் குன்றும்படி செய்தல் அவ்வாறு செய்யச் செய்ய மெய்ஞான நலமுண்டாகும். அந்நலத்தால்

வீடுபேறு வாய்க்கும். அதையே நாட்பட நின்று நலம்புகுந்தாயிழை ஏற்பட இல்லத்தினிதிருந்தானே யென்று கூறுகின்ருர். திருமணச் சடங்கு ஞானசாதனச் சரியையே இல்லற வாழ்க்கை ஞான சாதனச் சித்தியாகிய சிவயோக வாழ்க்கையே இதை அருணகிரிநாதர் நேசமலரும் பூவை மாதின் மனமும் போல நேர்மருயுள் காதலுடன் மேவி என்று கூறுகிருர். திருமணச் சடங்கு ஞானசாதன சரியை என்பதற்கு எடுத்துக் காட்டாக சிறிது விளக்கம். யோகசாதனத்திற் ருேன்றும் தசவிதநாதங்களே சங்கநாதமுதலிய மங்கல வாத்திய முழக்கங்கள். ஆருதாரத்தைக் கடந்து செல்லவே அடுக்கு நிலையாம் ஆனிய அரசனையென்னும் ஆனே அரசாணியைக் கடத்தல் மேல்மூலச் சுடர்விளக்கே யானைப் பெருந்திரிச் சுடர் மூலாக்கினியை எழுப்பலே ஓமாக்கினி வளர்த்தல் இச்செயற்பாட்டால் மூலத்தாமரை மலர்தலே நாற்கோண மேடையும் அதில் நான்கு வாயில்களும் தாமரை மலர்தலால் மணம் கமழ்தலே மணவறை என்பதும் அதில் நடைபெறும் செயலைத் திருமணம் என்பது மணங்கமழ மூலத்தாமரை மலர்ந்தால் விளக்கம் பெற்றுத் தோன்றும் இருட்டறை மூலையிருந்த குமரிப் பெண்ணே குண்டலி சத்தியாம் உள்மனு சக்தி அச்சக்தி தோன்றுங்கால் எண்பெருஞ் சித்திகளும் வசப்படலே இந்திரன் திக்காகிய கிழக்கில் முப்பத்து முக்கோடி தேவர்கள் உருவமாக மணப்பொங்கல் வைத்தலும். சங்கநிதி பதுமநிதியென்னத் தாமரை மலரும் மஞ்சள்நீர்க் குடத்தில் இட்டுக் கைக் கொள்ளச் செய்யல் தழற்கடவுளின் திக்காகிய தென்கீழ்திசையில் குடவிளக்கு ஆலத்தீயமைதல் தெற்கில் செங்கோற் கடவுள் கோடி கொடுத்தல் தென்மேற்கில் நீர்ஊதனும் நிருதிபூச் செண்டளித்தல் வருணன் திக்காகிய மேற்கில் மணப்பெண்ணின் தோழி பெண்ணிற்குத் தெருட்சி கொள்ளும் உபசாரம் செய்தல் வடமேற்காம் வாயுவின் திக்கில் மாப்பிள்ளைக்கு விசிறிவீசல் குபேரன் திக்காம் வடக்கில் மாப்பிள்ளைக்குக் கோடிதனம் கோடி முடிச்சுப் பணம் முடிதல் வடகிழக்காம் ஈசானிய திசையில் அம்மியும் குழவியும் அமைத்து அம்மி மிதித்து அருந்ததி காட்டுதல் அம்மி இருள் நிலம் அதில்மேல் மூலஒளி படரச் செய்தலே அச்செயலாகும் இந்நிலையில் பிரமத்தோடு உயிர்ஒன்றுபடலே நாயகன் நாயகியை யணுகி மங்கல நாண் தரித்தல் பிரமஞான சாதனச் சுடரொளி வடிவமே திருமாங்கல்யம் இச்செயலால் கலி அயலாகி விடுவதால் கலியயலான அணஅம் கலியாணம் என்று கூறப் பெறுகிறது இதை விரிவாகச் சொன்னல் திருக்கல்யாணக் கிரியா விளக்கம் என்னும் நூலாகவே அமையும் என்பதால் மிகவும் சுருங்கச் சொல்லலாயிற்று. இதுவே திருமூலர் காட்டிய சூனியத்திற் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரையாம்.



அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

அனற்கதிற் பாற்றும் புனர்ப்பை யுரைத்தது

மலைமேல் மழைபெய்ய மான்கன்று துள்ளக்
குலைமேல் இருந்த கொழுங்கனி வீழ
உலைமேல் இருந்த உறுப்பெனக் கொல்லன்
முலைமேல் அமிர்தம் பொழியவைத் தானே. யஎ (17)

வானம் வழங்கும் மழை துளிகூடச் சேதமாகாமற்பெருக்கெடுக்கும் வண்ணமாக மலைமேல் மழை பெய்கின்றது.அதைக் கண்டு மான் கன்று களித்துத் துள்ளுகின்றது. துள்ளிக் குதிக்கும் செயற்பாட்டால் தாக்கப் பெற்ற செழுமையுள்ள பழம் வீழப் படுகிறது. இவ்வகைச் செழிப்பில் ஒரு கொல்லன் உலையிற் காய்ந்த பொருளை பிள்ளைப் பாலைப் பொழிந்து குளிர வைக்கின்ருன் எனக் கூறப்படுவது இவ்வுலகத்திற் காண முடியாத காட்சி ஆனுல் இப்படிக் காணக் கிடைக்கும் அதிசயவுலகத்தைக் காட்டுகிரேம். இது சூனியமல்ல தேடினுல் காணலாம் என்னும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

மலைக்கு மேரு என்றும் ஒரு பெயருண்டு மேலோங்கி வானளாவி யிருக்கின்றமையால் மேரு எனக் கூறப் பெறுகிறது ரு என்பது ஐந்தைக் குறிக்கும் எண். மண்ணினின்றும் ஐந்தாவதாக இருப்பது வானமண்டலம் ஆகையாலும் அதுமேனிலைத் தானமாக இருக்கின்றபடியாலும் மேரு என்று கூறப்பெறுகிறது. அங்கு இரவிமதி யாதியன சஞ்சாரமும் அச்சஞ்சாரத்தின் விளைவு காரணமாக வானவெளியில் மழைமேகம் கால்கொண்டு பொழியும் விளைவால் அருவி பெருக்கெடுத்தோடும். அத்தன்மை நம் உடம்பில் மேரு என்னும் சிரசையும் அதில் சஞ்சாரம் செய்யும் இரவிமதியாகிய கலையையும் அதன் சேர்க்கையால் பெருநாடிகள் எல்லாம் செயல்படுவதையும் மலைமேல் மழைபெய்து அருவி பெருக்கெடுத்து ஓடுவதைக் காட்டுகிறது.

பெரு நாடிகள் அருவித்தடம். அதில் சஞ்சாரம் செய்யும் உயிர்க் காற்றுகள் அருவி வீழ்ச்சி ஆகவே மலைமேல் மழைபெய்ய என்று சொல்லுகின்ருர். இவ்வாறு மலைமேல் மழைபெய்வதால் அருவி தோன்றும். அருவியினின்று வாரி தோன்றும், வாரியினின்று கிடைத்த பண்டங்களை யெல்லாம் வாரிச்சென்று குண்டுகுழிகளை நிரப்பி குளம் பெருகவும் ஏரியில் நீர்பெருகவும் செய்து கால்கொண்டோடி சமுத்திரத்தில் புக்கும், ஆகையால் அருவி, வாரி, குண்டு, குழி, குளம், ஏரி, சமுத்திரம் ஆகிய நிலையங்களில் செல்லும் தன்மை குறித்து ஆறு என்று பெயர் ஆயது. இவ்வண்ணமாக அருவியாய்த் தலைப்பட்டு ஆருகி நிற்கும் தன்மை மூலம் முதல் ஆக்ஞை வரை உள்ள ஆறு நிலையங்களிலும்

முறையே வாசி நடைபெற்று நிற்கின்றமையை மலைமேல் மழைபெய்ய என்ற சொற் குறிப்பால் காட்டுகின்றார்.

முறையே நடைபெறுவது என்பது மூலத்தில் ஆறு நூறாகவும், அதையடுத்துள்ள மூன்று தலங்களில் ஆறாயிரம் ஆறாயிரமாகவும் அதனை யடுத்துள்ள மூன்று தலங்களில் ஆயிரம் ஆயிரமாக மூவாயிரமாகவும் ஆக ஆறுதலத்தில் சார்பு கொண்டுள்ள ஏழுநிலையங்களிலும் ஓடிப் பாய்ந்து இருபத்தோராயிரத்து அறுநூறாக நிற்கும். இதை மற்றொரு இடத்தில் "ஆறே அருவி அருங்குளம் ஒன்றுண்டு" என்று திருமூலர் குறிப்பிடுகின்றார்.

மூலம் - சுவாதிட்டானம் - மணிபூரகம் - அனற்கதம் - விசுத்தி - ஆஞ்ஞை - நாதாந்தம் - ஆக .

ஈண்டு கூறியவற்றுள் மலைமேல் மழைபெய்ய சொற்றொடர் விளக்கம் கூறினேம். இவ்வாறாக மலைமேல் மழைபெய்யலால் நீர்பாய்ந்த நிலம் செழிப்பன போன்று நம் உடம்பில் உயிர் தளிர்க்கின்றது. அத்தளிரை உண்டு துள்ளும் மான்கன்று போல்மனமானது நிலையற்று துள்ளி விளையாடலுருகின்றது. அத்துள்ளி விளையாடலில் குலைமேல் இருந்த கொழுங்கனி வீழ்வது போன்று மெய் வாய் கண்மூக்குச் செவி ஆகிய ஒரு கொத்து கனிவு கொள்ள வாசியானது பனிரெண்டும் எட்டுமாய் சென்று வீழ்ச்சி பெற்று அழிகின்றது. இதில் ஆறாதாரச் சார்பு நிலையங்களில் வாசி சஞ்சாரம் செய்யும் முன் மார்பகத் தானத்தினின்று கதித்துக் கொதித்து வாசி வெளிப்படுகின்றது. அவ்விடம் ஆறாதாரத்தில் தீயின் கூறாகவும் அமைவு பெற்று வெம்மையை மாறாது பிறப்பிக்கின்ற தன்மையால் அனல் கதித்தலாகிய அனற்கதம்என்ற பெயரையும் பெறுகின்றது இதையே வடநூலார் அனாகதம் என்று சொல்லுவார்கள்.

இந்த செயற்பாட்டை உலையில் இருந்த உறுப்பெனக் கொல்லன் கருதுவதாகக் கூறுகின்றார். இவ்வளவு வெப்பத்தை குளிர்ச்சிப் படுத்த வேண்டியது அவசியம் ஆனகயால் உலைமேல் இருந்த உறுப்பெனக் கொல்லன் முலைமேல் அமிர்தம் பொழிய வைத்தானே என்று மார்பகத் தானத்தினின்று வாசியானது அயராது போக்குவரவாகிய செயற்பாட்டை அமிர்தம் பொழிய வைத்தான் என்று கூறுகின்றார். போதல் சூரியனுடைய செயலாகிய வெம்மை புகுதல் சந்திரனுடைய செயலாகிய தன்மை. அதனுல் காக்கப் பெறும் செயற்பாட்டைத் திருமூலர் இங்கு கூறுகின்றார். சந்திர கலையாக உள்ளே போவது எனவே அமிர்தம் என்றார்.

(புறத்தில் மழைபெய்து ஆறு இடங்களில் நீர் நிரம்புகிறது. அகமாகிய சிரத்தில் வாசியாகிய மழை பெய்து ஆதாரம் ஆறு நிரம்புகிறது.

சொல் என்பது ஐயம், உண்டென்றும் இல்லையென்றும் சொல்லக் காணப்படும் பொருளுக்கு சொல் என்று பெயர் அது உயர்திணை விகுதி பெற்று சொல்லன் என்று சொல்லுகின்றார். இறைவன் இல்லை என்றும் உண்டென்றும் சொல்லப் பெறும் நடுவன். அதனால் அவனைக் கொல்லன் எனக் கூறுகிறார்.)

(உள்ளனும் அல்லன் இலர் அல்லன் எம் மிறை)

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

சித்தாந்தம்புகல் தீர்க்கை விளக்கம்

பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினாற்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாய்ச் சொரியுமே மஅ (18)

ஒரு அந்தணனுடைய இல்லத்தில் நல்ல கறவைப் பசுக்கள் ஐந்து இருக்கின்றன. ஆனால் அவைகளை மேய்ப்பன் இல்லை. அல்லாமலும் அப்பசுக்கள் மிரட்சி கொண்டு திரிகின்றன. அப்பசுவை பயன்துய்க்க வேண்டுமென்றால் மேய்ப்பவனும் வேண்டும். அப்பசுக்களும் குணக்கேடாக மிரண்டு வெறித்து திரியாமல் இருக்கவும் வேண்டும். நன்றாக மேய்ப்பவனும் ஏற்பட்டு அப்பசுவின் குணமும் திரிந்தினால் அந்த அந்தணனுடைய பசு ஐந்தும் பாலாய்ச் சொரியும் என்பது திருமூலர் காட்டும் நடைமுறைக்கு ஒவ்வாத காட்சி = பார்ப்பனனுக்கு பசு மிகவும் இன்றியமையாதது அப்படிக்கிருக்க பால்கரக்கக் கூடிய கறவைப்பசு ஒன்றிரண்டல்ல. ஐந்தை வைத்துக் கொண்டு மேய்ப்பவனும் இல்லாமல் அத வெறித்து திரியும் படியாகவும் யாரும் விட்டு வைத்திருக்க மாட்டார்கள். ஒரு மேய்ப்பவனும், மேய்ப்பவனுக்கு வாய்க்கும் பசு வெறித்து திரியும் குண நீக்கமும் அமையப் பெறுவது அரிதல்ல. அவ்வாறு அமைந்தால் பசுக்கள் ஐந்தும் பாலாகச் சொரியும் என்னும் காணக் கிடையாத நிகழ்ச்சியாம் சூனியத்தில் தேடிக்கிடைக்கின்ற தேட்டமாம் சம்பாதனை உரை வருமாறு.

பார்ப்பான் அகம் என்பது இறைவன் எழுந்தருளியிருக்கும் இல்லமாம் நம் அகமாகிய பதி. அதிலிருக்கும் பாற்பசு ஓசை பரிசம், உருவம், சுவை நாற்றம் என்னும் ஐந்தன்மைத் திறத்தையுடைய பசுவாம் பிராணன். அப்பசு மனமாகிய பாசம் என்னும் குற்றச்சார்பு உடைத்தாதலால் அதன் விளைவால் ஏற்படும் வெறித்தன்மையும் கட்டுக்கடங்காத தன்மையும் பெற்று தம் போக்காய்த் திரிகின்றன. இந்த நிலைமையில் பசுவின் பயன்துய்ப்பது

இயலாத காரியம். அதைத்தான் "பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன" என்கின்றார். இத்தீக்குணம் நீங்க வேண்டுமென்றால் மேய்ப்பவன் ஒருவன் வேண்டும் அவ்வாறு மேய்ப்பவனே கோவைப் பரிபாலிப்பவன் என்னும் கோபாலன் ஆகிய ஆயன். ஆயன் என்னும் இடையனுக்கு முல்லை நிலத் தலைவன் என்றும், அண்டர் என்றும் ஒரு பெயர் உண்டு. முல்லைநிலம் என்பது காடு சார்ந்த நிலம் என்று கூறப்பெறுகிறது. காடு சார்ந்த நிலம் என்பது வெளிநிலமாகிய பூமிப்பரப்பில் காணப்படும் காட்டு நிலம் அல்ல. வெளிநிலமாகிய பூமிப் பரப்பில் காணப்படும் காட்டு நிலம் என்றும் காட்டுநிலமாக நிலைபெற்று விளங்க முடியாது. காடு வெட்டித்தான் நாடாக்குவது ஆகையால் (நாட்டிற்கு மருதநிலம் என்று பெயர்) காட்டு நிலமாக வெளியில் நிரந்தரமாக ஒரு நிலமும் இல்லை. நிரந்தரமாக உள்ள காட்டு நிலத்தையும் அதற்குத் தலைவனாக உள்ள முல்லை நிலத் தலைவனையும் காட்டுவதோடு அவனுக்கு அண்டர் என்ற பெயரும் பொதுவர் என்ற பெயரும் எவ்வாறு வந்துள்ளது என்பதை ஆராய்வோம்.

காட்டு நிலத்திற்கு முல்லைநிலம் என்று பெயர். முல்லைமலர் நெருக்கமும் நெகிழ்ச்சியும் உடையதாக இருக்கும். அத்தன்மை வாய்ந்ததும் அண்டம் என்னும் ஆகாயத்தின் கூறாகவுள்ளதும் அண்டம் என்னும் ஆகாயம் எல்லாமும் அண்ட நிற்கும் பொதுத் தன்மை உடையதாலும் அத்தன்மைக்கு உரிய பொறி செவியாக விளங்குகின்றது. செவியின் உட்புலப்பகுதி அதனிடத்து வந்து அமையும் ஒலிக்கேற்ப நெருக்கமும் நெகிழ்ச்சியும் உடைத்தாய் இருத்தலைக் கொண்டும் செவிப்பொறியானது ஐம்பொறிகளில் வெளியின் தன்மையாகிய ஆகாயக் கூறாக அமைவதாலும் அம்முல்லை நிலமாகிய செவிப்புலன் நுகர் திறங்கொண்ட உயிர்கூறிற்கு முல்லை நிலத்தலைவன் என்றும் அண்டர் என்றும் பொதுவர் என்றும் பெயர் ஏற்பட்டிருக்கின்றது. இதன் விளக்கத்தை ஆறங்க விளக்கம் கூறும் பண்ணிலக்கணச் சூக்கமென்னும் சிட்சையில் விரிவாகக் காணலாம். ஈண்டு கூறப்பட்ட மேய்ப்பானாகிய கோபாலன் செவிப்புலனின் உயிர்க்கூறு தெளிவுபெற செவியில் உபதசம்தரும் ஞானாசிரியனே ஆகும். அந்த ஞானாசிரியனுடைய திருஅருள் பெற்றால் பாசப் படர்ச்சி காரணமாக ஆன்மா அலைவுறும் தன்மை நீங்கும். அது தான் "மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்குவது" மேய்ப்பான் என்ன செய்கின்றான். வெறி எவ்வாறு அடங்குகிறது. பார்ப்பான் பசு ஐந்தும் பாலாய் எவ்வாறு சொரிகின்றது என்பதையும் பார்ப்போம்.

நல்ல மேய்ப்பான் ஒருவன் உண்டானால் அவன் பசுவை காட்டுப்புறத்திற்கு ஓட்டிச் செல்வான். காடு ஒருவரால் வளர்க்கப் படாமல் தாமே வளர்ந்து செழிப்புற்றிருப்பது. சமைக்கப் பெறாமல்

சமைந்துள்ள ஒன்றிற்கு சமயம் என்று பெயர். அச்சமயம் ஒரு வரன்முறைக்குள் இல்லாமல் தன்போக்காய் வளர்ச்சி பெற்று செழிப்புற்றிருக்கும். அவ்வாருன இயலை உடைமையால் ஈண்டு கூறப்படும் காட்டிற்குச் சமயம் என்று பெயர். அச்சமயமே இறைவனுல் சமைவு பெற்று காணப்பெறும் நம் சரீரம். அச்சரீரமாகிய காட்டில் உள்ள பசுவே நாம். நமக்கு பதியாகிய பசுபதியே பார்ப்பான் என்னும் அந்தணன். குரு உபதசத்தால் தத்துவ ஞானம் பெறுதலே பசு மேய்ப்பவனுல் கானகத்தில் சென்று பசு மேய்வன ஆகும். அவ்வாறு மேய்ப்பவன் அக்கரைக் கொண்டு பசுவை பரிபாலிக்க வேண்டித் தன் போக்காய் விளைந்து மண்டிக்கிடக்கும் சமயமாம் கானகத்தை விட்டு பசுவை திருப்பி அப்பசுவினுடைய வெறித்தனம் அடங்கும் படியாக அப்பசுவிற்கு சிறந்த தீவன புற்களை கொண்டுவந்து அப்பசுவிற்கு அருத்துதலே சமய தீர்க்கை பெற்று விசேடத்தை அடைதலாகும். இவ்வாறு பசுவானது சமயம் தீர்ந்து விசேடம் அடைவதால் பால்சுரக்க ஆரம்பிக்கும். சமயம் என்பது திரு ஐந்தெழுத்தை ஓதுவது. அத்திருஐந்தெழுத்தே ஐம்பத்தொரு எழுத்தாகவும் அதன் விரியாகவும் அதனுல் ஏற்படும் களைகாடுகளாகவும் இருக்கின்றன. அது இயற்கையாய் அமைந்துள்ள ஒரு படர்ச்சி விரி. அதில் ஆன்மாவை திளைக்க விட்டுவிடாமல் திருத்தி பதியைச் சாரும் வண்ணம் செயலாற்றுவதே சமயம் தீர்க்கை பெற்று விசேடத்தை அடைதல் அவ்விசேடமாவது திருஐந்தெழுத்தில் விசேடம் ரவிமதியின் கூருகிய சிகாரம் வகாரம் சிறப்புடையது என்று அதுத் தலைப்படும்படியாக திருஐந்தெழுத்தை ஓதுவதாகும். இந்நிலையில் தத்துவ ஞானம் கடந்து ஆன்ம ஞானம் ஏற்படுவதே பசு பாலாய் சொரிய துவங்கும் நிலையாகும், இந்த விசேடம் என்னும் பசும் புல் உணவைக் கொடுத்து பசுவை பால் சுரக்கச் செய்யும் முயற்சியில் பசுவிற்கு ஈகடிக்கச் செய்யும் இடையூறை நீக்கும் பொருட்டு பசுவின் சேணமாகிய மேற்போர்வை அணிவித்து செம்மைப் படுத்துதலே சமயம் தீர்க்கை பெற்று விசேடத்தையும் விசேடமும் தீர்க்கை பெற்று நிர்வாண நிலையில் நிற்கும் பசுவிற்கு கலையை அணிவித்தலே நிர்வாண தீர்க்கை என்னும் நிலையாகும் . இவ்வாறு பார்ப்பான் அகமாகிய அந்தணன் அகத்தில்மேய்பாரும் இன்றி வெறித்து திரிந்த பசுவிற்கு மேய்ப்பானும் உண்டாய் வெறியும் அடங்குதலான நிலையும் ஏற்படும். இவ்வாறு தத்துவ ஞானமும் அது கடந்த ஆன்ம ஞானமும் ஏற்பட்டால் பசு ஐந்தும் பிரம ஞானமாகிய பாலைச் சொரிய ஆரம்பிக்கும். இந்நிலைமைக்கு பசு வாய்ப்புக்குள்ளாகும் பொழுது அப்பசுவின் பாலாகிய அமிர்தம் ஏகமாக பெருக ஆரம்பிக்கும். அவ்அமிர்த ஏகமே அபிசேகம் என்று வடநூலார் கூறுவர். இதையே திருமூலர் பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு என்ற திருமந்திரத்தில் கூறுகின்ருர் இவைகளே சமயம், விசேடம். நிர்வாணம். அமிழ்த ஏகம்

எனப்பெறும் நான்கு நிலைகள் ஆகும். இது நிறைவுபெற்ற நிலையே சமாதி நிலை. ஈண்டு கூறியன சிவயோக சாதன விளைவிற்றுலங்கும் நிகழ்ச்சிக்கு சரியாக இயைக்கப் பெற்ற சரியையும் அச்சரியையால் விளையப் பெறும் நிலைபேற்றின் தன்மையையுடைய கிரியின் இயைவாம் கிரிகையும் ஆகும். இதை இம்மட்டில் நிறுத்திக் கொள்வோம். மேலும் விரிக்கில் சைவ சித்தாந்த பெரு நூலாகவும் யோக ஞான சாதன விளக்க விரியாகவும் அமையும். இதுவே திருமூலர் காட்டிய சூனியத்தில் தேடிக்கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

ஆமாக் கள்ஐந்தோ டரியேறு முப்பதும்
தேமா யிரண்டொடு திப்பிலி யொன்பதும்
தாமாக் குரங்கொளிற் றம்மனத் துள்ளன
மூவாக் கடாவிட மூட்டு கின்றாரே. யகூ (19)

ஆமாக்கள் ஐந்தோடு காட்டுப் பசுக்கள் ஐந்துடன் அரியேறிம் முப்பதும் அரிய காளைகள் ஆகியன கூடலாய இந்த முப்பதும் தேமாயிரண்டொடு திப்பிலி யொன்பதும் தேமா புளிமா இரண்டுடன் சாரம் மிகுந்த ஏழுங் கூடலாகிய ஒன்பதும் தாமாக்கும் குரங்கு கொள்ளிற்று தம்மனத்துள்ளன நாம் ஆக்கியதை நாம் ஏன் உண்ணக்கூடாது எனயெண்ணிய குரங்கு அதேயுண்டு விடாது மூவாக் கடாவிட மூட்டுகின்றாரே. மூன்று பசுக்களை விட்டு அதைத் துரத்துகின்றார்கள் என்னும் செய்யுட் கூற்றிற்குத் தொடர்மொழியுரை.

காட்டுப் பசுக்கள் ஐந்தும் அதனோடாய எருதுகள் இருபத்தைந்தும் ஆகிய முப்பதுளதாயிருக்க அதற்குணவாக்குகிறது ஒரு குரங்கு அவ்வுணவுப் பொருள் தித்திப்பும் புளிப்பும் காரமும் கூடியதாகச் சேர்த்து அதிற்சக்கையேயில்லாத சாரம் மிக்கது ஓர் ஏழையும் ஒன்று படுத்திச் சமையச் செய்கிறது அப்படிச் செய்த குரங்கு நாம் சமைத்ததை நாம் ஏன் உண்ணக் கூடாது என்றெண்ணித் தானேயுண்டு விடுகிறது. இவ்வேடிக்கையைப் பார்த்து மூன்று மாடுகளை யேவி அதைக் கடத்துகின்றார்கள் என்னும் தேடக்கிடைக்காத பொருளைத் தேடும் சம்பாதனை உரையாம் சூனிய சம்பாதனை.

காட்டுப்பசுக்கள் ஐந்தும் அதனோடாகிய எருதுகள் இருபத்தைந்தும் ஆகிய முப்பதில் காட்டுப்பசுக்கள் என்று குறிப்பிடப் பெறுவது பூதம் ஐந்து மற்றையவைகள் ஆன்ம தத்துவம் இருபத்து நாலும் அறிவொன்றும் கூடிய இருபத்தைந்தாம் ஆன் என்றால் பசு மா என்றால் விலங்கு ஆகையால் ஆன்மதத்துவம் இருபத்து நாலும் ஒன்றுங்

கூடியதை அரிஏறு என்று குறிப்பிடுகிருர். இம்முப்பதுங் கூடியது தூலம் மேலும் காரணம் சூக்குமம் என்னும் மூவகையுடம்பில் தூலதத்துவம் (௩௰) 30 மற்றும் (௩௰) 30 -ம் (௩௰௬) 36 -ம் ஆகிய அறுபத்தாறுடனும் பிராணனையும் வாயுவையும் ஆதாரமாய்க் கொண்டு சஞ்சாரம் செய்து ஆன்ம ஞானத்திற்கு ஆக்கம் தேடுவது காரணமாகச் செயல்படுவதாகச் செயற்பாடு கொண்டு ஆன்ம ஞானத்திற்குரியதும் ஆக்கம் தருவதுமாகிய தன்மை நிரம்பிய பிராண அபான சமானனைச் சார்ந்து வாசிதாரணையாற் கிடைக்கும் அமிர்தத்தை வீணுக்குவதைக் குரங்கு பசுக்களுக்கு ஆக்கிய உணவைத் தானேயுண்டு விட்டதாகக் கூறுகிருர். குரங்கு மனம் அது மனிதனைப் போன்று செயல்படுவதாகக் கருதி குறும்புகள் செய்யுமியல்பைக் காட்டவே மனதைக் குரங்கென்றும் மனத்தினுடைய மாறுபாடான செயலால் பொய்மயக் கேற்பட்டுக் கேடுறும் நிலைமையையும் மன மாயையியல் பால் ஏற்படும் அழிசெயல் சீவான்மாவிற்குப் புன்மையைத் தருவதை பசுவுண்ண வேண்டிய வுணவைக் குரங்குண்டு குருவுபதசத்தால் மன மாயை யகற்றி விட்டதென்றுங் கூறிக் குருவுபதசத்தால் மன மாயை யகற்றி ஆன்ம ஞான சாதனம் பெறுவதையும் அச்சாதனம் பிராண அபான சமான மேம்பாட்டு நிலையால் வலிமை பெற்று மனதைத் தாக்குவதையும் மூவாக்கடாவிட மூட்டுகின்ருரே என்றும் கூறுகிருர். இதில் தூலதத்துவம் இழிநிலையடைவது அதற்குரியவுணவைக் குரங்குண்டதாகவும் அந்தக்மனக்குரங்கை அடக்கி வசப்படத்துவதை மூன்று பசுக்களை விட்டுக் கடாவுவதாகவும் குறிப்பிடுகிருர்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

எழுதாத புத்தகத் தேட்டின் பொருளைத்
தெருளாத கன்னி தெளிந்திருந் தோத
மலராத பூவின் மணத்தின் மதுவைப்
பறவாத வண்டு மணமுண்ட வாறே. உ௰ (20)

எழுதாத புத்தகம் ஒன்று இருக்கின்றது. அந்த புத்தக ஏட்டில் உள்ளபொருளை தெருட்சிப் பருவம் அடையாத ஒரு கன்னிப் பெண் (அந்த ஏட்டின் பொருளை) தெளிந்து திருத்தமுற ஓதுகின்ருள். அதுக்கு ஒப்புமை என்னவென்ருல் மலராத அரும்பாக இருக்கின்ற பூவின் மணத்தையும் தேனையும் பறக்கும் தன்மையில்லாத வண்டு மணத்தையும் தேனையும் நுகர்ந்தவாறு என்பது நான்மறைப் பொருள் உணர்ந்து ஆகமம் அருளிச் செய்த மூலகுருவின் மந்திர உபதேசவாக்கு. எழுதுவதற்குத் தான் புத்தகம் என்று பெயர். இத எழுதாமலே புத்தகமாக இருக்கின்றதாம். அப்புத்தகத்தில் உள்ள ஏட்டின் பொருளை ஒரு

பெண்பால் திருத்தமுற ஓதுகின்றாளாம். அவ்வாறு ஓதுகின்றவள் ஒரு கன்னியாம். ஆனால் தெருட்சிப் பருவத்தை அடையாதவளாம். தெருட்சிப்பருவத்தை அடைந்தவளைத் தான் கன்னி என்று கூறுவது இயல்பு. இந்த கன்னி தெருட்சிப் பருவத்தையடையாத கன்னியாம்.இந்நிகழ்ச்சி ஒப்புவமை கூறும் பொழுது அரும்பாகி மலராத ஒரு பூ இருக்கின்றதாம். அந்த பூவில் மணத்தையும் தேனையும் நுகர்கின்றதாம் ஒரு வண்டு. அந்த வண்டு பறவாதவண்டாம். இவ்வாறு கூறுவது எங்ஙனும் காணக் கிடைக்காத காட்சி ஆகிய சூனியம். இதைத் தேடிக் காணப் பெறும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

புத்தகம் ஞானசிரியனது அருள் நோக்கால் புதுமை பெற்று விளங்கும் மனம். அவ்வாறான புத்தகம் பெறுவதற்கு கிடைக்கப் பெற்ற உபதசம் என்னும் பன்னிரண்டு அங்குல பிரமாணமாய் நின்ற வாசி வித்தையை குருவானவர் தமது சிசுவெனக் கருதும் சிசு இயல்வுடைய சிசு இயனுக்கு செவிகொள வாசி ஒலியை எழுப்பிக் காட்டி கூறும் கூற்றே எழுதாக் கேள்வி அவ்எழுதாக் கேள்வி வாசிவித்தையானதால் அச்சாதன இயல் வாசித்ததாகும். இதையே எழுதாத புத்தகத் தேட்டின் பொருளை என்று சொல்லுகின்றார். எழுதாத புத்தகத்தின் ஏட்டின் பொருளான வாசித்தரேடர் ஆகிய வாசி சலனம் மூலாதாரத்தினின்றும் தோன்றப் பெருநிற்கும். அத்தோற்றத்தைத் தரும் இடம் இருட்டறைப் போன்ற ஒளி புகா நிலம். அவ்விருட்டறை மூலையில் இருப்பவை ஒரு பெண்பால் ஆகிய குண்டலி சத்தி. மூல குண்டலியிலிருந்தே வாசி சலனம் தோன்றப் பெறுகிறது. அவ்வாசி சலனத்தின் ஒலியே மாயமயக்கத்தை நீக்கி தெளிவைத் தரவல்லது. அது மூல குண்டலியினின்று தோன்றப் பெறுவதால் தெருளாத கன்னி தெளிந்திருந்து ஓதுகின்றாள் என்று சொல்லப் பெறுகிறது. ஓதுவது என்பது ஓ அது ஓ அது என்று தேடித் திரியும் வேதச் செயற்பாட்டைக் காட்டும் சொல்லாக குறிக்கப் பெறுவதைக் கொண்டு எழுதாத புத்கத்தின் வேதத்தையே குறிப்பிடுவதாகும். அது எவ்வாறான தன்மையுடையதென்றால் பூ மலர்ந்தால் வாடிப் போய்விடும். அதிலுள்ள மணம் காற்றில் கலந்து போய்விடும். அதிலுள்ள தேனும் பறந்துவரும் தேன்வண்டால் பருகப்பெற்று இல்லாமல் போய்விடும். இந்த மலரானது மலரப் போகும் மலராகவும் மணத்தை தந்து கவரும் இயற்கை உடையதாகவும் அதிலிருக்கும் தேனை உண்ணும் வண்டு பறந்து போகாமல் அதிலேயே இருப்பதாகவும் கூறப்பெறுவது "பூவினிற் கந்தம் பொருந்தியவாறு போல் சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது என்று மூல குருநாதர் பிறிதோரிடத்தில் சொல்லியிருப்பதை நோக்கும் பொழுது சலனமற்று நிலை கொள்ளும் வாசியே அரும்பாகிய பூ என்றும் அதிற்றோன்றும் மணம் பரவி அழிந்து விடாமல் நிலைபெற்றிருக்கும்

சிவமணம் என்றும் அந்த மணத்தை நுகரும் வண்டு வாசிமலரையும் சீவனையும் விட்டு அகலாது நிலைகொள்ளும் தன்மையுடைத்தாகி இருப்பதையே மலராத பூவின் மணத்தின் மதுவை பறவாத வண்டு மணமுண்டவாறே என்று கூறுகின்றார். இதில் வண்டானது தேனை உண்டால் மயங்கிவிடும். இந்த வண்டு பிரமரம் என்னும் பிரமமாகிய வண்டாகையால் மணத்தையே நுகர்கின்றது. அது பறந்து செல்வதும் இல்லை என்று நிலைபேற்றை குறிப்பிடுகின்றார். இது யோக சாதனத்தால் பெறும் ஞானதத்துவ விளக்க உரை. இதற்கு சரியை கிரியை சாதன விளக்க உரையையும் காண்போம்.

யோக சாதனத்தால் மெய்ஞான விளைவை பெறுவது என்பது மக்கட் குலத்தவர்களுக்கு எல்லாம் சாதிக்க முடியாது என்பது கருதி ஞான சாதன விளைவிற்கு சரியாக இயைத்த சரியை என்பது ஒரு போலி என்று மயங்கி விட வேண்டாம். கருடனுக்கும் பாம்புக்கும் ஏற்பட்டது பிறப்பினால் ஏற்பட்ட பகையேயொழிய காரண காரியத்தால் ஏற்பட்டதால் அல்ல. கருடனுடைய உருவத்தை மனத்துள் நிலைபெறச் செய்து கருட மந்திரத்தை ஓதி கருடனுடைய செயற்பாட்டைக் காட்டும் வட்டம் இட்டு பாய்ந்து அடித்துச் செல்லும் செயலையும் கூர்ந்து நோக்கும் செயலையும் நஞ்சு பாய்ந்த ஒருவனுக்கு செய்தால் அந்நஞ்சு விலகுவது போன்று சரியை கொள்ளும் இயலைச் செய்தால் கடவுள் தன்மைக்கும் மாயாமல காரியங்களுக்கும் சென்மப்பகை ஆகையால் சரியை மார்க்கத்தை தந்து மாநில மைந்தர்கள் அனைவரும் அருட்பேரு பெறும்படி பேராருளாளர்கள் செய்து உதவியிருக்கின்றார்கள். அதுவே, நாம் இப்பொழுது கையாளப் பெறும் எழுதாக்கிளவியாகிய நான்மறைத் தொகுதியாம் தேவாரம் என்று வழங்கப்பெறும் திருமுறைப் பெருநூல். அதன் சரியா பாத உரை வருமாறு.

எழுதாக் கேள்வி என்றும் எழுதாக் கிழவி என்றும் நமது நான்மறைத் தொகுதிக்கு பெயரிட்டிருக்கிறார்கள் மேலும் வேதங்கள் இறைவனைத் தேடும் தொழிலே தனதாகக் கொண்டு தேடிக் கொண்டே யிருக்கின்ற தென்றும். அப்படிதேடிக் காணும் செயற்பாட்டில் காணமுடியாமல் தேடித்தேடி இளைத்துப் போய்கின்ற தென்றும் திருஐந்தெழுத்து நான் மறை பழுத்தபழமாக தோன்றியுள்ளது என்றும் வேத அங்கங்கள் ஆறு உள்ளதென்றும் நமக்கு வேத இலக்கணத்தை குறிப்பிட்டிருக்கிறார்கள். இதில் மறை எழுதாக் கேள்வி என்பதை பொருள்படுத்தி கூற முனைந்தவர்கள் வேதம் என்பதை எல்லாம் நன்றாக பெருந்தொகுதி தொகுதியாக எழுதியிருப்பதைக் கண்டு பெரு விளக்கம் காண வேண்டி இப்பொழுது தான் எழுதப் பெற்றிருக்கின்றது. இது ஆதியில் செவிவழிச் செய்தியாகவே கேட்டு ஓதப் பெற்று வந்தது என்று எது எதற்கோ

வேதம் என பெயரிட்டுக் கொண்டு ஓதிவருகின்றார்கள். எழுதாக் கேள்வி என்ற சொல்லே பயில்வு + இல் = பைபில் கூறஆஅன் = குர்ஆன் என்று வழங்கி வருகிறது. இது மட்டுமல்ல ரிக்யசூர் சாமம் அதர்வணம் என்னும் நம்மறையாகிய நான்மறைத் தொகுதியும் எழுதப் பெற்று அநேகம் சுலோகங்களைக் கொண்ட பெருநூலாக இருப்பது பற்றி நம்மவர்களும் அதை இது செவிவழிச் செய்தியாகத் தான் இருந்தது. பின்னர் தான் எழுதப்பெற்றது என்று கூறி வருகிறார்கள். இதில் ஏதும் உண்மையில்லை. நான்மறைத் தொகுதி இன்றும் எழுதாக் கிளவியாகவே இருந்து வருகின்றது. அதை அறிய ஆற்றல் இல்லாமல் தடுமாற்றமான நிலை ஏற்பட்டிருக்கின்றது. இத்தடுமாற்றத்தை நீக்கி எழுதாக் கேள்வி என்றும் எழுதாக் கிளவி என்றும் நான்மறை ஆறங்கம் என்றும் இன்னும் பற்பலவாக பெரியோர்கள் வேத விளக்கம் கூறியதற்கு ஒப்ப எல்லா விளக்கங்களும் கொண்டதாக நமது தேவாரத் திருமுறை இருக்கின்றது. அதை உணர்வதற்கு யாக்ய வல்லியம் என்னும் இயக்காயவர்க்க இயம் வேதத்தில் ஆறங்கங்களில் ஒன்றாகிய சிட்சை என்னும் பண்ணிலக்கணச் சூக்கம் இருக்கின்றது. இவற்றைக் கொண்டு தேவாரத்தை நான்மறை ஆறங்கமாகவும் எழுதாக் கேள்வியாகவும் எழுதாக் கிழவியாகவும் வேதத்தை நான்காக வகுத்துரைத்ததை வியாத முனிவர்தான் என்பதையும் உண்மை என்று எடுத்துக்காட்ட தேவாரமாகிய திருமுறைப்பெருநூலிலே எழுதாக் கிளவியாக வகுத்து உரை செய்யப் பெற்றிருக்கின்றது. அதை உலக மக்கள் உணரும் காலமும் உருவாகிக் கொண்டிருக்கிறது, அதை உணரப் பெறுங்காலம் தமிழகத்தின் தெய்வீக மறுமலர்ச்சி காலமாகும். அதற்கு எடுத்துக்காட்டாக நட்டபாடைப் பண்ணின் இலக்கண விளக்கம் தருகிறோம்.

இவ்வாறாய பெரும் சிறப்புள்ள நான்மறை எவ்வாறாக சரியா பாதமாக இருக்கின்றதென்பதை மறைஞான ஞான முனிவராகிய திரு ஞான சம்பந்த பெருமான் அருளிச் செய்த தேவாரப்பண் கண்ணுற் காணப்பெறும் தூலமாகிய சரீரத்தைப் போன்று (௩௨) 32 அவயவங்களைக் கொண்ட சீருள்ளாக அமையும் அமைவில் பண் வகுக்கப் பெற்று அவற்றில் தூலமாகிய எழுத்தும் சீராகிய காரணச் சரீரமும் துலங்க கட் புலனுக்கு காண முடியாத சூக்கும சரீரமாக கட்டளைத் திறங்கள் வகுக்கப் பெற்றுள்ளன. இதில் தூல காரண சரீரமாக எழுத்தாலும் சொற்களாலும் ஆக்கபெற்ற பண்ணில் ஒலிவழி பொருள் கொள்ளும் படியாக பண்ணின் திறம் அமைந்து வருகின்றது. அதில் பிரணவத்தால் கவிக்கப் பெற்ற வேத வேதாந்த சித்தாந்தம் தோன்றுகின்றது. இதை உணரும் பொழுது எழுதும் கிளவி தேவாரப்பண். எழுதாக் கிளவியாக ஒலிவழிப் பொருள் கோடலில் துணை செய்வது ஆறங்கங்களில் ஒன்றாகிய சூக்கம் என்னும் பண்ணிலக்கண விளக்கம். அந்த பண்ணிலக்கணச் சூக்க

விளக்கமானது ஒரு கன்னிப் பெண்ணின் இயலே தனதாகக் கொண்டு விளங்குகிறது. ஆகையால் எழுதாத புத்தகத் தேட்டின் பொருளே தெருளாத கன்னி தெளிந்து திருந்த ஓதுகின்றாள் என்று கூறுகின்றார். எழுதாத புத்தகம் ஞானசிரியன் தனது சிசு இயனுக்கு செவி கொளக் காட்டும் உபதச ஒலி. எழுதாத புத்தகம் உபதச ஒலியாகிய நான்மறை. அந்த எழுதாதப் புத்தகத்தின் ஏட்டின் பொருள் திருமுறைப் பெருநூல் ஆகிய தேவாரம். அது வாய் மலர்ந்து சொல்லாமல் இசைக்கும் செயலால் சொல்மலரின் மணமாக காண்பது நான்மறைத் தொகுதி. அந்நான்மறைத் தொகுதியின் இனிமை சொல்மலரிற் றேன்றும் மதுவாக இருக்கின்றது. இதுவே மலராத பூவின் மணத்தின் மதுவை என்று குறிப்பிடுகின்றார். மது உண்டவன் சொன்னதையே சொல்லுவான் ஆகையால் மதுவிற்கு சொல்விளம்பி என்ற ஒரு பெயர் உண்டு. அவ்வாறு இசையில் சொன்னதையே சொல்லுவது மலரில் மதுவை சாரும் அளியாம் வண்டின் தன்மையை ஒத்து இருப்பதால் இசையில் சொன்னதைச் சொல்லும் ஒலி இயலுக்கு சார் அளி சரளி என்று பெயர் கூறப் பெறுகின்றது. எழுதாக் கிளவியைத் தரும் பண்ணிசையாகிய தேவாரத்திற்கு சரளி பாட வகுக்கப் பெறுமல் இருப்பது இதனுல் தான். தேவாரத்தில் சரளி வரிசை பாடக் கூடாது. மலரின் மதுவை உண்ணுமல் அதிற்றேன்றும் மணத்தை பறவாத வண்டு உண்பதாக இறைவன் அதைவிட்டுப் பிரியாத சாம கானபிரியனுய் சொல்மலரில் மதுவை விட்டு மணத்தை உண்கின்றுன் என்று திருமூலர் பறவாத வண்டு மணமுண்ட வாறே என்று சொல்லுகின்றுர். இதுவே வேத விளக்க சரியா பாத உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

போகின்ற பொய்யும் புகுகின்ற பொய்வித்துங்
கூகின்ற நாவலின் கூழைத் தருங்கனி
ஆகின்ற பைங்கூழ் அவையுண்ணும் ஐவரும்
வேகின்ற கூரைவிருத்திபெற் றுரே. ௨௰௧ (21)

நன்செய்நிலம் நன்ருய் விளைந்து கிடைக்கின்றது. அறுவடை நடக்கின்றது. அதில் கிடைத்த பதரைப் போக்கி நெல்லைக் களஞ்சியத்தில் சேர்க்கின்றார்கள். பதரை போக்கும் பொழுது கருக்காயுடன் போய் விடாமல் கல்லுக்கருக்காய் நெல்லுடன் சேர்ந்து வந்துவிடுகிறது. அதைத்தான் திருமூலர் போகின்ற பொய்யும் புகுகின்ற பொய்வித்தும் என்று கூறுகின்றார். கருக்காய் போய்விட்டது. தானியவிதை போல கல்லுகருக்காயும் தானியத்தோடு சேர்ந்துவிட்டது. அப்படி சேர்ந்திருந்தாலும் அரிசியாக்கி சமைக்கத் தொடங்கும் பொழுது

சாவட்டை அரிசியையும் விலக்கிவிடுவார்கள். அதைத்தான் கூகின்ற நாவலின் என்று சொல்லுகின்றார். நாவலின் நாவிப் புடைத்தலும் கூழ் உருகின்ற கூழுக்கு உதவாதது என்று தள்ளுகின்ற என்பது கூழ் உருகின்றது என்பது கூகின்ற என்று மருவியிருக்கிறது. நாவுதல் தும்பு தூசு கல்லு கருக்காய் முதலியவை விலகும் படியாக ஓங்கிப் புடைக்காமல் நாம்பிப் புடைத்தல். நாவிப்புடைத்தலையே நாம்பிப் புடைத்தல் என்று வழக்கில் சொல்லுகிறார்கள். சளகின் உள்ள அரிசியை ஓங்கிப் புடைத்தல் வாயிற் போட்டு உட்கொள்ள முடியாததை துப்புதல் போன்றது. உட்கொள்ளக் கூடிய பொருளுடன் சேர்ந்து உட்கொள்ள ஒன்றாத புல்லிய பொருளை நாவால் துளாவிதுப்புதல் போன்றது நாவுதல். அப்படி நாவிப் புடைத்துச் சுத்தம் செய்த அரிசியே கூழைத் தரும். கூழ் என்பது அன்னம். அவ்வன்னத்தை உண்பதானால் ஆறிப்பதம் பார்த்து வடிக்க வேண்டும். அதைத்தான் கூழைத் தரும் கனி என்று சொல்கின்றார். அரிசியாக இல்லாமல் குழைந்து கனிவு பெற அமையும் பதம் கூழைத் தருங்கனி ஆகும். இவ்வாறாகச் சாதமும் சமைக்கப் பெறுகிறது. அதற்குள் பொறுமையின்றிஅவசரப்பட்டு சாப்பிடுவதற்காக இருந்த ஐவரும் வெந்தது போதும் முந்தியில் போடு என்று தன்னுடைய துணியில் வாங்கி முடிந்து கொள்ளுகிறார்கள். அதைத்தான் ஆகின்ற பைங்கூழ் அவையுண்ணும் ஐவரும் வேகின்ற கூறை விருத்தி பெற்றாரே. வேகின்ற அன்னத்தை வெந்தது போதும் என்று (கூறை என்பது துணி) அதில் வாங்கி முடிந்து கொள்கிறார்கள் விருத்தி என்பது உண் செய். உண்ணச் செய்வது. அதை உண் செய் விருத்தி என்று கூறுவார்கள். முறையாக ஆறி பதம் பார்த்து வடித்து இலையில் வட்டித்துப் பரிமாறி உண்ண வேண்டியதை இவ்வாறு செய்பவர்கள் உண்டா என்று வியப்படையலாம் அவ்வாறு செய்பவர்கள் உண்டு என்பதை திருமூலர் கூறுகின்றார். உலகில் வழக்காறாக வெந்தது போதும் முந்தியில் போடு என்று சொல்லலும் முந்தியில் போட்ட வேகாத சோறு வடி தண்ணீரை கக்க அது காலிற் சிந்தி வேதனையைத் தர பார்த்தவர்கள் என்னடா இது என்று கேட்க வாய் கொழுப்பு சேலையில் வடிந்தது. சேலைக் கொழுப்பு சிந்தி வடிந்தது என்னும் உலக வழக்காற்றுச் சொல்லை இந்தச் செய்யுள் சூசிப்பிக்கிறது. இது காண முடியாத ஒன்றேயாயினும் காணக்கிடைக்கும் காட்சியாக சூனிய சம்பாதனையில் காட்டுவோம்.

போகின்ற பொய் வசனம், கவனம், தானம், ஆனந்தம், விசற்கம் என்னும் கர்மேந்திரியங்கள் ஐந்து. இவை முறையே வார்த்தை, நடப்பு, செயற்பாடு, மகிழ்ச்சி, மலநீக்கம் என்பனவாகும். புகுகின்ற பொய்வித்து சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் சத்த பரிச ரசரூப கந்தங்களாம். ஆகிய இவைகள் அன்னமயத்தோடு கூடாமல்

ஒதுக்கத்தக்கனவாம். அன்னமயம் என்பது பிராணனைக் கூடிச் சஞ்சாரம் செய்யும் உயிர்க்காற்று. உயிர்க்காற்றை மூலாதாரத்தில் அமைவுறும்படி செய்ததே கூழ்சமைத்தலாகும். கூழ் என்றால் கு+ஊழ் கூழ் என்றாகும். கு என்பது இன்மையை குறிக்கும் ஊழ் என்பது விதியைக் குறிக்கும். ஆகவே கூழ் என்றால் விதிவலியை மாற்றியது என்று பொருள். அச்செயற்பாடாம் பிராணாயாமம் செய்யுங்கால் மூலாக்கினி மூண்டெறிவதே பைங்கூழ் சமைத்தலாகும் அவ்வாறு சமைந்த கூழை ஆறிற் பதம் பார்க்கலாம். ஆறு என்பது மூலாக்கினி சுவாலை என்னும் கனல் தொகுதி அக்கினி மண்டலம் கடந்து ஆதித்த மண்டலம் கடந்து சந்திர மண்டலத்திற் செல்லும் போது ஆறு நிலையை அடையும். அப்பொழுது தான் பதத்தில் பார்க்க முடியும். அதுதான் ஆறினால் பதம் பார்க்கலாம் என்பதே. அவ்வாறு பதம் பார்த்தால் உண்ண வேண்டிய முறைப்படி அன்னம் சமைந்து இருக்கும். வட்டித்து உண்ணலாம். அவ்வாறாக உண்ணப் பெறாமல் வெந்தது போதும் முந்தியில் போடு என்பது ஞான சாதன நிறைவு பெறும் முன்பே ஞான நூற்களை ஓதி உண்மையறியாமல் எல்லாம் வந்தது போல வாய் ஞானம் பேசி உலக மக்களை தன் பிழைப்பிற்காக வசப்படுத்துதல் முற்கூறியவாறு வேகின்ற கூழை விருத்தி பெறுவது தான் என்று அஞ்ஞானிகள் வாய் ஞானமும் நூல் ஞானமும் பேசுவதை நமக்கு எடுத்துக் காட்டுகின்றார் திருமூலர். இது இன்றும் நாம் காண கிடைக்கும் காட்சியாகும். இதுவே இல்லையென கருதும் சூனியத்தில் தேடிக் கிடைக்கும்தேட்டமாக அமையும் சூனிய சம்பாதனை உரையாம்.

இதில் ஆகின்ற பைங்கூழ் அவையுண்ணும் ஐவர் அந்தக்கரணம் நான்கும் அறிவொன்றும் ஆகிய ஐந்து.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

மூங்கி லெழுந்ததோர் வேம்புண்டு வேம்பினிற்
சார்ந்து கிடந்த பனையிலோர் பாம்புண்டு
பாம்பைத் துரந்திட்டு வேம்பிற்றின் பாரின்றி
வேம்பு கிடந்து வெடிக்கின்ற வாறே. உ௰உ (22)

ஒரு வேப்பமரம் இருக்கின்றது. வேப்ப மரத்தின் மீது ஒரு மூங்கில் முளைத்திருக்கின்றது. அதைச் சார்ந்து ஒரு பனைமரமும் இருக்கின்றது. அப்பனை மரத்தில் பாம்பு ஒன்று உண்டு. அந்த பாம்பை துரத்திப் பிடித்து வேம்பை உணவாகக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாமையால் வேம்பு வெடித்துக் கொண்டு கிடக்கின்றது என்று தெய்வீக அதிசயம் கண்ட திருமூலர் சொல்லுகின்றார். ஒரு மரத்தின்மீது ஒரு மரம் முளைப்பது

அதிசயமல்ல. ஆல் அரசு முளைக்கும் அல்லது புல்லுருவி முளைக்கும். அப்படிக்கில்லாமல் ஒன்றன் மீது ஒன்று முளைப்பது காண முடியாத காட்சி. அதுவும் வேம்ப மரத்தின் மீது மூங்கில் முளைத்ததாகச் சொல்லுகின்றுர். மூங்கில் ஒட்டுண்ணி மரமும் அல்ல. அது அல்லாமலும் அதைச் சார்ந்து ஒரு பனை இருக்கின்றதாம். அதில் பாம்பும் இருக்கின்றதாம். அந்த பாம்பை துரத்திப் பிடித்து வேம்பை உண்ண வேண்டுமாம் அப்படி உண்ணுமையினுல் வேம்பு வெடித்துக் கிடக்கின்றது என்று சொல்லுகின்றுர். இதில் வேம்பில் மூங்கில் மரம் முளைப்பதும் அதைச் சார்ந்து ஒரு பனை நிற்பது வலையில் வசித்து நிலத்திற்றிரியும் பாம்பு கிளைகள் ஒன்று இல்லாமல் நெடிதே வளரும் பனையில் இருக்கின்றது என்று சொல்லுவதும் பயத்தினுல் நடுக்கத்தை விளைவிக்கும் பாம்பைத் துரத்திப் பிடிப்பதும் அப்படி பிடித்து வேம்பை தின்ன வேண்டும் என்பதும் கொஞ்சமும் ஒத்து வராத இயற்கை தன்மையுடையதாம். வேம்பை யாரும் உண்ண மாட்டார்கள். ஆகையால் இது முழுதும் சுத்த சூனியமேயாகும். அச் சூனியத்தில் தேடிக்கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

வேம்பு என்பது வெம்மையிற்றளிர்க்கும் மரம். அம்மரத்தின் பூ தீப்பொறி போன்று காணும் இயல்புடையது. அதனுலேயே அம்மரத்திற்கு வேம்பூ மரம் என்று பெயர். வேம்பூவை உடையதாக உள்ள மரம் நெருப்பு மயமாகத்தான் இருக்க வேண்டும். அவ்வியல் உடையது அக்னி மண்டலமாகிய கீழ்மூலாதாரம். அந்த மூலாதாரத்தினின்று மேற்சென்று எழும்பிக் காண்பது ஆகிய தண்டத்தை மூங்கிலெழுந்ததோர் வேம்புண்டு என்று கூறுகின்றுர். அத்தண்டமே பிரமதண்டம் என்னும் முள்ளந்தண்டு. வேம்பூவாகிய மரத்தில் கால்கொண்டு எழும்பி நிற்பது அதுவும் அக்னிமயமாகத் தானே இருக்க முடியும். அதனுலேயே உராய்வு கொண்டால் தீப்பற்றி எரியும் மூங்கில் என்று சொல்லுகின்றுர். மேலும் மூங்கில் என்ற சொல்லுக்கு வாய் அடைப்புள்ள பொருள் என்று பெயர். பேச்சின்றி வாய் அடைப்புள்ள ஒருவனை (மூங்கை) என்று சொல்லுகின்றேும். அதுபோன்று வாயடைத்துள்ள தன்மை உள்ளதால் அம்மரத்திற்கு மூங்கில் என்று பெயர். மூங்கில் மூண்டு எரியும் தன்மையுடையது. அதே போன்று பிரம தண்டமாகிய முள்ளந்தண்டும் வாசியின் உராய்வால் தீசுவாலையை உண்டாக்கும் தன்மையை உயைடது. அத்தன்மையுடைய மூங்கிலாகிய முள்ளந்தண்டைச் சார்பு கொண்டு நிற்கும் அதை சார்ந்து நிற்கும் பனையென்று ஒரு மெய்பாடு கொண்டு எழுந்து விரிந்து காணும் பனையென்ன முள்ளந்தண்டின் தலைப்பிற்காணும் சிரத்தினைக் கூறுகின்றுர். இவற்றையே மூங்கிலெழுந்ததோர் வேம்புண்டு அதைச் சார்ந்து கிடந்த பனை என்று சொல்லுகின்றுர். பனை சலசலப்பு ஓசையை உடையது.

உடல் உறுப்புக்களில் சலசலப்பு ஓசையை உடையது சிரமே ஆகும். ஆகையால் அதைப் பனையென்று சொல்லுகின்றார். அந்தப் பனையில் ஒரு பாம்புண்டு என்பதும் வலையினின்று புறப்பட்டு சீத்காரத்துடன் வெளிச் செல்லும் பாம்பு போன்று நாசித் தொளையினின்று வெளிச் செல்லும் வாசியை சார்ந்து கிடந்த பனையிலோர் பாம்புண்டு என்று சொல்லுகின்றார் பாம்பைத் துரந்திட்டு வேம்பில் திண்பது என்று சொல்வது வாசியை ஓடாமல் பிடித்து நிறுத்தி அதை நெருப்புக் கக்கும் பூவையுடைய வேம்பு என்னும் மூலத்தில் பாகம் செய்து உண்பதாம். வாசி தாரணையை இவ்வாறு கூறுகின்றார். வேம்பூவையுடைய மரம் அதற்குரிய சாந்தி முறை செய்யாமல் இருந்தால் வெடிப்புக் கொண்டு போகும் என்று சொல்லுவது பாம்பைத் துரந்திட்டுந்தீம் வேம்பிற் றின்பாரின்றி இருந்தால் காணப்படும் செயலேயாகும். இது ஒவ்வாத நிலை. சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

*பத்துப் பரும்புலி யானை பதினைந்து*
*வித்தகர் ஐவர் விநோதகர் ஈரெண்மர்*
*அத்தகு மூவர் அறுவர் மருத்துவர்*
*அத்தலை ஐவர் அமர்ந்து நின்றாரே* உயஈ (23)

பேருருவங்கொண்ட புலிபத்தும் பதினைந்து யானையும் வித்தை காட்டுபவர் ஐவரும் பொழுது போக்கு விகடம் புரிபவர் பதினாறு பேர்களும் மேலும் மும்மூன்று கூட்டமாக வுள்ள குழு ஏழுமூன்றும் மருத்துவர்கள் ஆறுபேர்களும் மேலும் ஒரு எண்மரும் முன்போன்று தொடர்புடைய மூவைந்து பேரும் கூடிய கூட்டம் ஒன்று உண்டு அது அமைவுபெற்று ஒருமைப்பாடு கொண்டு விளங்குகின்றது என்பது காணக் கிடையாத சூனியம் அப்படிக் காணக் கிடைக்காததை தேடிக்காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

பூதம் ஐந்து பொறிஐந்து இரண்டும் பேருருவங்கொண்டு விளங்குவதோடு கொலைத் தொழிலுக்கு உரியதாகவும் இருக்கின்றபடியால் (இவ்விரு கூற்றையும்) இவ்விரண்டையும் பத்து பரும்புலி என்று சொல்லுகின்றார். புலி கொலைத் தொழிலுக்கே உரியது போல பூதம் ஐந்தும் பொறிஐந்தும் முறையே நுகர்வுறு தொழிலாலும் உயிர்க்கலையை சிக்க வைக்கும் தொழிலாலும் வளர்ச்சி பெருவனவாகபடியால் கொலைத் தொழிலுக்கு உரியதாகின்றது.

மேலும் புலன் ஐந்து கன்மேந்திரியம் ஐந்து ஞானேந்திரியம் ஐந்து ஆகியவைகளை வசப்படுத்தினால் வலிமை மிக்கதாகியும் அதன் போக்கில்

விட்டால் மதப்பட்டுத் திரியும் யானை போன்று அடக்கம் இல்லாததாகவும் இருக்கின்றபடியால் (அவ்விழைபொறி) மேற்கூறிய பதினைந்தையும் யானை என்று சொல்கின்றார்.

வித்தை என்பது மெய்போன்ற பொய். அதை சுட்டிக்காட்டும் பொழுது அகரச்சுட்டு தலைப்படப்பெற்று அவ்வித்தை என்னும் பெயர் தாங்கி அது அவித்தை என்றாகி தமிழ் மொழிப்போலியாம் வடமொழியில் அவஸ்தை என்றாகியிருக்கிறது. இவ்வாறாகிய அவித்தை புரிபவர்கள் ஐவர். மனதிற்கு மாற்றத்தை தந்து மயக்குகின்றபடியால் இராகம் எட்டு என்று மேலும் பெருகுகின்றது. இராகம் என்றால் மன இருள் என்று பொருள்படும். மனம்-அகம் இருள்-இரா இரண்டும் கூடி இராகம் என்றாகியிற்று.

ஆதாரம் ஆறு - அதற்கு ஆதாரம் எனப்பெயர்வரக் காரணம் 'ஆ' என்பது உயிர் தாரம் என்பது மனை உயிரானது உறவு கொண்டு விளங்குகின்றபடியால் அதற்கு ஆதாரம் என்று பெயர். அவ்வகை ஆதராம் ஆறும் அவ்வாதாரத்தில் உயிர் உறைந்து நிலைபெறச் செய்யும் வினை இரண்டும் ஆக ஆதாரவினை எட்டாகும். இராகம் எட்டு ஆதாரவினை எட்டு ஆகிய

உயரு + ரு + அ + அ = சுமசா = 25 + 5 + 8+ 8 = 46

இப்பதினாறையும் விநோதகர் என்று திருமூலர் கூறுகின்றார். விநோதம் என்றால் பொழுதுபோக்கு. பொழுதைப் போக்கடிக்கச் செய்யும் செயற்பாடு ஆதார வினையில் அமைந்துள்ளது. (சுமசா) 46.

மேற்கூறிய கூட்டம் போன்று கூடிநிற்பவர்கள் ஏழுமூன்று பேர்கள் அவ்வெழுமூவர்; மலம் மூன்று மண்டலம் மூன்று குணம் மூன்று, ஏடணை மூன்று வாயு மூன்று நாடி மூன்று நோய் மூன்று என அமைவு பெறும். (சுமசா + உமக = (சாமஎ) 46 +21 = 67

மும்மூன்றாய்க் காணும் இவைகள் ஒன்றைப் பற்றிஒன்று தொடர் நிலை கொண்டு விளங்கும் ஒருமைப் பாட்டு இனம் ஆகையால் அத்தகு மூவர் என்று தொடர்பு படுத்திக் கூறுகின்றார். அதில் மேலும் இருமூன்றுபேர்கள் உண்டு. அவர்களை மருத்துவர் என்று கூறுகின்றார். அவ்விரு மூன்றும் நோய் நாடி மூன்று. நோய் வாயு மூன்றுமாக அமைவு பெற்றுக் காணப்பெறும். அவர்கள் மருத்துவத்திற்கு உரியவர்களாக இருத்தலால் அம்மூவகை இனத்தினின்று பிரித்து அறுவர் மருத்துவர் என்று கூறுகின்றார். (சாமஎ + சா = எமங) 67 + 6 = 73.

மேற்கூறிய எல்லாவற்றையும் தொடர்பு கொண்டு விளங்கலான் அந்த கரணம் ஐந்து. கோசம் ஐந்து ஆசயம் ஐந்து எனும் மூவைந்தையும்

ஐவர் எனக் கூறி முற்கூறிய எட்டில் ஈண்டு கூறுவதொரு எட்டுண்டு. அகரச் சுட்டு உள்ள தலைப்பைக் கொண்ட எட்டென்று நாடி நான்கு வாயு நான்கைக் காட்டுகின்றார். அச்சொற்பொருள் அத்தலை என்பது. ஆக ஈண்டு கூறியன எல்லாம் கூடிய எண்ணிக்கை ஒரு தொண்ணூற்றாறாகும். (எ௰௩+ரு+ரு+ரு+அ = ௯௰ ௬.) 73 + 5 + 5 + 5 + 8 = 96

இவ்வகை ஒரு கூட்டம் ஒருமைப்பாடு கொண்டு அவனுடைய ஆட்சி நிலையமாகிய உலகமாய சரீரத்தில் விளங்குகின்றது என்பது சூனியத்தில் தேடிக்கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை என்றறிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

யோகம் : சாதனப் பயனின் தன்மை யுரைத்தது

**இரண்டு கடாவுள இவ்வூரி னுள்ளே**
**இரண்டு கடாவிற்கும் ஒன்றே தொழும்பன்**
**இரண்டு கடாவை யிருத்திப் பிடிக்கில்**
**இரண்டு கடாவும் ஒருகடா வாமே** உ௲௨௪ (24)

இவ்வூரில் இரண்டு கடாமாடுகளிருக்கின்றன. அவ்விரண்டிற்கும் வேலையாள் ஒருவனே அந்த இரண்டு கடாமாடுகளையும் இருத்திப் பிடித்தால் இரண்டு கடாக்களும் ஒரே கடாவாகி விடுகின்றன என்று சித்துவிளையாடல் புரியும் சித்தர்பெருந்தகை கூறுகின்றார்.

ஒரு ஊரென்றிருந்தால் இரண்டு கடாக்கள் தானிருக்க வேண்டுமென்பதில்லை இரண்டே கடாவை மேய்க்க ஒரு தொழும்பன் வேண்டியதுமில்லை எப்படி இருத்திப் பிடித்தாலும் இரண்டு கடா ஒரு கடாவாய்ப் போகும் என்பதும் காணமுடியாத காட்சியாகிய சுத்த சூனியம் இதிற்றேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரைவருமாறு.

கடாஎன்பது எருமை யாணின் பெயர் பசுவின் ஆணிற்குக் காளையென்றுதான் பெயர் ஆகையால் இரண்டு கடா என்பது எருமைக்கடாவேயாம் எருமைக்கடா ஒருவழியாய்ச் செல்லாது. செல்லும் போதே நீர்நிலையைக் கண்டால் முரித்துக் கொண்டோடி அதில் விழுந்துவிடும் அத்தன்மையையுடையது ஒரு வழியாய் ஓடாமல் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பக்கம் ஓடும் வாசி அந்த வாசி செலத்துவ நிலையத்தின் வழிகொண்டு செலத்துவம் கசியும்தன்மையை யுடைத்தாயிருப்பதால் அதை எருமைக் கடாவென்று சொல்லுகின்றார். அந்த இரண்டு கடா இவ்வூரினுள்ளே யுளது என்று அண்மைச் சுட்டாகச்

சொல்வது நம் உடம்பையே குறிக்கும் குறிப்பாம் அது தான் இரண்டு கடாவுள இவ்வூரினுள்ளே என்பது அவ்விரண்டையும் மேய்க்கும் மேய்ப்பன் ஒருவனே என்று குறிப்பிடுவது நம்முடைய ஆளாம் நமன் அவன் நம் தொழும்பனே தவிர நமர் இல்லை ஆனாலும் அவன் நம்மை எம்மவனென்று சொந்தம் கொண்டாடும் எமனாக இருக்கின்றான். அதையே இரண்டு கடாவிற்கும் ஒன்றே தொழும்பன் என்று கூறுகிறார். தொழும்பன் நம் ஆளாகவிருக்கும் நமன் நம்மை எம்மவனென்று சொந்தம் கொண்டாடல் தகுதியல்லவே என்று நினைத்தால் அவனைக் கடாமேய்ப்பவனாகவே யொதுக்கி வைக்க ஒரு வழியும் காட்டுகின்றார். அந்தவழி இரண்டு கடாவையும் இருத்திப் பிடித்தலேயாம் இரண்டு கடாவாக நிற்கும் வாசியைத் தலையெடுக்கவிடாமல் அப்படியே யிருத்திப் பிடிக்கும் செயற்பாடாம் வாசி தோன்றா நிற்கும் நிலையாகிய மூலாதாரத்திலேயே இருத்தி நிலை கொள்ளச் செய்து நாலங்குல அமைவாகவுள்ள பிடிகொள்ளும் செயலாம் வாசிதாரணை யமையச் செய்தால் இரண்டு கடாவாக இருந்த பிராண அபான வாயுக்கள் ஒருங்கிணைந்து ஒன்றாகிக் 'கரு' கருமையாகிய ஆ. பசு கரும்பசு வாயிருந்த கடந்து செல்லும் செயலையுடைய எருமைக்கடா ஒரு கடாவாகும் இரண்டல்லாத வொன்றாகி ஒரு வழியாம் சுழினையிற் செல்லும் செயலையுடையதாய்க் கடவாத ஆவாய் பசுவின் ஆணாய்விடும் அப்படியாக ஆனால் பசுபதியிடங் கொள்வான் செலத்துவத் தோழம் நீங்கி அப்பசுவின் ஆண் நம் தீயாம் நந்தியாக மாறும் எமன் எருமையை மேய்ப்பவனாக இருக்க வேண்டியதுதான் எமதருமனும் பகடுமேய்க்கியாய் நம்மிடம் நெருங்காமல் தனியிருக்க வேண்டியது தான். பன்முகச் சமயநெறி படைத்தவரும் என்று தொடங்கும் சிற்சுகோதய விலாசமாம் தாயுமானார் பாடலைப் பார்க்கவும் பட்டிக் கடாவில் வரும் அந்த காவலனைப் பாரறிய வெட்டிப் புறங்கண்டலாது விடேன் என்று சீறுகிறார் அருணகிரி நாதர் அந்த ஆற்றல் நமக்கும் உண்டாகக் காட்டும் வழிதான் இரண்டு கடாவும் ஒரு கடாவாக இருத்திப் பிடித்தல் மூலகுரு சொன்ன வழியை எல்லோரும் முயன்று பார்ப்போம்.

இதுவே மண்ணுலக வாசியாகிய நமக்குச் சூனியமாய்த் தோன்றும் வெறுவெளிப் பாழிற் றேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனையுரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

யோகம் : அடயோகசாதனம் ஆகாதென்றது

ஒத்த மணற்கொல்லை யுள்ளே சமன்கட்டிப்
பத்தி வலையிற் பருத்தி நிறுத்தலால்
முத்தக் கயிருக மூவர்கள் ஊரினுள்
நித்தம் பொருது நிரம்பநின் ருரே. உ௰ரு (25)

மணற்கொல்லையை ஒத்த மட்டமாய்ச் சமதளப்படுத்தி அதனுள் பருத்தி விரையைப்பற்றி அதை ஒரு வலையிற் போட்டுத் துலாக்கோல் பிடித்து நிறுக்கும் செயல் நடக்கிறது. துலாத் தட்டை பிணைக்கும் கயிறும் மிகவும் முறுக்கேறியுள்ளபடியால் முறிகிறது. இதன் காரணமாக நிறுப்பவர்களும் வாங்குபவர்களும் ஆகிய மூவர்கள் ஊரினுள் தினந் தினமும் சண்டையிட்டு குறையளிக்கின்ருர்கள் என்று கூறுவதில் துலாக்கோல் நிலை கொள்ளாமற் சரியும் தன்மையை யுடையது மணற்கொல்லை அதைச் சமனப்படுத்துவதும் அதிற்துலாக் கோலை நாட்டலும் பருத்தி விரை நிறை கொள்ள நிற்காமல் பிதிர்ந்து சரியும் வலையிற் போட்டு அதை நிறுத்தலும் துலாத்தட்டின் கயிறும் கொடுமுறுக்கேறி முரிதலும் நடத்தக் கூடாதசெயல் இவ்வாறு யாரும் செய்யமாட்டார்கள் செய்தால் ஊர்ச் சண்டை தினமும் வரத்தானே செய்யும் வாங்குபவர்களும் கொடுப்பவர்களும் இப்படியும் உண்டா என்று நினைக்க வேண்டாம் உண்டு தினந்தினமும் நடந்து கொண்டேயிருக்கிறது. இது உங்களுக்குத் தெரியாத சூனியம் சூனியத்திற் றேடும் தேட்டமாம் சம்பாதனை உரையிற் காணக் கிடைப்பதைப் பாருங்கள்.

சரியும் அவலயாக்கை யாகிய சரீரம் மணற்கொல்லை போன்றது அதைச் சமனம் செய்வது முடியாத காரியமாக இருக்கிறது. அதனுலேயே இடைபின் நடுநாடியதான தராசு நிலைகொள்ளாமல் அசைந்து ஆடிக் கொண்டே யிருக்கிறது. அந்தத் தராசாகிய நாடியில் பஞ்சிற்கு வித்தாகிய பருத்தியாம்(பிராணவாயு) உயிர்வளியை நிறுத்தச் செய்யும் செயல் செய்தால் மூச்சை பிடித்தடக்கும் அடயோகம் சாதித்தால் வலைப்பையிற் போட்ட பருத்திவிரையைப் போல மூன்றறைக் கோடி ரோமத் தொளையிலும் பிதிர்வு கொள்ளவாரம்பிக்கிறது. இதையே அருணகிரி நாதர் வாசித்த நூல்மதங்கள் என்று தொடங்கும் பாடலில் ரோமத்துவாரம் எங்கும் உயிர்போகவென்று கூறுகிருர். அடக்கும் வாசியும் முறுக்கேறி முறுகிய நூற்கயிறு போன்று போன அளவில் திரும்பாமல் முறிந்து விடுகிறது. பன்னிரண்டங்குலம் பாய்வது எட்டங்குலந்தான் திரும்புகின்றது. ஊராகி சரீரத்திருக்கும் தத்துவக் கூட்டங்கள் குறைப்படும்செயலாக மனமும் வாசியும் பிராணனுமாகிய

மூவருக்கும் ஓயாத போராட்டம் நடைபெற்றுக் கொண்டேயிருக்கிறது. அப்போராட்டமே எதிர்த்தலும் பின்னடைந்-தோடலுமாகிய சுவாசகதியாம் வளிநடைஇயல் இதில்மணற் கொல்லையென்பது அவலச்சரியும் சரீரம் அதை ஒத்த மணற்கொல்லை யென்று கூறுகிறார் அதில் சுவாச பந்தனம் குருமுகமாயில்லாமல் தன்போக்காய்ச் செய்வதை சமன்கட்டிப்பத்தி வலையிற் பருத்தி நிறுத்தல் என்று கூறுகிறார். வாசியோ-டொன்றி நிற்கும் மனத்தையும் உயிரையும் மூவர்கள் ஊரினுள் நித்தம் பொருது நிரம்புகின்றாரே குறைபட்டழியும். அதாவது ஆயுள் தேயும் செயற்பாட்டை விளக்குவதோடு இச்செயல் விரும்பத்தக்கதல்ல மாற்றுவழி தேடுங்கள் என்று உணர்வு கொள்ளத் தூண்டுகிறார். இது இல்லாத வொன்றெனப்படும் சூனிய நிலையிற்றேடிக் கண்ட தேட்டமாம் சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

சரியை : சாத்திரச் சழக்கர்கள் தன்மை விளக்கம்

**கூகையும் பாம்புங் கிளியொடு பூனையும்**
**நாகையும் பூழும் நடுவில் உறைவன**
**நாகையை கூகை நணுக லுறுதலுங்**
**கூகையை கண்டெலி கூப்பிடு மாறே.** உ௰௬ (26)

கூகையும் பாம்பும் கிளியோடு பூனையும் தவளையும் நிடலையும் நடுப்பகுதியில் தங்கியிருக்கின்றன அதில் தவளையைக் கூகை நெருங்குவதைக் கண்ட எலியொன்று கூகையைக் கூப்பிடுகிறது. இது எவ்வாறுள்ளன என்னும் காணக் கிடைக்காத நிகழ்ச்சியாம் சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சம்பாதனை உரை.

மேற்கண்ட நிகழ்ச்சிகள் நம்முலகத்திற் காணமுடியாதுதான் இறைவன் வாழும் உலகத்திற் காணமுடியும் அங்கு பகைமை கிடையாது காட்டுகிறோம் காண்க.

இறைவன் வதியும் உலகம் நம்சரீரம் அதில் நடுவாகவுள்ளது ஆறுதாரம் அந்த ஆறுதாரம் கல்லும் மண்ணும் நீரும் நெருப்பும் காற்றும் வெளியும்ஆகக் கோவை கொண்டிருக்கின்றது. அவைகள் ஒன்றற்கொன்று பகை எனினும் பகை கொள்வதில்லை. கல்லின் கூறாகவுள்ள மூலாதாரத்தைக் கூகை என்று கூறுகிறார். கூ என்றால் பூமி அதன் அகத்தில் இயைவது கல் ஆகையால் கூ அக இயை கூகை என்று கூறுகிறார். உருவத்திலும் செய்து வைத்த மண்பொம்மை போன்றே யிருக்கும் கூகை அதனால் மண்கூகை என்றும் சொல்வதுண்டு. அதன்

தன்மையும் மூலாதாரத்தியற்கை போன்றதேயாம். எல்லாவுயிரினங்களும் செயல்படாதுறங்கும் நிசியில் கூகை விழிப்புடன் செயல்படும் மூலாதாரமும் எல்லாக் கருவிகளும் ஒடுங்கிய காலத்திற்றான் துயில்கலைந்து செயற்படும். ஆகவே கூகையென்பது மூலாதாரம் பாம்பு என்பது மூலாதாரத்துடன் தொடர்பு கொண்டு அதையடுத்துள்ள மண் கூறுகிய சுவாதிட்டானம். பாம்பு ஊர்வனவாகிய பிராணி. ஊர்வன மண்ணினிடமாக வாழ்வு கொண்டுள்ளதாகலானும் ஆதேயத்தில் சுவாதிட்டானம் நாற்சதுரம் பொருந்திய வாயாக நம் உறுப்பிற் றோன்றுவதாலும் அந்த வாயையே தலைப்படக் கொண்டுள்ள ஒருருவாம் பிராணி பாம்பாகலானும் சுவாதிட்டானத்தைப் பாம்பென்று கூறுகிறார். கூகையும் பாம்பும் ஒன்றற்கொன்று பகையுள்ள பிராணி. அதுபகையின்றி தொடர்பு கொண்டிருக்கின்றன. அவ்வாறே நீரின் கூறுகவும் நெருப்பின் கூறுகவும் உள்ள ஆதாரம் மணிபூரகமும் அனாகதமும் ஆகும். அது கண்ணுற் காணப்பெறும் ஆதேயத்தில் நீரிற்குரிய கோணமாகிய பிறைக் கோ)ணயணத்தை நெருப்பிற்குரிய கோணமாகிய முக்கோணத்தையும் பெற்று விளங்குவதை நாவின் வடிவத்தைக் கொண்டும் மூக்கின் வடிவத்தைக் கொண்டும் உணரலாம். கிளி பிறைக்கோணமாகிய மனிதனின் நாவை போன்ற நாவைக் கொண்டு பேசுந்தன்மை வாய்ந்த உருவத்தைக் கொண்ட பிராணியாகையால் அதை மணிபூரகத்திற்கும் பூனை முக்கோண வடிவைக் கொண்டுள்ளதுடன் கோணம் என்றே பெயருள்ள தாகி மனித்னின் நாசி வடிவத்தைக் கொண்டுள்ளது அனலெனக் கதிக்கும் சுவாபத்தையும் கொண்டுள்ளதாகையால் மணிபூரகத்தையும் அனாகதத்தையும் கிளியும் பூனையும் என்று கூறுகிறார். கிளியும் பூனையும் ஒன்றற்கொன்று பகை கொண்டுள்ள பிராணி அது பகையின்றித் தொடர்பு கொண்டிருக்கின்றன. அவ்வாறே காற்றின் கூறுகவும் வெளியின் கூறுகவும் உள்ளது விசுத்தியும் ஆக்ஞை என்னும் அக்க இணை நிலையமாகிய ஆக்கினை கூறப்பெறும் நிலையமும் ஆகும். அது கண்ணுற் காணப்பெறும் ஆதேயத்தில் காற்றிற்குரிய கோணமாகிய அறுகோணத்தையும் வெளியினுக்குரிய கோணமாகிய வட்ட வடிவத்தையும் பெற்று விளங்குவதை நம் உறுப்பிற் கண்செவி ஆகிய இரண்டையும் கொண்டுணரலாம் இரண்டு முக்கோணத்தை இருபுறத்திலும் கொண்டுள்ள கரும்புள்ளியே கண். வட்டவடிவச் சுழற்சியைக் கொண்ட வடிவமே செவி. இந்த அறு கோணமே நாவைக்கையாகக் கொண்டுள்ள பிராணியாம் நாகையென்னும் தவளையின் நாவினிடமாகவும் பூழ் என்னும் நிலங்காகிய பறவையினிடத்து வட்ட வடிவமாக நிலாஅங்கம் போன்ற கழுத்தினிடமாகவும் காணப் பெறுவதைக் கொண்டு நாகையும் பூழும்

என்று கூறுகிருர். இதுவும் ஒன்றற்கொன்று பகையுள்ள பிராணியேயாயினும் பகையற்ற தொடர்புடைத்தாகவே யிருக்கின்றன. இதில் நாகையைக் கூகை நணுகல் மூலாதாரத்தில் தோன்றும் வாசி கண்டத்தினிடமாக ஒலியுருப் பெறல் கண்டம் விசுத்தித் தானமாகிய நாகை அதனிடத்தில் ஒலியுருப்பெறும் மூலத்திற்கால் கொண்டெழும் வாசியே கூகை. இவ்வாறு நாகையைக் கூகை நணுகலாகிய சொல்லாற்றலும் அச்சொல்லாற்றலுக்கு ஆதாரமாய்க் காட்டப் பெறும் கட்டுரை யாகிய சாத்திரக் கலைகள் யாவும் மெய்ப் பொருள் விளங்குங்கால் இல்லாமல் மறைவது பற்றிக் கரந்துறைந்து உயிர்வாழும் எலி கூகையைக் கூப்பிடுகிறது என்று வாய் ஞானம் பேசுபவர்களையும் பிழைப்பிற்காக எழுதப் பெற்ற கலையைக் கதறுபவர்களையும் குறிப்பதாய்க் காட்டுகிருர் நம் திருமூலர் அவர் காட்டிய சூனியத்திற் றேடிக் கண்ட தேட்டமாகிய சம்பாதனை உரை இது எனத் தெளிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

யோகம் : யோக சாதனத்தின் உண்மையைச் சுட்டியது

குலைக்கின்ற நண்ணகை யாற்கொங் குழக்கி
நிலைக்கின்ற வெள்ளெலி மூன்று கொணர்ந்தான்
உலைக்குப் புறமெனில் ஓடு மிருக்கும்
புலைக்குப் பிறந்தவை போகின்ற வாறே. உயஎ (27)

குலைகுலையாகக் குலைத்துக் காயும் பருவத்தை நெருங்க கையால் தலைப்பைப் பற்றித் தேய்த்துக் கசக்கி அதில்நிலைப் படத்தோன்றும் மூன்று வெள்ளெலியைக் கொண்டு வந்தான் அது உலையிலிட ஆகாமையாலும் ஓடவும் பதுங்கியிருக்கவும் ஆகிய செயற்பாட்டை யுடைய தாகையாலும் புன்மைச் செயலிற்கென்றே பிறந்த அது ஓடிப்போகும் நோக்கமுடையதாகவே இருக்கின்றது என்பது திருமூலர் காட்டுங்காட்சி. ஏதோ குலைத்துக் காய்க்கும் வேருடைய தாவர மூலத்தைத் தலைப்பைப் பற்றி யுழக்கினுல் அதில் வெள்ளெலி கிடைக்கும் என்பதும் அப்படிக் கிடைத்த மூன்று எலிகளைக் கொண்டு வந்தான் அது உலையிலிடப் புறம்பானது என்று புறக்கணிக்க அவைகள் ஓடிப் பதுங்கி இருக்கின்றன என்பதும் புல்லிய செயலிற் கென்றே பிறந்த எலிகள் போகின்ற நோக்குடனேயே யிருக்கின்றன என்பதும் நடைபெறக் காண முடியாத நிகழ்ச்சி எனக் கூறும் சூனியத்திற் றேடிக் காணும் தேட்டமாம் சம்பாதனையுரை வருமாறு.

குலைகுலையாகக் குலைத்து தலை சாய்ந்து காயும் பருவத்தையுடைய நெற்பயிரை அதன் தலைப்பைப் பற்றி இழுத்துக் கசக்கிக் கையாற்

றேய்த்து அறுவடை செய்யலாமா என்று பார்ப்பதையே குலைக்கின்ற நண்ண கையாற் கொங்கு உழக்கி என்று கூறுகிறுர். இதில் உள்ளடக்கம் ஒன்றுள்ளது அவையாவன நெல்காட்டுப் பயிரல்ல நெற்பயிர் முற்கூறிய பருவத்தை நண்ண வேண்டுமென்ருல் நன்செய்யாகிய நிலம் வேண்டும். அதை முறையே உழவு செய்ய வேண்டும் நீர் பாய்ச்ச வேண்டும் வித்தினை வித்த வேண்டும் வித்திய வித்தினை பறவைகள் கொண்டு செல்லாமற் பார்த்துக் கொள்ள வேண்டும். இவ்வாறுன பாதுகாப்பினுல் முளைத்த பயிரை மேலும் விலங்கினங்களும் காட்டுப் பறவைகளும் அரிக்காமற் காப்பாற்றினுல் விளைவுக்கு வரும். அப்பருவ முதிற்சியில் குலைகுலைத்துக் காய்ந்து தலை சாயும் நிகழ்ச்சியே மேற்கூறிய குலைக்கின்ற நண்ண கையாற் கொங்குழக்கல் என்பது. இதில் நன்செய் நிலம் யாது உழவு என்பது என்ன நீர் பாய்ச்சல் வித்தை வித்துதல் அதற்கு இடையூறு வராமற் காத்தல் என்பன வாகியவை எதைக் குறிக்கின்றன என்பதையும் பார்ப்போம். நன்செய் நிலமே சரீரம் அதில் செய்யும் உழவே நாடி சுத்தியும் நாடிதாரணையும் நீர் பாய்ச்சுதலே வாசிதாரணை வித்தினை வித்துதலே மனம் வாசியைக் கூடியொன்ருகிப் பிராணனைக் கூடும் செயற்பாடு இந்நிலையிற் சாதனச் சித்தியை உலகியலிற் பயன்படுத்தாமல் யோக சித்தி காண்பதே விளைவு இவைகளையெல்லாம் ஒருவரியிற் காணும் நான்கு வார்த்தையில் பன்னிரண்டு எழுத்தில் அடக்கிக் காட்டிச் சுருங்கச் சொல்லுகிறுர் திருமூலர் இதை விரியாகக் காட்டுகின்ருர் தாயுமானுர் "ஆனந்தமானபரம் என்னும் பகுதியில் காணும் "காராரும்" ஆணவக் காட்டை என்னும் தலைப்பையுடைய பாடலில் அப்பர் சுவாமிகள் மெய்மையாம் உழவைச் செய்து என்று தொடங்கும் தனித்திரு நேரிசையிற் காட்டுகின்ருர். இதில் வெள்ளெலி மூன்று எப்படி வந்ததெனில் எலி குத்தலிற்கும் புடைத்தலுக்கும் உள்ளாகும் பிராணி அவ்வாறு குத்தலிற்கும் புடைத்தலிற்கும் உட்படுவது நெல் ஆகையால் அதை எலி யென்ருர் அதில் வெள்ளெலி மூன்றென்பது வெள்ளைநிற எலியல்ல; வெள்ளை என்பது போலியைக் குறிக்கும். கண்பார்வையின் கூர்மை குன்றிய போது ஓரெழுத்து ஈரெழுத்தாய்த் தெரியும் அதையே வெள்ளெழுத் தென்கிறேம் மனையாட்டி செய்யும் பணியை வேறெருவர் ஆட்டி செய்தால் அவளை வெள்ளாட்டியென்கிறேம் வாகனம் இரதம் முதலியன செய்து சும்மா ஓட்டிப் பார்த்தலை வெள்ளோட்டம் என்கிறேமல்லவா அதே போன்று வெள்ளெலி என்பது இங்கு எலிப்போலியாம் குத்தலும் புடைபடுதலும் ஆகிய நெல்லிற் போலியையே குறிக்கும். பொய் நெல்லாகிய பதரும் கல்லுக் கருக்காயாகிய சாவட்டை நெல்லும் நெல்லைக் கவித்துள்ள உமியே பிறப்பதற்குக் காரணமாகிய இருவினைப்பாசம் உமி என்ற சொல் மிகுதிப் பட்ட இரண்டென்பதே. உ. என்ருல் இரண்டையும் மி என்பது

மிகுதிப்பாட்டையும் குறிக்கும். உமி என்னும் இருவினைப் பாசதொடர்பற்ருல் அரிசி முளைக்காதமையைப் போலப் பிறப்பு இல்லையாய் விடும். அடுத்தது முளைக் காதவித்தாகிய சாவட்டை நெல் அதில் முளையும் உமியும் ஆகிய மூன்ருய்க் காணப் பெறுவது. ஆணவம் கன்மம் மாயையென்னும் மும்மலம் பதராகிய கருக்காய் பொய் மாயா மயக்கம் இம்மூன்றும் உலையிலிடும் அரிசிக்குப் புறப்பொருளாகக் கழிக்கப் பெறும். இதையே உலைக்குப் புறமெனில் ஓடும் என்று சொல்லுகிருர் குத்தலாலும் புடைத்தலாலும் ஓடாமல் நிற்பது சிவயோக விளைவாகிய அரிசி அதுவே அகம். அகம் என்பதை வலிமைப் படுத்திக் கூறும் சொல்லே அஃகம் என்ருயது. அகம் இருவினைப்பாச நீக்கம் பெற்ற ஒன்ரும் அரிசி அகப்புறம் இருவினைப் பாசமாகிய வினைவைத் தரும் உமி. கல்லுக் கருக்காய் உமியாம் இரண்டுடன் சாவட்டை அரிசியும் சேர்ந்த மூன்ருகிய புறம் கருக்காய் இம்மூன்றுங் கடந்த நான்காகிய புறப்புறம் இம்மூன்றையும் கழித்த விளைவின் பயனும் அரிசியே சிவயோக சாதன விளைவாம் சிவபோகம் இவ்வாறு இருவினைப் பாசமும் மும்மலமும் நீக்கம் பெற்ற வினைவே உலையென்னும் மூலத்தைச் சார்ந்து அன்னத்துவமாய் அமையும். இதையே புலைக்குப் பிறந்தவை போகின்றவாறே என்று கூறுகிருர் இதில் உழவு செய்து பயிர் விளைவித்தலைச் சிவயோக சாதனத்திற்கும் பொய் மாயையை கருக் காய்க்கும் மும்மலங்களைக் கல்லுக்கருக் காய்க்கும் அரிசியை மூடிய உமியை இருவினைப் பாசத்திற்கும் இவைகளையெல்லாம் புறக் கணித்துக் கிடைத்த அரிசியை சிவயோக சாதன விளைவிற்கும் உலையை மூலத்திற்கும் அன்னத்துவா வினை சிவபோகப் பொசிப்பிற் பொய் மாயை யாதியனவற்றை வெள்ளெலிக்குச் சான்ருகக் காட்டிப் போக வேண்டியதும் இருக்க வேண்டியதும் இவைகளெனத் திருமூலர் காட்டுவதைக் காண்பதே திருமூலர் காட்டிய சூனியத்தில் றேடிக் கண்ட தேட்டமாம் சம்பாதனையாகிய சூனிய சம்பாதனை உரையாகும்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

ஞானம் : பொறிபுலனியற்கை போக்கும் சாதனம்

**காடுபுக் காரினிக் காணுர் கடுவெளி**
**கூடுபுக் கானது ஐந்து குதிரையும்**
**மூடுபுக் கானது ஆறுள ஒட்டகம்**
**மூடு புதாவிடின் மூவணை யாமே.** உயஅ (28)

காட்டில் நுழைந்துள்ளமையால் இனிமேற் காண முடியாது கடுமையான வெளியை குதிரைகள் ஐந்தும் கூட்டிற் புகுந்து விட்டது ஆறு ஒட்டகங்கள் உண்டு அவைகள் இடைவெளியிற் புகுந்து விட்டது.

இப்படிக்கில்லாமல் ஊடே புகுந்து தாவிச் செல்வதாயின் அதற்குத் தடையாய் மூன்று அணைகள் இருக்கின்றன என்று கூறுகிறார் மந்திர தந்திரச் செம்மல்.

இவைகளை ஆராயும் போது கூட்டில் நுழைவது பறவை இனம் ஐந்து குதிரைகளும் கூட்டில் நுழைந்து கொண்டன என்பதும் இடைவெளியில் ஆறு ஒட்டகம் புகுந்து கொண்டன என்றும் இப்படிக்கில்லாமல் வெளியிற் செல்ல தாவுவதற்குத் தடையாக மூன்று அணைக்கட்டுகள் இருக்கின்றன வென்பதும் எங்கும் காணக் கிடைக்காத சூனியம் அச்சூனியத்திற் றேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

குதிரை தாவிச் செல்லும் பிராணி ஒட்டகம் சுமையைத் தாங்கிச் செல்லும் பிராணி இவைகள் முறையே குறிஞ்சி நிலத்திலும் பாலை நிலத்திலும் சார்பு கொள்ளற்குரியன. அப்படிக்கில்லாமல் இலக்குத் தப்பாய் முல்லை நிலத்தில் நுழைந்து விட்டன. அதன் விளைவு அவ்விரண்டினுடைய ஆற்றலும் ஆற்றுவிடுவனவாய் விட்டது.குதிரையென்பது வாசியாம் பிராணவாயு ஒட்டகம் என்பது மனம் மனமானது தனக்கென வொரு உருவமில்லாமல் உடம்பின் றன்மையைப் பெற்று உடம்மையொட்டிய யுருவமே தன்னுருவாய்க் கொண்டுள்ளமையால் அத்தன்மை வாய்ந்த பிராணிக்கு ஒட்டகம் என்றே பெயர் ஒட்டகம் கால்நிலந்தோய கழுத்தை நீட்டிச் சிரம்வான்றேய நிற்கும் இது மனத்தினுடைய இயல் மனம் அடிமுடி முழுதுஞ் சார்பு கொண்டு உடற்சுமையைத் தாங்கிக் கொண்டிருக்கிற தாயினும் அதைச் சுமையாக உணராமல் உடம்பு ஒட்டிக் கொண்டிருப்பதைத் தவிர ஊடே புகுந்து தாவிச் செல்ல முடியாது அப்படிச் செல்வது குதிரையாம் வாசி அதுவே மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐந்து கூண்டிற்குள் புகுந்து விட்டது. மாக்காலி போட்டுப்பாய முடியாது. சும்மா நாற்காலியாய்த் தானிருக்கலாம் ஒட்டகம் ஆறுதார நிலையத்திற் சார்பு கொண்டு எய்க்கா மேலுடையதாகி (Camel) விளங்குவதால் ஆறுள ஒட்டகம் என்று சொல்லுகின்றார். வாசியாகிய குதிரையும் ஒட்டகமாகிய மனமும் ஊடு தாவ முடியாமற் போட்டுள்ள அணை யிரண்டென்னும் இடைகலை நாடி பின்கலை நாடியில் நிலைப்பட நடுநாடியாகிய சுழிமுனையாகிய மூன்றாவது அணையில் பசுவாகிய பிராணன் நிலை பெறலாய காலத்து கடுவெளியை யடைந்தபசு முன்னைய பசுஅல்ல தெய்வப் பசுவாகி விடுகிறது. இதுவரை அதை விடாமலிருந்த பாசமும் பாசத் தொடர்பும் ஆய மனமும் வாசியும் அஃததற்குரிய இடத்தில் பெயராமல் நிலைபெறப் பசு புனிதம் பெற்றுத் தெய்வப்பசுவாகி விடுகிறது. அத் தெய்வப்பசு அடையுமிடம் கடுவெளி

வெளியே இறைவன் நடஞ் செய்யுமிடம் அந்நடனத்திற் திளைத்த நிலையில் இறைவன் றிரு முன்னர் அமைந்து அறிதுயில் கொண்டு விடுகிறது. அதை இன்றும் என்றும் புறப்புறத்திற் காணும் வண்ணம் அமையப் பெற்றுள்ள காட்சியாயத் திருதில்லையம்பதியிற் காணலாம். ஒரு சிலர் அலட்சியமாக கால்நீட்டிப் படுத்திருப்பதாய்க் கூறுவார்கள். இறைவன் நடஞ்செய்வது தெற்கு நோக்கி அதை நோக்குவது வடக்கு முகமாக இருந்தாற்ருன் முடியும் வடக்கு முகமாக இருந்து நோக்குங்கால் ஆனந்தத்திற் திளைத்து மயங்கினுல் தெற்கே தலைவைத்து வடக்கே கல்நீட்ட வேண்டித் தான் வரும். அது ஒன்றும் பிழைபாடில்லை இறைவன் ஒருவனே பதி மற்ற உயிரினங்களெல்லாம் பசுவே ஆகவே. தெய்வப் பசுவாகிய திருமால் இறைவன் திரு முன்னர் அனந்தலாடுகின்ருன். அவன் ஆடுகின்ருன் இந்நிலையைத் திருமந்திர உபதேசிகர் உந்திச் சுழியின் உடனேர் பிராணனைச் சிந்தித் தெழுப்பிச் சிவமந்திரத்தினுல் முந்தி முகட்டில் நிறுத்தி யபானனைச் சிந்தித் தெழுப்பச் சிவனவனுமே என்று கூறுகிருர். வேருேரிடத்தில் ஐந்து கூண்டில் அடங்கும் பிராணவாயு ஐந்து குதிரைகள் மூலாதாரத்தில் கால் கொண்டு நிற்கும் அபானவாயு ஒட்டகம் இவ்விரண்டும் நிலைபெறவமைந்துள்ள மூவணை இடைபின் நடுநாடி பசுபுகும் கடுவெளிமூல குண்டலி நிலையம். இது பாச நீக்கம் பெற்ற பசுபதியைக் கூடும் நிலையாம் என்றுணர்க. இதுவே. சூனியத்திற் றேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரையாம்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

கூறையுஞ் சோறுங் குழாயகத் தெண்ணெயுங்
காறையும் நாணும் வளையலுங் கண்டவர்
பாறையி லுற்ற பறக்கின்ற சீலைபோல்
ஆறைக் குழியில் அழுந்துகின் ருரே. உயகூ (29)

உடுக்கின்ற ஆடையும் உண்ணுகின்ற உணவும் மூங்கிற் குழாய் புகுத்தலில் உள்ள எண்ணெய்யும் கழுத்து அணியாகிய பொற்காரையும் மங்கல நாணும் கைவளையலும் என்னவாகின்ற தென்பதை நேரில் கண்டவர்கள் பாறையில் உலர்த்தப் பெற்ற துணி பறந்து செல்வதைப் போல ஆறைப் பள்ளத்தில் அழுந்தி மாழ்கின்ருர்கள் என்று மெய்யறிவு ஆக்க விளக்கம் தரும் மெய்ஞான சித்தர் சொல்லுகின்ருர். மேற்கண்ட பொருள்கள் எல்லாம் பெண்ணணங்கிற்கு அழகும் கூட்டி தேவதை போல் ஆக்கும் பொருளன்றி மாதரை புலவர்கள் எல்லாம் புகழ்ந்து பேச நமது சித்தர் பெருந்தகை என்னமோ நினைத்துப் பார்க்கும் வண்ணம் கூறுகின்ருர். அழகூட்டும் பொருள்களைப் புறக்கணித்துக் கூறுவது நம்

சிந்தைக்கு எட்டாத சூனியமாக இருக்கிறது. அச்சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

மக்களில் பெரும்பாலோர் அவர்களுடைய இயல்புக்கேற்ற முறையில் பெரியோர்கள் சொல்லிய நுட்பம் தெரியாமல் இழிதகவான உரையும் உரை நூற்களும் இசை எழில் நூற்களும் ஆக்கி அதில் இன்பச் செரிவை கண்டு மயக்குறுவதை பாறையிலுற்ற பறக்கின்ற சீலைபோல் ஆறைக்குழியில் அழுந்துகின்றாரே என்று சொல்லுகின்றார். பாறையிலுற்ற சீலையானது ஈரம் புலர்ந்ததும் காற்றால் தூக்கி செல்லப்பட்டு உலர்ந்த ஈரம் மறுபடியும் பொருந்த ஆறைக் குழியில் விழுந்து நீரில் மூழ்கி சேற்றில் ஆழ்ந்து விடுவதை மதனுகமம் பயிலும் நூலறிவார்களை உவமைக்கு காட்டுகின்றார். அழகிய பட்டுத் துணியை உடுத்தினால் மறுநாள் உபயோகிக்க முடியாமல் வேர்வையும் அழுக்கும் பட்டு நாற்றம் எடுக்கிறது. நறுமணம் மிக்க உணவுகளை உட் கொண்டால் நினைத்துப் பார்க்கவும் அருவருப்பைத் தரும் மலமாக அது வெளிப்படுகின்றது. "அருந்தின மலமாம் புனைந்தன அழுக்காம்" என்ற முதுமொழியை நோக்குக. நறுமணம் கமழும் தைலத்தை எடுத்து பூசி முடிவாரிக் கொள்ளப்பெறுகிறது. அது சில தினங்களில் சிக்கி வீசி நாற்றம் எடுத்துக் காண அதைப் போக்குவதற்கு சிகைக் காய் கரைசல் தேவைப்படுகின்றது. பொன்னால் ஆன அணிமணிகளும் அழுக்கேறி ஒளி மழுங்கிவிடுகின்றன. வெண்மை நிறத்தில் மிளிரும் சங்கினால் செய்யப்பட்ட சூடகமாம் கைவளை அழுக்கேறி பொழிவிழந்து விடுகின்றது. இவைகளை யெல்லாம் பார்த்து இருந்தும் கண்டதைக் கொண்டு காணாததைக் காட்டுவதற்காக பெரியோர்களால் சொல்ல பெற்ற அகத்துறை கோவையை புல்லறிவுள்ள மக்கள் மதனுகமமாக ஆக்கி மதிமயக்கம் கொள்ளுவது அழுக்கைப் போக்கி பாறையில் உலர்த்தப் பெற்ற துணியானது காற்றால் அடித்துச் செல்லப்பட்டு ஆறைக்குழியில் அமிழ்ந்து நனைந்து சேற்றில் சிக்கிக் கொள்வதை ஒக்கும் என்று கூறுவதில் ஆறையென்னும் கீரை அடர்ந்து படர்ந்த குழியாகிய நீர்நிலைக்கு ஒப்பிட்டு அறையென்னும் சொல் நெடிதாக அமைந்த ஆறை என்றும் அதனிடைப்பட்ட இடம் காமமயக்கமாகிய சேரு நிரம்பிய குழி என்றும் அதில் சேலையானது அமிழ்ந்தால் என்ன நிலையை அடையுமோ அதுதான் மக்கள் உறும் நிலைமை என்றும் விளக்கிக் காட்டுவதே பொருள் விளங்கா சூனித்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

யோகம் : யோக சாதனத் தொடுக்கம் உரைத்தது.

துருத்தியுள் ளக்கரை தோன்று மலைமேல்
விருத்திகண் காணிக்கப் போவார் முப்போதும்
வருத்தியுள் நின்ற மலைப்பைத் தவிர்ப்பாள்
ஒருத்தியுள் ளாளவள் ஊரறி யோமே ௩ல (30)

ஆற்றின் இடைக்குறையுட் சென்றால் அக்கரை தென்படும் மலைமிசை உண்பதற்குரியனவற்றினைப் பார்வையிட்டு வருதற்பொருட்டு மூன்று காலமும் போவார் அவரைத் துன்பப்படுத்தி உள்நின்றே இயலாமை உருவாவதைத் தவிர்ப்பவள் ஒருத்தியிருக்கின்றாள் அவளுடைய நிலைப்பிடம் இன்னதெனத் தெரியவில்லை யென்று ஆகமசித்தர் கூறுகின்றார் அதுயாதெனப் பார்ப்போம்.

ஆற்றின் திட்டிற்சென்று அக்கரையைக் காண்பதற்கும் மலைமிசைசென்று உணவுப் பொருள்களை பார்வையிட்டு வருவதற்கும் உள்நின்றே இயலாமையை யுருவாக்கித் துன்பத்தைத் தருவதை தவிர்ப்பவள் ஒருத்தியிருப்பதற்கும் அவள் ஊர் தெரியவில்லை என்பதற்கும் உண்டாய தொடர்பு நமக்கு தெரியவில்லையே இதுவெறும் சூன்யமாக இருக்கின்றதே என்பதைத் தவிர்க்கும் தேட்டமாம் சூனிய சம்பாதனையுரை வருமாறு.

யாற்றில் இருமருங்கும் நீர்பெருக்கெடுத்தோட நடுவில் துருத்திக் கொண்டிருக்கும் திட்டிற்குத் துருத்தியென்று பெயர். அவ்வாறு வாசியாகிய யாற்றூற் சூழப் பெற்றுள்ள இடம் மூலாதாரம் அம்மூலாதாரத்திற் சீவனும் திருமால் இடங்கொள்ளுங்கால் பற்றற்றநிலை கூறும் அந்த இடத்திற் சென்றாற்றான் இதுவரை ஆற்றுப் பெருக்கில் அலைப்புண்டு சுழற்சி பெற்றாற் போல் வாசியிற் சிக்குண்டலைந்த மனம் தெளிவு பெறும். அதற்குக் காரணம் வாசிலயப்படுவது தான் வாசிலயப்பட மனம் லயப்படும் மனோலயம் ஏற்பட்டால் ஆன்மாவைக் கூடிவிடும், கூடியது அதுவாகவே யாகிவிடும் இதைத்தான் மற்றோரிடத்தில் வளியுறும் எட்டில் மனமும் ஒடுங்கும் என்று ஆகமச் சொல்லாற்றல் காட்டுகிறது. இந்நிலையைச் சாதன வலிமையாற் பெற்றால் கரையேறலாம் கரையேறுவதென்ன பெரிய காரியம் மலையும் ஏறலாம் அதைத் தான் துருத்தியுள் அக்கரை தோன்றும் மலைமேல் விருத்திகண் காணிக்கப் போவார் என்று கூறுகின்றார். இக்கரை கீழ்மூலம் அக்கரை மேல்மூலம் இக்கரை கடல் அக்கரை மலை. மூலத்திற்றோன்றி முடிவில் இருநான்காகிக் கால்வெளியிற் பன்னிரண்டாங்காண் என்றபடி மூலாதாரத்திற் கால் கொண்டெழும் வாசி மலையடிவாரமாகிய

புருவமத்தியத்தை முட்டி வெளியிற் செல்வதைத் தவிரமலையென்றும் மச்சென்றும் பேசப்பெறும் மேல் மூலாதாரத்திற்குச் செல்ல முடியாது. அது செல்ல வாய்ப்புக் கிடைப்பதையே மலைமேல் விருத்திகண் காணிக்கப் போவார் முப்போதும், மலைமேல் விருத்தி சந்திரகலாமிர்தம். முப்போது என்பது சூரியன் சந்திரன் அக்கினி என்னும் அலரி புல்வரி முளரி ஆகிய போதுகள் அவ்வாறு போகும்போது வருத்தியுள் நின்ற மலைவைத் தவிர்ப்பாள் ஒருத்தியுள்ளாள். ஆயிரத்தெட்டிதழ்க் கமலத்திருக்கும் வாலாம்பிகையாம் மன்னர் மன்னவர் தலைவி ஒருத்தி அழிவை அழிக்க விருக்கின்றாள் என்றும் அவள் ஊரறியோமே என்று தேசதேசாட்-சரியாயிருக்கும் சிறப்பைக் கூறுகின்றார்.

துருத்தி யென்பது கீழ்மூலம் ஆறுகடந்தமலையென்பது ஆருதாரங் கடந்த மேல்மூலம் மலையென்பது சூக்கும சடாதாரம் விருத்திகண் காணிக்க முப்போதும் போவது சோமசூரியாக்கினியுவாய் மேற்செல்வது வருத்தியுள் நின்ற மலைப்பைத் தவிர்க்கும் ஒருத்தி வாலாம்பிகை என்பதாகும் இந்நிலை வளிநிலைச் சாதனமாம் பிராணாயாம முடிவில் அடையும் விளைவைக் குறிக்கும் இதுவே வெறும் பாழாம் சுத்த சூனியம் என்னும் இடத்திற் றேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை யுரையாகும்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

சரியை : இழிதகவைத் தரும் எண்ணக் குறிப்பைக் காட்டி யுண்மை கழறுகின்றார்

பருந்துங் கிளியும் படுபறை கொட்டத்
திருந்திய மாதர் திருமணப் பட்டார்
பெருந்திய பூதம் பெறவுரு வாகும்
இருந்திய பேற்றினில் இன்புறு வாரே. ௩௰௧ (31)

திருமண வாழ்க்கைப் படுத்தப் படுகின்றாள் ஒரு பெண். அத்திருமண வாழ்க்கைக்கு வாத்திய முழக்கம் செய்கின்றது பருந்தும் கிளியும் திருத்த மில்லாதிருந்த பெண்ணாள் திருந்திய மாதாக மணவாழ்க்கையை மேற்கொள்ளுகின்றாள் இருந்தது இயலுகின்ற இத்திருமணப் பேற்றில் அவள் இன்புறுகின்ற போது பெரிய வயிறையுடைய பூதம் எல்லாம் தனதெனப்பெற உருவாகிக் கொண்டிருக்கிறது என்பன உலகில் காணக் கிடைக்காத தான சூனியம் அச்சூனியத்திற் றேடிக் காணும் தேட்டப் பொருளாகிய சூனிய சம்பாதனை யுரைவருமாறு.

சொல்மொழியச் சரியாக நாவு திருத்தம் பெறுமலிருந்த சொல் மொழி திருந்திய நிலையில் சொற்றிருத்தம் பெற எழுத்துப் பயிற்சிச் சடங்கு

செய்விக்கப் பெறுகிறது. அது சொன் மொழியை யுணரும் செவிக்கு அணிகலன் பூட்டி மணம் செய்வித்தற்குரிய மாமனுர் அதைச் செய்விக்கின்ருர் அதையே திருந்திய மாதர் திருமணப்பட்டார் என்று கூறுகிருர். மணம் மலர் அவிழ்தலால் உண்டாவது அது இருள் நீக்கம் காணும் ஒளியால் ஏற்படும். அவ்வாருன சடங்குகளை யெல்லாம் செய்து பெண்ணை மனப்படுத்துவது யோக சாதனச் சரியையாகச் செய்யும் நடைமுறை நிகழ்ச்சி நாட்டில் நடைபெற்று வருகிறது. யோகம் கூடல் என்று பொருள் அவ்வாறு கூடுதல் புரியும் சடங்கு மனித வாழ்வில் மூன்று தட்வையும் கடைசியில் ஒரு தடவையும் நடைபெறும். அதில் முதல் மணச் சடங்கு காதணி விழாக் கல்யாணம் இரண்டாவதாகச் செய்யும் மணச் சடங்கு யோக சாதன கிரியை நியதிப் படியான சடங்கைச் செய்து கண்டதைக் கொண்டு காணுததைக் காட்டும் இயற்கைப்படியாக உள்ளது. (இதை உணர்த்துவதே திருக் கோவையாரும் அகப் பொருட்டுறையுமாம். இது கண்டதே காட்சியாய்க் கொண்டு மேலொன்றும் இல்லையென்று கூறலுறும் நிலைமையை மேற்கொள்ளப் படும் தகைமைத்தாய்ச் சாதாரண மக்கள் நினைக்கும் படியாக இப்பொழுது இருந்து வருகின்றது. ஈண்டு கூறியவற்றில் யோகம் என்ருல் கூடுதல் என்பதன் விளக்கம் வருமாறு) மக்களுடைய வாழ்நாளில் இரண்டாவதாகச் செய்யும் திருமணமே எழுத்துப் பயிற்சியும் அதன்வழியாக உலகியற் கலைகளை யுணர்வதும் ஆகும். அதன் தன்மையைத் தான் திருமூலர் பருந்தும் கிளியும் படுபறை கொட்டத் திருந்திய மாதர் திருமணப்பட்டார் என்று கூறுகிருர். பருந்தென்று கூறுவதன் பொருள் பாரில் நின்றும் உந்தி மேற்செல்லும் செயற்பாட்டைக் குறிப்பனவாம் பார் உந்து பருந்தென் ருயது அப்படிப் பாரில் நின்றும் உந்தி மேற்சென்று கண்ணோட்டமிட்டுக் கண்டறியும் நுட்பமான அறிவுடையது பருந்து ஆகையால் மூச்சுப் பொருட் செயலாம் நாசியையும் உருவப் புலப்பாட்டுக் கூர்மைச் செயலாம் கண்ணையும் குறிப்பிடுவதற்குப் பருந்தைக் கூறுகிருர். அதுபோன்று செவியாற் கேட்கும் ஒலியை வாயாற் சொல்லும் இருவகைப் புலன்களின் கூறுபாட்டைக் கொணடுள்ள உயிர் பிராணி கிளி. ஆக ஐம்புலன்களில் மெய் நீங்கலாக வுள்ள நாற்புலன்களையும் குறிப்பனவாக அமைவு பெறுகிறது. பருந்தும் கிளியும் படுபறை கொட்ட என்பதில் சொல்லப்படுதல் சொல்லிற்குப் பறைதல் என்றும் பெயர் சொல்லப்படுதலிற்குப் படுபறை என்கிருர். கொட்ட என்று கண்ணிமைக் கொட்டலைக் கூறுகிருர் அது கண்ணேக்கிற்குரிய பருந்திற்காயிற்று. ஆகவே, கிளியினுடைய செயலும் பருந்தினுடைய செயலும் கூடியது படுபறை கொட்டலாம் இந்தச் செயற்பாட்டு நிகழ்ச்சி வாயிலும் கண்ணிலும் மூடவும் திறக்கவும் ஆகத் தோலாற் செயல் பெறலாகின்றபடியால் அதுமெய் முழு தாயமையக் காணும் ஒன்ருகி

மெய்வாய் கண்மூக்குச் செவியைக் குறிப்பினவாகின்றது. இதுவே பருந்தும் கிளியும் படுபறை கொட்டலாம். இதனுல் பெருந்திய பூதம் பெறலுருவாவதெப்படி யெனின். வாயொலி எழுத்தும் சொல்லும் வாக்கிற்குரியன காலமும் கணிதமும் நாசிக்கும் கண்ணிற்கும் உரியன நாசியின் வாயு சஞ்சாரம் ஒரு நாழிகைக்கு முந்நூற்றறுபது என்ற அளவையின்னின்று காலத்தையும் பொழுதையும் குறிக்கும். நிமைசெல் நேரம் நாழிகை நாள் வாரம் பட்சம் மாதம் அயணம் வருடம் எனநாசியிற் காணும் உயிரோட்டக் காற்று எண்ணுகிய இலக்கத்தையும் உயிரோட்டக் காற்றுறழ்ச்சி யானது வாயினின்று எழுத்தையும் சொல்லையும் இசையையும் தரும். இதனுற் காலமும் பொழுதும் நாளும் ஆகிக் கலை தேய்ந்து அழிவு நிலையேற்படுகிறது. இதில் ஒன்று கூடப் பெறுவது மனம் வாக்குக் காயம் என்னும் முக்கரணங்கள் இதில் உயிரோட்டக் காற்றில் ஓடி நாளும் பொழுதுமாக வாசியையும் மனத்தையுங் கூடி உயிர் தேய்பிறை யெனத் தேய்ந்து வாழ்நாள் வீணுளாகின்ற படியால் பெரும் உந்தியை உடைய பூதம் பெறுவதற்கு உருவாகின்றது இச்சரீரம் இவ்வாறு இருந்தியல் பேற்றில் இன்புறுவ தெப்படி இன்பமாகும் பெரும்பூதம் விழுங்கக் காத்துக் கொண்டிருக்கும் போது என்று நம் உலகியற்கலை யுணர்நிலையின் விளைவை யுணர்த்துகின்ருர் திருமூலர் இதுவே சூனிய சம்பாதனையாய்த் தேடிக் கண்ட தேட்டப் பொருள் உரையாம் எனத் தெளிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

கிரியை இறைவற் கொடுக்கம் இயற்றுகென்றது

கூடும் பறவை இரைகொத்தி மற்றத
னூடுபுக் குண்டி யறுக்குறில் என்னெக்குஞ்
சூடெறி நெய்யுண்டு மைகான் றிடுகின்ற
பாடறி வார்க்குப் பயனெளி தாமே. ௩௰௨ (32)

கூடுதலை விழையும் பறவையானது இரையைக் கொத்தித் தானே தின்று விடாமல் தான் விழையும் காதற் பறவைக்குக் கொடுக்க அதன் முன்னிலையிற் கொறித்துத் தள்ளும். அதுவே தன்விருப்பத்தைக் காட்டும் செயலாகும். அப்படிக் கல்லாமல் தானேயுட் கொண்டால் கூடலை விரும்பாமல் வெறுத்தொதுக்குவதை வெளிப்படுத்தும் செயலாகும். நெய் விளக்கேற்றி ஒளிவிளக்கந்தரத் திறந்த வெளியில் வைத்தால் விளக்கத்தைத் தரும் அப்படிக்கில்லாமல் அதைக் கவித்து வைத்தால் ஒளிவழங்காதது மட்டுமல்ல இருள்விளைவாகிய மையைத் தரும் இதை உணர்ந்து பார்த்தால் அடைய வேண்டிய பயனை யெளிதாயடைய

முடியும் என்று குறிப்பிற் குறிப்புணருங் குறியறி சித்தர் பெருந்தகையாளர் கூறுகின்றார். இதிற் கூடுதலை விழையும் பறவை யென்பது எதைக் குறிக்கின்றது அது இரைகொத்தி ஊடு சென்று உண்டியறுப்பது எதனைக் குறிக்கின்றது. சூடேறிநெய்யுண்டு மைகான்றிடுதல் எதைக் குறிக்கின்றது என்றறியாமல் மருட்டும் சூனியத்திற்றேடிக் காணும் தேட்டமாம் சூனியசம்பாதனை உரைவருமாறு.

வாசியைக் கூடியலைந்து திரிகின்ற பறவையாக மனமிருக்கின்றது. அதற்குரிய ஆண் பறவை ஆன்மா அதை மனம் கூட வேண்டும் இப்படிக் கூடும் செயலால் ஆன்மா அதன்றலைவனாகவுள்ள பிரமத்தைக் கூட ஞானவொளி விளக்கம் ஏற்படும். இவ்வாறன்றி சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தையும் மனமே துய்க்குமாயின் ஆணவம் கன்மம் மாயை என்ற கலிப்பில் மனம் சிக்கியுழல காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மார்ச்சரியம் இடும்பை வெட்கம் என்ற சூழல் ஏற்பட்டு அகமாகிய மனம் இருளில் தோய்ந்து வழிதெரியாமல் தவிக்கும் நிலையேற்படும். இதையே இரா-அகம் ராகம் என்று ஞானநூற்கள் கூறும். இவ்விராகத்தைத் தரும்புல நுகர்ச்சியை இறைவனுக்கு அளிப்பதாகிய கிரியையே சுவையாகிய நிவேதனம். நிவேதனம் தான் மட்டும் உண்ணாது அடியார்களுடனுண்ப தெரிசன நிமித்தமாக ஒளிவிளக்கு இறைவன் திருக்கோயிலில் ஏற்றுதலும் எல்லோரும் தெரிசிப்பதற்காகவேயாகும் மணங்கமழும் தூபமிடுதலும் தன் பொருட்டல்லாததே. மறையொலி முழக்கம் முழங்கச் செய்தலும் தன்பொருட்டல்லாததே. யாரும் விரும்பப்படுவதான நறுமண மலரை இறைவனுக்கே யாக்குவதும் நம்புலனின் பத்தை வெல்லுதலேயாகும். இவ்வாறான கிரியை நெறியில் வழுவாது நின்றால் வளியுறும் எட்டில் மனமும் ஒடுங்கும் என்றபடி மனம் வாசியில் லயங்கொண்டு ஆன்மாவைக் கூடும் காரணமாக ஆன்ம ஞானம் ஏற்படும். அப்பர் சுவாமிகள்......... விளக்கினார் பெற்றவின்பம் மெழுகினாற் பதிற்றியாகும் என்ற தேவாரப் பாடலை நோக்குக மேலும் திருவங்க மாலையும் இதை வலியுறுத்தும் புலனின்பத்தைஇறைவனுக்காக்காமல் தனக்கே யாக்கிக் கொண்டால் அதன்விளைவு நெய் தீபம் ஏற்றி அதன் விளக்கத்தை தனதாக்கிக் கவித்துக் கொண்டால் என்னும் ஒளி படர்ந்து பல்லோர்களுக்கும் விளக்கத்தை தரலொழிந்து தனதாக்கியோனுக்கு இருளை கக்கிக் கொடுக்கும் செயற்பாட்டை யளிக்கும் தன்மையை சூடேறி நெய்யுண்டு மைகான்றிடுகின்ற பாடறிவார்க்குப் பயனெளிதாமே என்று கூறகிறார். இது சூனியமாம் பாழ்நிலையிற் தேடிக்கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை யுரையாகும்.



அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

இலையில்லை பூவுண் டினவன் டிங்கில்லை
தலையில்லை வேருண்டு தாளில்லை பூவின்
குலையில்லை கொய்யும் மலருண்டு சூடுற்
தலையில்லை தாழ்ந்த கிளைபுல ராதே. தி.மந். (33)

ஒரு அதிசய மலரைப் பற்றி குறிப்பிடுகின்றார் அதிசய முனிவராம் திருமூலர். பூ இருக்கின்றது. இலையில்லை. அப்பூவின் மதுவை உண்ணும் வண்டினமும் இங்கில்லை. அப்பூ பூக்கக்கூடிய தலைப்பும் இல்லை. ஆனால் வேர் மட்டும் உண்டு. அப்பூவிற்கு அடுக்கடுக்காய் தோன்றும் தாளும் இல்லை. பூவைத் தரும் குலையும் இல்லை. குலையிலிருந்து கொய்ந்து எடுக்கக் கூடிய தலையும் இல்லை. அந்த பூவைத் தரும் கிளையானது பூத்தலை நிறுத்தாமல் பூத்துக் கொண்டே யிருக்கும். இந்த வித்தகச் சித்தர் சொல்லி வந்த சூனிய சம்பாதனையில் இத மிகவும் அதிசயக் காட்சி. இதில் எந்த ஒன்றும் நம் உலகத்தில் காண முடியாத சூனியம். இப்படி ஒன்றைக் காண்பது எந்த உலகத்துள்ளது இப்படி ஒன்று எவ்வாறு இருக்க முடியும் என்பதைத் தேடி கண்டு கொள்ளும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

பூ என்பது மலர்ந்தால் சாம்பிப் போகும் இயற்கையை உடையது. அவ்வாறான மலரே இறைவன் தனக்காகப் படைத்த வாசி மலர். இந்த மலருக்குரிய தனிப்பெரும் சிறப்பு என்னவென்றால் வண்டு எச்சில் படாத பூ. மேலும் 'பூ' வைத் தவிர இலை கூட தளிர்க்காது பூவே பூக்கும், பூவாக உள்ள தன்மையுடையது. இதைத் தலையிற் சூடிக் கொள்ள முடியாது. இதற்கு வேர் மட்டும் உண்டு. வேருக்கு மேலே உள்ள சரணபாகமாம் தலைப்பிற்கு கீழேயுள்ள பகுதியும் கிடையாது. பூங்குலையிற் கொய்யாமல் கொய்யும் மலருண்டு. இவைகளாவன.

வாசிமலரில் ரீங்காரம் செய்யும் வண்டாம் ஓசை கிடையாது வாசி மருக்கு நிலையாக நிற்கும் தலைப்பு என ஒன்றும் கிடையாது. அவ்வாசி மலரை சூழ்ந்துள்ள தளிர் இலைப்பகுதியாக தோன்றுவனவும் இல்லை. ஆனால் வேர் என்று சொல்லப்படும் மூலாதாரத்தில் தோன்றி கால் கொண்டு நில்லாமல் மலர்வுற்று வாட்டம் பெறும் தன்மையை இலையில்லை பூவுண்டு இன வண்டிங்கில்லை. தலையில்லை வேருண்டு என்று சொல்லுகின்றார். பூவின் இதழான தாளும் இல்லையென்பது வாசிமலர் ஆகிய சுவாசம் மலர்ச்சியுருவதைத் தவிர சிதறல் இல்லாதபடியால் தாளும் இல்லையென்று சொல்லப் பெறுகின்றது. மேலும் பூங்குலையில்லாமல் பூப்பனவாகி கொய்யப் பெறும் மலராகவும் வாசியிருக்கின்றது என்பதை மலர்ச்சியை மட்டும் உடையதாகிய வாசியின் சிறப்பைக் காட்டுகின்றது. மலரானதை சூட்டிக் கொள்ளும் தலைமுடியாகிய கூந்தல் இல்லாதன

போன்று வாசி மலரானது மலர்ந்து கொண்டேயிருக்கின்ற படியால் மலர் நிலைப்பிடமாகிய பூங்குழலும் இல்லையென்று ஆகின்றது. இம்மலரைத் தரும் கிளையும் பூ உலராமல்பூத்துக் கொண்டேயிருக்கின்றது என வாசி தோற்றம் தரா நிற்கும் கிளையாக நாசியிருக்கின்ற படியால் தலையில்லை தாழ்ந்த கிளை புலராதே என்று கூறுகின்றார். இது முற்றிலும் வாசி மலரைக் குறிப்பனவாகவே உள்ளன. இவ்வாறான வாசிமலரை எடுத்து இறைவனை பூசிக்கின்ற வழியை இந்த அதிசய சித்தர் கூறவில்லை. காரணம் இதற்கு உரை காணும் எம்மையே சொல்லச் சொல்லி விட்டதாக கருதி மேலும் சொல்லுகின்றோம்.

பூ என்பது இறைவனது அருச்சனைக்கு உரியது. அருச்சனை என்றால் அருத்தம் என்பது ஒரு பாதியைக் குறிக்கும். மற்றொரு பாதியும் இணைந்தால் தான் அது முழுமையாகும். அப்படி இரு பாதியும் ஒன்றிணைந்து உள்ளதை அருத்த இணை என்பர். அது மருவி அருச்சனை என்றும் வடமொழியில் அர்ச்சனை என்றும் ஆகியிருக்கிறது. ஒரு பாதியை வடமொழி என்றும் மற்றொரு பாதியை தென்மொழி என்றும் கூறுவர். இந்த வடமொழி தென்மொழியாக பிளவு பட்டிருக்கின்ற நிலை நிறைவு பெறாத நிலை. நிறைவு பெறாத நிலையில் வாசி மலரானது எட்டுத் திக்கும் மேலும் கீழும் ஆகிய பத்து இடங்களின் தலைப்பட நிற்றலால் பத்துக் கதிர் உள்ளது என காணலாம். இடம் வலம் நடு ஆகிய மூன்றாக நின்றது இப்பொழுது முப்பதானதைப் பார்த்தோம். இந்த முப்பதிலும் மனம் ஒவ்வொன்றிலும் பத்துக் கதிர்வீசி முந்நூறு ஆக நிற்கும். ஆகக் கூடியது (௩ ௩௰௩) முந்நூற்றி முப்பத்தி மூன்று. இந்த முந்நூற்றி முப்பத்தி மூன்றும்ஒரு கலையில் பொருந்தி நிற்க அக்கலையான வாசிமலர் தொளாயிரத்து தொண்ணூற்றி ஒன்பதாக (௯௲ ௯ ௱ ௯) மூன்றில் அமையும். ஆக ஆயிரத்திற்கு ஒன்று குறைகின்றது. அக்குறைவை நிறைவு செய்தால் அருத்தனைப் பூர்த்தி ஆகும். பூர்த்தி செய்ய மலரைத் தேடிப் பார்க்க வேண்டில் ஈண்டு கூறிய

**இலையில்லை பூவுண் டினவண் டிங்கில்லை**
**தலையில்லை வேருண்டு தாளில்லை பூவின்**
**குலையில்லை கொய்யும் மலருண்டு சூடுந்**
**தலையில்லை தாழ்ந்த கிளைபுல ராதே.**

என்ற தூய மலர் எங்கும் கிடைக்காது. ஆதலால் அதை நிறைவு செய்ய விழி மலரை ஒன்றாக்கினால் முதற்ப் பொருளுடைய திருவடியை அது சாரும். அப்படிச் சாரும் பொழுது சக்கிராகாரமாகிய சுதரிசனம் கிடைக்கும். வாசி மலர் கண்மலராகும். இந்த சுதரிசனத்தால் வினைப் பகை எவற்றையும் வெல்லும் ஆற்றல் கிடைக்கும். இதையே ஞான சாதன விளக்கச் சரியையாக திருமால் சக்கராயுதம் பெற வேண்டி இறைவனை

அருச்சித்து வருங்கால் ஒரு மலர் குறையக் கண்டு அம்மலர் எங்கும் தேடி கிடைக்காமையால் தனது விழியை மலராக வைத்து அருச்சித்தான். சுதரிசனம் சக்கரம் கிடைத்தது என்று சரியை நூல் செப்பும் இதையே அப்பர் சுவாமிகள்

ஓவாத மறைவல் லனு மோதநீர் வண்ணன் காணு
மூவாத பிறப்பி லாரு முனிகளா ணுர்களேத்தும்
பூவான மூன்றும் முந்நூற்றறுபது மாகு மெந்தை
தேவாதி தேவ ரென்னுந் திருச்செம் பொன்பள்ளியாரே.

இதில் பூவான மூன்றிற்கு நமக்கு விளக்கம் தரும் வண்ணம் முந்நூற்றறுபதுமாகும் என்று கூறுகின்ருர். ஒரு நாழிகைக்கு முந்நூற்றறுபதாக ஓடி நிற்கும் சுவாசம் தான் மலர் என்றும் அது மூவாத பிறப்பிலாரும் முனிகளாணுர்கள் ஏத்தும் பூவான மூன்றும் என்று அதன் சிறப்பை நமக்கு எடுத்துக் காட்டுகின்ருர். இதன் கிரியையாகவே ஆயிரம் மலர் எடுத்து வடமொழி தென்மொழியாகிய ஒன்றிரண்டான மொழியால் ஆயிரம் நாமவளி சொல்லி நாம் அருச்சிக்கின்ரேம். வடமொழியும் தென் மொழியும் ஒன்றுகூடும் போது உயிர் பூக்கலே ஒன்று படலால் அது ஆயிரமாகிறது. அப்பொழுது ஒளி வட்டத்துள் இறைவனைக் காணும் சுதரிசனமாம் தீபாராதனை காணலில் சுதரிசனம் கிட்டுகின்றது. இதுவே இலேயில்லே பூவுண்டு என்று சொல்லும் திருமந்திரத்தில் வெளியுலகில் காணக் கிடைக்காத சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

இதில் சூக்கும உரை ஞான நூலில் பூசரி முத்திரை எனக் கூறுவர். பூ ஒன்று குறைவதை சரி செய்து ஆயிரம் ஆக்குவதால் விழி இரண்டையும் புருவ மத்தியத்தை நோக்கிச் செய்யும் சாதன நிறைவை பூசரி முத்திரை என்று கூறும்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

கிரியை : சாதன விளைவின் தனிப்பயன் சாற்றியது

அக்கரை நின்றதோர் ஆல மரங்கண்டு
நக்கரை வாழ்த்தி நடுவே பயன்கொள்வர்
மிக்கவ ரஞ்சு துயரமுங் கண்டுபோய்த்
தக்கவர் தாழ்ந்து கிடக்கின்ற வாறே. ௩௰௪ (34)

அக்கரையில் நிற்கின்றேன் ஆலமரத்தைக் கண்டு திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளை வாழ்த்தி நடுநின்ற பயனையடைய வேண்டும் அவ்வாறு செய்பவர்களே முதன்மை யாளராவார்கள். அல்லாதோர்

முழுத் துன்பத்தை யடையத் தாழ்ந்து கிடக்கத் தக்கவர் ஆவார்கள் என்று ஆகமச் சித்தர் கூறுகின்றூர் இதில் இக்கரையெது அக்கரையெது அக்கரையில் நிற்கின்ற ஒரு ஆலமரம் எது அந்த மரத்தில் இருக்கின்றூர் சிரித்துப் புரமெரித்தவர் என்று கூறுகிறூரே அப்படிக் கடவுளை காண முடிந்தால் ரொம்பவும் நல்லதாய் போய்விட்டதே அவரை வாழ்த்திப் பயன்கொள்ள அஞ்சவா செய்வோம் அப்படிச் செய்து மிக்க வராகாவிட்டால் தாழ்ந்து கிடக்க தக்கவராக வேண்டும் என்று ஆலமர் கடவுளைக் காண வற்புறுத்துகிறூரே என்று நினைக்கத் தகும் சூனியத்திற் றேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

இக்கரை கீழ்மூலம் அக்கரை மேல்மூலம் கீழ்மூலத்தினின்றும் மேல்மூலம் செல்வது தான் வளிநிலைச் சாதன நிறைவு அவ்வாறு சென்றுல் ஆலமர் கடவுளைக் காணலாம் அவர் சிரித்தால் முப்புரம் எரியும் விழித்தால் காமன் எரிந்து சாம்பலாவான் முப்புரமாகிய மும்மலகாரியமும் உயிர் மயக்காகிய காமமாம் மன்மதனும் எரிந்தால் அடைய வேண்டிய பயனை யடைந்தவராவோம் அப்படி இக்கரை கடந்து அக்கரை யேறுவதற்கு அதற்கிடையில் நடுவே நிற்பவர்கள் அறுவர் உண்டு. அந்த அறுவர்களே ஆறு சமயக் கடவுள்கள் அவர்கள் முறையே கணபதி பைரவர் சித்திரக் கூற்றன் வீரபத்திரன் முருகன் சாத்தன் என்பவர்கள் இவர்கள் அறுவரும் உயிருக்குறுதியளிப்பவர்கள். இவர்களுடைய ஆற்றல்மிக்க தெய்விகப் பெரும் பேறு பெற்று இவ்வறுவருக்கும் தலைவனுகிய நக்கனுரின் பற்றுடைய வராளுேரே மிக்கவர்கள். இதையே அக்கரை நின்றதோர் ஆலமரங் கண்டு நக்கரை வாழ்த்தி நடுவே பயன்கொள்வர் மிக்கவர் என்று கூறுகிறூர். இதில் அக்கரை நின்றதோர் ஆலமரம் பிண்டமாகிய உடம்பில் நின்று அண்டமாகிய சிரத்திடை மண்டிக் கிடக்கும் தொடர் நிலை கருவிக் கூட்டம் அதற்கிடையில் நின்ற ஆருதார மெய்ப்பொருளாளர்களே ஆறுசமயக் கடவுளாயவர்கள் வளிநிலைச் சாதனத்தில் இவ்வாருதாரச் சார்பு நிலைத்திரங் கொண்டு மேற் சென்றடைந்து பிரம நிலையை யடைதலே நக்கரை வாழ்த்தி நடுவே பயன்கொள்ளும் மிக்கவராதல். இப்படிக் கில்லாமல் பிறப்பையும் இறப்பையும் தந்து ஆள்நவ மலத்துள்ளழுந்தி விதியாய் விளைவாய் விளைவின் பயனுகி கொதியாய் வருகூற்றுவனைச் சந்திக்க வைக்கும் திசாதிபர்கள் பிரமன் அரி உருத்திரன் மாகேச்சுரன் சதாசிவன் என்னும் ஐம்பெருந்தலைவர்கள் என ஆருதாரத்தின் புறத்தில் நிற்கும் கடவுளாதியவர் சாருபவர்கள் ஆள்நவ மலம் அளிக்கும். விதியும் விளைவும் விளைவின் பயனும் வெம்மைக் கொதிப்பும் நமனும் தரும் ஐ வகைத் துயரத்தையும் கண்டு போய்த் தாழ்ந்து கிடக்கத் தக்கவர்களாவார்கள் என்று நமக்கு ஞான சாதனப் பயனையும் உலகாயத வாழ்வின் தாழ்வையுங் கூறுகின்றூர். இதில்

ஆருதாரப் புறநிலைப் பேற்றைத் தரும் புறச் சமயக் கடவுள் ஆனோர்கள் அயன் அரி யாதியோர்கள் என்றும் ஆருதார நிலையின் அகத்தில் நிலை பெற்றுப் புறநிலைப் பேற்றிற்குரிய தீமையை யழிக்கும் அகச் சமயக் கடவுளானோர்கள் கணபதி வைரவனுதியாய் அறுவர்கள் என்றும் கூறுவதை நோக்குக இதில் அகச்சமயம் ஆறு புறச் சமயம் ஆறு ஆகிய காரணமும் ஆறுசமயம் இவைகள் தாமென்றுங் கூறுவது நோக்கத் தக்கது தற்கால நடைமுறையில் அகச்சமயம் ஆறு புறச்சமயம் ஆறு என்பதைக் காட்டுவதிலேயே பிழைபாடு காணக்கிடக்கின்றது. சாத்தான் என்னும் ஐயனுரைக் குறிப்பிடத் தவறி சாக்தம் என்ருல் சக்தியை வழிபாடு செய்யும் மதம் என்று குறிப்பிட்டுள்ளார்கள் மேலும் அறுசமயத் தலைவர்களுள் சூரியன் ஒருவன் என்று வைத்து ஷண்மதஸ்தாபனம் செய்துள்ளதாய்க் கூறுகிருர்கள். சூரியனைச் சமயத் தலைவனுக வைத்தால் அவனைவிட வலிமை வாய்ந்த கோள்கள் இருக்கின்றனவே அதை எப்படித் தள்ள முடியும் பஞ்ச கர்த்தாள் என்னும் ஐம் பெருந்தலைவர்கள் முற்கூறியவர்களே என்பதை மறுக்க முடியாது அவர்கள் புறத்தில் நிற்பவர்களே என்பதையும் மறுக்க முடியாது புறச்சமயம் ஆறிற்கு எதிரிடையாய் நிற்கும் அறுவர்கள் கணபதி முதலாயவர்களே என்பதும் நன்கு புலனுகும். இதை ஆழ்ந்து நோக்கினுல் சமயத் தலைவர்கள் என்று பெயர் வைத்துக் கொண்டுள்ளார்கள் குளறுபடிகள் வெட்டவெளிச்சமாய்விடும் இதுவே சித்தர் பெருமானுர் காட்டிய சூனியத்திற்கு நேடிக்கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரையாம்.

குறிப்புரை : ஆலோன் என்று தண்கதிர்பரப்பித் திரிதலாற் சந்திரனுக்கு ஒருபெயருண்டு சந்திர மண்டலம் சிரம் சிரத்திடை நெருங்கிப்படர்ந்து விரிந்து நின்று அண்ட வெளி படராமல் மறைக்குந் தன்மையுடையதாக நெருங்கிக் கருவி கரணங்கள் நிலைபெற்றுக் கீழ்மூலத்தைச் சார்பு கொள்ளலால் அதை ஆலமரம் என்று கூறினுர். உயிர்க்குயிராம் பொருள் அங்கிருந்து கீழ்மூலத்தை நோக்குவதால் அதை ஆலமர் கடவுள் என்று குறிப்பிட்டார்.



அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

கூப்பிடு மாற்றிலே வன்கா டிருகாதங்
காப்பிடு கள்ளர் கலத்துநின் றுருளர்
காப்பிடு கள்ளரை வெள்ளர் தொடர்ந்திட்டுக்
கூப்பிடு மீண்டதோர் கூறைகொண் டாரே. ௩௰௫ (35)

கூப்பிடு தூரத்தில் அடர்ந்த வலிய காடு இரண்டு காதம் இருக்கின்றது. காவல் செய்கின்ற திருடர் அக்காட்டில் கலந்தே நிலை கொண்டிருக்கின்றார்கள். காவல் செய்கின்ற கள்ளரை கள்ளமற்ற சிந்தையை உடையர் தொடர்ந்திட்டவராய் கூப்பிடுகின்றார். கூப்பிட்டு மீண்டுள்ள தான ஒரு புடவையை கொண்டார் என்று கூறுவது கூப்பிடும் வழியில் அடர்ந்த காடு இரண்டு காதம் இருக்கின்றது. அக்காட்டில் காவல் செய்கின்ற திருடர் கலந்து நிலைபெற்றிருக்கின்றார்கள். திருடர் பயம் இல்லாமலும் திருடர்கள் திருட வந்தால் அத்திருடர்களை பிடிப்பதற்காகவும் காவல் போடுவது வழக்கம். இதில் திருடரே காவல் செய்கின்றார்கள் என்று கூறுவதும் அப்படி காவல் செய்யும் கள்ளரை வஞ்சமறியாத மனதுடையார் தொடர்ந்திட்டு கூப்பிடும் செயல் உள்ளவராய் இருக்கின்றார் என்பதும் பொருந்தாத ஒன்று. அப்படி கூப்பிட்டு ஒரு புடவையை மீட்டுக் கொண்டார் என்று கூறுவது நடைமுறையில் பொருத்த மற்றதாக இருக்கின்றது. இவ்வாறு உண்டென்று கள்ளமறியாத உள்ளம் உடையவராம் ஆகம காப்பியத் தலைவர் கூறுகின்றார். இவ்வாறு சொல்லும் சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சம்பாதனை உரை வருமாறு.

கூப்பிடும் வழியாம் கேள்வி கொள்ளும் பொறியாகிய முல்லைநிலத்து இயல்புடைத்தாய இரண்டு காதுகள் இருக்கின்றன. முல்லைநிலமாகிய வலிய காடு என்று செவியைக் கூறுவது இசைப்பாட்டு இயற் செறிவில் மாவும் விளமும் காயும் கனியும் தன்பூவும் தண்நிழலும் நறும்பூவும் நறுநிழலும் நாள்மலரும் காசு பிறப்புற நெருங்கி காணப்பெறுவதால் செவியாகிய பொறிவாயிலை கூப்பிடுமாற்றிலே வன்காடு இருகாது என்று கூறுகின்றார். அந்த காட்டகத்து காவலாளர்களாக கலந்து நிற்கும் திருடர் உருவபடிவங் கொள் பொறியாகிய கட்புலனை உவமித்துக் கூறுகின்றார். நமது ஐம்பொறி வகையில் காவலுக்கு உள்ளாக்கப்பட்ட பொறி கண் இணையே ஆகும். காவலுக்கு சிறப்புச் சொல்லும் போது கண்ணினை இமை காத்தது போன்று என்று சொல்வதுண்டு. அக்கண்ணானது மனோமய கோசம் மனமானது எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணும். எண்ணிய வற்றையெல்லாம் பொறியில் சொல்ல முடியாது. சொல்லவும் கூடாது. அவ்வாறு மறைக்கப் பெறும் தன்மைஉடைமையாலும் உருவத்தில் கருநிறம் கொண்டிருக்கின்ற மையாலும் திருடனுக்கு கரியவன் என்ற ஒரு பெயர் உள்ளமையாலும்

காப்பிடு கள்ளர் கலந்து நின்றுருளர் என்று மனம் கரந்துறையும் மனோமய கோசமாகிய கண்ணைச் சொல்லுகின்றார். கள்ளர்கள் வசிக்குமிடம் கரைந்துறையுமிடம் கானமே ஆகையால் அக்கானமாகிய ஒலிகொள் பொறியினால் கண்விழிப்படையுமாதலாலும் கூப்பிடு மாற்றிலே வன்காடு இருகாதங் காப்பிடு கள்ளர் கலந்து நின்றுருளர் என்று கூறுகின்றார். இவ்வாறு காப்பிடும் கள்ளராகிய மனதை தொடர்ந்து மறைப்பனவை மறைத்து வெள்ளிடையாக சொல்லுவனவற்றை மட்டும் சொல்லுதலால் அச்சொல் மனம் நினைப்பிற்றொடர்பு கொண்டுள்ளதாகையால் காப்பிடு கள்ளரை வெள்ளர் தொடர்ந் திட்டு என்று கூறுகின்றார். இவ்வாறாகிய கேள்வியையும் கேள்வியைக் கொண்டு சிந்திக்கும் மனத்தையும் இவற்றின் தொடர்பால் எழுந்த சாத்திரங்களை தவிர்த்திட்டு செவிப்புலன் கொள்ள ஞானாசிரியன் உபதசத்தைக் கொண்டு மனதை கூப்பிடும்படி செய்வதாகிய இருவிழி ஒன்று கூடும் கூப்பிடுதலாகிய புருவ நடு நோக்கம் உடையதாய் செய்ய பாறையிற் பட்டு பறக்கின்ற சீலை போல் செல்லும் வாசியானது சென்ற அளவில் மீளுவதாகிய செயலை உடையதாய் சாதனம் பயில்வோனை கலைஞனுக்கும். கலைஞன் நிர்வாணம் தீர்க்கை பெற்றவன் ஆவான். இதையே கூப்பிடு மீண்டதோர் கூறை கொண்டாரே என்று சொல்லுகின்றார். இது சூனியமாய் தோன்றிய ஆகம மந்திரத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

இதில் கேள்விக்கு இடமாகிய காதை காடு என்றும் அக்கேள்வியால் விழிப்படையும் உருவகப் புலனாகிய கண்ணை கள்ளர் என்றும், அக்கண் இடம் கொண்ட மனோமய விளைவை மனத்தொடர்பால் வெளியிடும் வாக்கை வெள்ளர் என்றும் சொல்வதோடு இவை தன் போக்காய் போகாமல் நிலை நிறுத்துவது ஆய செயலை சுழிமுனை நோக்கம் என்றும். அச்சுழிமுனை நோக்கமாகிய கூப்பிடுதலால் பெறும் பேறு கலையானது கலந்து நீளாமல் சிலையாய் அமைந்து நிர்வாணம் தீர்க்கையையும் செவி கண் வாக்கு நாசி ஆகிய பொறிபுலன்களைக் கொண்டு உருவகப் படுத்தி நமக்கு ஞானவிளக்கம் தரும் திருமூலமந்திர உபதேசம் வியத்தற்குரியதாகும்.

மனதின் அடிச்சுவடாம் தடம் பதியும் இடமே மூலை = (வசிட்டர்)

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

கொட்டியும் ஆம்பலும் பூத்த குளத்திடை
எட்டியும் வேம்பும் இனியதோர் வாழையுங்
கட்டியுந் தேனுங் கலந்துண்ண மாட்டாதார்
எட்டிப் பழத்துக் கிளைக்கின்றவாறே. ரு-மசா (36)

களைப்பையும் விடாயையும் நீக்கிக் குளிர்ச்சியைத் தரும் ஆம்பல் மலரும் கொட்டிப் பூவும் நிரம்பி பூத்திருக்கின்ற குளம் உளவாய் இருப்ப அதை அடைந்து வாழைப் பழமும் கட்டித் தேனும். கிடைப்பனவாய் அமைவதைக் கலந்து உண்ணாமல் (எட்டிப் பழத்தை) (காஞ்சிரம் பழத்தை) அருந்துவான் வேண்டி முயற்சித்து இளைக்கின்றார்கள். அவர்கள் முயற்சி உண்ண முடியாத காஞ்சிரம் பழத்தையும் வேப்பம் பழத்தையும் ஏய்தக் கூடியதாக இருக்கின்றது என்பது ஆகமத் திருமுறை அண்ணல் வாக்கியம்.

களையாறுவதற்கு சிறந்த தண் நிழற்பொய்கை இருக்கும் பொழுது குளிர்ந்த வாழைமரமும் கூடு கட்டி உள்ள தேனும் இருக்கும் பொழுது இவற்றைத் தவிர்த்து வேம்பையும் அதிலிலும் கைப்பாகிய எட்டிப் பழத்தையும் விரும்ப முயற்சிச் செய்து இளைப்பவர்களை எங்குமே காண முடியாது. அப்படியிருக்கின்றார்கள் என்று சொல்லும் சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் உரை வருமாறு.

சூரியனைக் கண்டு தாமரை மலர்வது போல் விண்மீனையும் மதியையும் கண்டு இருளில் மலர்வது அல்லியும் கொட்டியும் அல்லாகிய இருளில் மலர்வதாலேயே அதற்கு அல்லி என்று பெயர். இருள் சூழ்ந்த இடம் மூலம் அதில் அமைந்து அடங்கும் வாசி குளம். அந்த இடத்தை அணுகினால் பிறந்து இறந்து உழலும் தாபமாகிய களைப்பு நீங்கும் மேலும் தாபசோபத்தை மாற்றும் வாழைமர நிழலும் மதுரம் மிகுந்த வாழைக்கனியும் கட்டித் தேனும் கிடைக்கும் என்று கூறுவதில் எட்டியும் வேம்பும் என்பது சூரியசந்திரனாகிய வாசி நடையை குறிப்பிடுவதாகும். அதில் எட்டிக் கனி சூரியன் வட்ட வடிவமும் நுகர முடியாத சுவையும் சூரியனை குறிக்கின்றது. அழகிய வெண்மஞ்சள் நிறமும் கசப்பைப் போர்த்துள்ள இனிப்பும் பொருந்திய பழத்தை தந்து பிறை அன்ன வடிவங் கொண்ட இலையையும் உடைத்தாய் இருக்கின்றபடியால் சந்திரனுக்கு ஒப்புமையாக வேம்பைக் கூறுகின்றார். இந்த எட்டியையும் வேம்பையும் பிடித்து தண் நிழல் தரும் பொய்கையாகிய மூலாதாரம் என்னும் குளத்தை நாடினால் வாழையுங் கட்டியுந் தேனும் கலந்துண்ண கிடைக்கும் என்பது சூரிய சந்திரன் இரண்டும் ஒன்றாய் கூடிய வாசியும் மனமும் பிராணனும் ஒன்று கூடி நிற்பதைக் குறிக்கும். இந்த மூன்றும் ஒன்று கூடினால் அது ஐந்தாகும். அதுவே பஞ்சாமிர்தம். எவ்வாறு எனில் ஆன்மா என்னும் பசுவாகியது தரும் புனிதப் பொருள் பாலும், நெய்யும்,

மனமானது தரும் புனிதப் பொருள் கூட்டுத்தேன். இரண்டு ஒன்று கூடிய வாசியானது தரும் பொருள் சர்க்கரையும் பழமும். அழகிய குளிர்ந்த பொய்கையும் இனிமை மிகுந்த பஞ்சாமிர்தமும் வாய்ப்பனவாக கிடைக்கச் செய்வது பிராணாயாம சாதனைச் சித்தி. இதை விடுத்து உலகாயதத்தை தழுவி விரும்பி நிற்பது எட்டிக்கனியை புசிப்பதற்கு பெரும் முயற்சி எடுத்து இளைப்பதை ஒக்கும். இதையே எட்டியும் வேம்பும் இனியதோர் வாழையுங் கட்டியுந் தேனுங் கலந்துண்ண மாட்டாதார் எட்டிப் பழத்துக் கிளைக்கின்றவாறே என்று கூறுகின்றார். இது பஞ்சாமிர்தமாக அமைவதால் மூலாதாரத்தின் மேலுள்ள பாகமாகிய ஐந்து நிலையங்களும் வனப்பும் செழுமையும் பெற்று ஆக்கத்தைத் தரும். இதன் கிரியையாகவே ஆறுமுகமும் ஆறு எழுத்தும் ஆறுதளமும் கொண்ட தெய்வத்திற்கு பஞ்சாமிர்த அமிழ்த ஏகம் செய்யப்பெறுகிறது. இதன்பயன் அவன் என்றும் இளையவன். தென் தமிழ் புலவன். குழந்தை குறுமுனியை சிசு இயனாய் கொண்டவன். அந்தப் பேறு பெரும் தகுதியும் உடையவராகலாம் என்பதே அதன் பயன். இது தேடக் கிடைக்காத சூனியமாம் தேட்டத்தில் தேடிக் கண்ட சூனிய சம்பாதனை உரை.

இதில் வேம்பினை சந்திரனுக்கும் காஞ்சிரம் பழத்தைச் சூரியனுக்கும் காட்டியதில் மேலும் உள்ள சில விளக்கங்கள் சந்திரன் பதினாறு கலையை உடையவன் போன்று சந்திராகாரமாய் தோன்றும் இலையானது எட்டெட்டும் பதினாறு இலையாகவே வேம்பின் இலைகள் முதிர்ந்த பருவத்தில் காணப் பெறும்.

எட்டிப்பழமும் அதன் உள்ளீடாகக் காணும் வித்து முழு வட்ட வடிவமாய் ஒளி உள்ளதாய் (பிரகாசம்) கதிர் ஒளி போன்ற ரேகை உடையதாய்க் காணப் பெறும்.

இவை இரண்டொன்றாய்க் கூடிய வாசி நிலையில் சந்திரனுடைய தன்மை கருப்பஞ் சாராகவும் சூரியனுடைய தன்மை கருப்பஞ் சாற்றுக் கட்டியாகிய சர்க்கரைக் கட்டியாகவும் அமைவதை நோக்குங்கால் மதுரம் பொழியும் குளிர்நிலையுடைய தன்மையாய்க் கருப்பஞ்சாறு இருப்பதையும் அக்கருப்பஞ்சாறு வெம்மை பொருந்தி பளிச்சிடும் நிறம் உடையதாகிக் கண்டு கண்டாய் உள்ள நிலையில் கற்கண்டாயும் மேலும் அஃது உதய சூரியன் போன்று பழுப்பு நிறம் பொருந்தி இளநிலையில் இருப்பதே சர்க்கரை என்றும் கூறப்பெறுகிறது. மனதைத் தேன் என்றும் உவமித்ததற்கு காரணம் காணும் பொழுது வாயில் இனிமையாகிய ஒலிநயமும் அகப்புறத்தில் விடமும் பொருந்திய தேனீயினுடைய தன்மையாய் சேமநிதி வைப்பு சிறிது சிறிதாகக் கூடும் படி கூட்டினால் தான் பெரிதாக மாறும் என்ற கருத்தைக் கொண்டு தேன் சேகரிப்பது போன்று பொருளைச் சேமித்து வைத்து அப்பொருளைத் தான் பயன்படுத்தாமல் பிறருக்கும் கொடுக்காமல் தன் சந்ததிக்குக்கென

வைத்திருந்து, கூடுதல் விளைவு கருதி - காப்புச் செய்திருக்கும் பொழுது கண்டார் அதை ஒட்டித் துரத்திவிடுத்து இழிக்கும் தன்மை உடைய ஈயினத் தன்மையாம் ஈனத்தன்மை, மனத்திற்கு உடைமையால் மனத்தைத் தேன் என்றும், மனமும் வாசியும் கூடிநிற்கும் இயலில் தோன்றும் பிராணனாகிய பசு களங்கமற்ற தூய்மை உடையதாகிய பாலினையும் அதன் தெளிவாகிய நெய்யினையும் தருவதால் அந்நிலையை பசு என்னும் பிராணனாகவும், மனம் கனிந்தவிடத்து பணிவும் இனிமையும் கரணநோக்கும் இயற்கையும் கொள்வதால் வாழைக் கனியைக் கூறுகின்றார். எனவே மனதிற்கு ஈனத்தனம் பொருந்திய நிலையாய் தேனினையும் உயர்நிலைப் பண்பு கொடை இடத்து வாழைக்கனியையும் குறிப்பிடப் பொருத்தம் மிக்கதாயிற்று இவ்வைந்தும் ஒன்று கூடியது பண் சார்பு உள்ள ஐந்தாம் பஞ்சாமிர்தம் ஆயிற்று என்பது உள்ளுரை விளக்கம்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

கிரியை : வாசி வித்தையின் மாண்பையுரைத்தது

**பெடைவண்டும் ஆண்வண்டும் பீடிகை வண்ணக்**
**குடை கொண்ட பாசத்துக் கோலமுண் டானுங்**
**கடைவண்டு தானுண்ணுங் கண்கலந் திட்ட**
**திடை வண்டு தான்பெற்ற தின்பமுமாமே.** ௩௰௭ (37)

துணைபிரியாதிணைந்த வண்டுகளிரண்டு குடைவு செய்யலுற்றன அதில் தவத்தோர் பீடத்தின் சாயை படரலுற்றது.

அப்படிப் பாசத்தின் சாயைப் படிவங் கொண்ட ஆண்வண்டு மற்றும் திரிபுற்ற வண்டுடன் கலந்து மதுவருந்தியது அப்படி யருந்துங் காலத்தில் ஒன்றித்துக் கலந்து விட்டதாம். ஆனால் கலவி இன்பத்தை அவ்விரண்டு வண்டிற்கும் இடையில் நின்ற வண்டுதான் அடைந்ததாம் இது மூலாகமம் மொழிபவர் கூற்று இது காணக் கிடைக்காத சூனியம் இதிற்றேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

இதில் சரம் பார்க்கும் நுணுக்கம் கூறுகிறார்

பிறந்த நாட்குறிப்பில் புறப்புற நிலையில் காணும் நவக்கோள் நிலையைக் கணித்துக் காண்பது போன்றுள்ளது. வாரசரம் தற்காலக் கோள்சாரம் போன்றது. சரசாரமாகிய நாழிகைப் பகுப்புச் சரம் அதில் வாசி மலரைச் சார்ந்து சஞ்சரிக்கும் சஞ்சரிகமாம் வண்டினத்தில் ஆண்வண்டாகிய சூரியனும் பெண் வண்டாகிய சந்திரனும் சார்பு கொண்டிணைந்து நடை கொள்ளுங்கால் பஞ்சகர்த்தர்கள் என்னும்

ஐம்பெருந்தலைவர்களது நிலையாம் ஆறுதாரத்தைச் சார்புற்று நடைகொள்ளல் அவ்வண்ணத்தை சந்திர சூரியகலைகள் பொருந்தி விளங்குதலைப் பெடை வண்டும் ஆண் வண்டும் பீடிகை வண்ணம் என்று காட்டுகிறார். அதில் ஆதார நடையேற்றத்தை வண்டு குடைந்து கொண்டு செல்வதாய்க் காட்டுகிறார். அப்படி நடைகொள்ளும் சரம் என்பது வெறுங்காற்றல்ல அதில் பாசமாகிய மனமும் பசுவாகிய ஆன்மாவும் கலந்துள்ளது என்பதை பாசத்துக் கோலம் உண்டஆணும் என்று விளக்குகிறார். அப்படி இரண்டுங் கலந்துள்ள வாசியைக் கடைவண்டென்று கூறுவது கடைதல் முழுச் சுற்ருய்ச் சுற்ருமல் மறுகுறச் சுழலுமியற்கையுள்ள போதல் வருதலாகிய சரசநடைக் குறிப்பு பொறிபுலன் நுகர்ச்சி கலந்து மதுவுண்ணல் அப்பொழுது வாசி மலராகிய சுவாச கதியாம் சரநடைப் போக்கில் மனமும் ஆன்மாவும் ஒன்று கூடுநிலையே கடைவண்டு தானுண்ணுங் கண்கலந்திட்டதாம். அப்படிக் கலந்த இன்பத்தை இரண்டு வண்டிற் கிடைநின்ற வண்டேயடைந்த என்பது நடுநாடியாம் சுழிமுனையிற் செல்லும் வாசியே கூடுதல் என்னும் கூட்டமாம் யோகத்தின் விளைவாகிய இன்பத்தைத் தருவனவாயிருக்கும் குறிப்பு இதையே இடைவண்டு தான்பெற்ற இன்பமும் ஆமே என்று கூறுகிறார்.

இவற்றின் தொகுப்புரை

சரம் வாரசரம் என்றும் கலைநிலைச்சரம் என்றும் உபதச சாதனவியற் சரம் என்றும் மூவகை இயல்புடையதாம். வாரசரம் வாராதிபர்கள் தலைப்படத்தோன்றி ஆறுதாரத்தில் இருபத்தோராயித்தறுநூருக தொண்ணூற்ருறு தத்துவச் சார்பு பெற்றுப் பூதிகாகாரமான சந்திரனுடைய இயற்றன்மையைக் கொண்டு பதினறு பிரிவாக நடைகொண்டு நின்று அன்ருட நிகழ்ச்சியைக் காட்டும் இதனுற் பெறப்படுவது தத்துவ ஞானம் இதில்வாசி நாடியைக் கூடி நிற்கும். இரண்டாவது கலைநிலைச்சரம் இதுஐம்பூத வியல்பைக் கொண்டுள்ள நாழிகை ஐந்தால் பன்னிரண்டு கலைகளையுடைய சூரியன் என்ன பன்னிரண்டு சமநிலைப் போதாகிய சாமக் கூறுபாட்டையுடையதாய் சூரியனுக்கு முன்னின்று சூரியனே தானெனக் காட்டும் மாயா ருபமுடைய புந்தியாம் புதனென விளங்கும் கலைஞனென அவ்வப் போது நிகழ்வனவற்றை யெல்லாம் காட்டும் இதனுற் பெறப்படுவது கலை ஞானம் இதில் நாடியோடு கூடிய வாசி மனத்தைச் சார்ந்து நிறகும். மூன்ருவது உபதச சாதனவியற்சரம் குருமுகமாய்க் கிடைக்கப் பெற்ற சரசாதன விளைவால் நாடியில் வாசிலயங்கொள்ளலாற் ருேன்றும் தத்துவ ஞானத்தையும் தத்துவ ஞானத்தால் ஒடுக்கம் பெற்ற வாசி மனத்தைக் கூடலாற் கிடைத்த கலைஞானம் அறுபத்து நான்கையும்

பெற்ற மனம் ஆன்மாவைக் கூடிநிற்கும். இதனுற் பெறப்படுவது ஆன்ம ஞானம் இதில் வாசிலயம் மனேலயம் கொண்டுள்ளதாய் ஆன்மா விளங்கும். இவ்விளக்கம் பெற்ற ஆன்மா தொடர்ந்து பற்றி நின்ற பாச நீக்கம் பெறலால் அதுபிரமத்தோடு ஒன்றிவிடும். இதனுற் பெறப்படுவதே பிரம ஞானம் இதில் நாடியில் நிலைபெற்ற வாசியில் கதிர்பத்தாகவும் அவ்வாசி மனத்தில் ஒடுக்கம் பெறுங்கால் பதிற்றுப்பத்து நூருகவும் மனம் ஆன்மாவில் ஒடுக்கம் பெறுங்கால் நூற்றுப்பத்து ஆயிரமாய் இரவியெனெ விளக்கம் பெற்றுப் பிரமத்தைக் கூடுங்கால் நூருயிரம் ஆயிரமாகிக் கோடிக்கதிர் பெற்றுச் சிவசூரியன் விளங்கும். இவ்வாறு கூடப்பெறுவதாலே யோகம் என்பதாய் பேர்பெற்றுது யோகம் என்ருற் கூடுதல் என்று பொருள் இந்நிலையையே இடைவண்டு தான் பெற்ற இன்பம் என்று கூறுகிருர் ஆழ்ந்து நோக்குக. இதுவே வெளிப்பாழிற் றேடிக்கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

தட்டத்து நீரிலே தாமரை பூத்தது
குட்டத்து நீரிற் குவளை எழுந்தது
விட்டத்தி னுள்ளே விளங்கவல் லார்கட்குக்
குட்டத்தி விட்டதோர் கொம்மட் டியாமே. ௩௰௯ (39)

தட்டத்து நீரிலே உண்கலத்தில் உள்ள நீரில் தாமரை மலர்ந்திருக்கின்றது. நிலத்தில் உள்ள ஏந்தலாகிய பள்ளத்தில் குவளை மலர் தலை தூக்கி நிற்கின்றது. இவ்விரண்டையும் ஒன்ருய் இணைத்து விட்டமிட்டு விளங்கும்படி செய்பவர்கட்கு மூடிமறைத்து காக்கப் பெற்ற கொம்மட்டி மாதுளையாகும் என்று விளைவறிவித்தகர் கூறுகின்ருர். இது எங்கும் காணக் கிடைக்காத அதிசய நிகழ்ச்சி உணவு உண்ணும் கலத்தில் உள்ள நீரில் தாமரை பூப்பதும் குட்டம் என்னும் கரையற்ற ஏந்தலில் குவளை மலர் எழும்பி நிற்பதும் இது இரண்டையும் நிலை குன்ருமல் விளங்க வைப்பதற்கு விட்டமிடுதலும், அப்படி விட்டம் இட்டதில் அது கொம்மட்டி மாதுளையாக மாறுவதும் நினைத்தும் பார்க்க முடியாத அதிசயக் காட்சியாம் சூனியம். அச் சூனியத்தில் இவ்வதிசயக் காட்சியை தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

தட்டமாகிய உண்கலம் என்பது கீழ்மூலமாகிய மூலாதாரம். அகரம் முதல் னகரம் ஈருக உள்ள அன்னஅத்துவா ஆகிய வாசியை உண்பதற்கு ஏற்ற கலமாக மூலாதாரம் யோக சாதன விளைவில் வாசி தாரணையில் அமைவதும் மேல் மூலாதாரம் குட்டத்து நீரென கூறும் வண்ணம் அமைவு பெற்று நிற்பதில் குவளை எழுந்தது என்று கூறுவது 'கு' என்ருல் இன்மையைக் குறிக்கும் அட்டம் என்ருல் பக்கத்தைக் குறிக்கும். ஆகவே

நீர் தேங்குவதற்கு கரை கட்டாத ஏந்தலில் உள்ள நீரில் குவளையெழுந்தது என்பது கு என்னும் பூமியில் வளை தோண்டினால் ஒரு பக்கம் துறவையும் ஒரு பக்கம் அடைப்புமாகவே இருப்பது போன்று பொறிவாயில்கள் அமைந்துள்ள நிலையத்தையும் நீராகிய வாசி அதிற் கட்டுண்டு நில்லாமல் பறந்து பட்டுக்கிடப்பதை தன் அகத்துக் கொண்ட மேல் மூலாதாரத்தை குட்டத்து நீர் என்றும் குவளை என்றும் கூறுகின்றார். இதுவே தட்டத்து நீரிலே தாமரை பூத்தது குட்டத்து நீரிற் குவளை எழுந்தது என்று கூறும் தெய்வீக உலக காட்சி. இவ்விரு மலர்களையும் இணைத்து நிற்கும் விட்டமாகிய பிரம தண்டம் என்னும் முதுகுப் புறத்தில் தாரை கொண்டு அமைந்து விளங்கும் முள்ளந்தண்டின் தாரையில் அலைந்து வரும் தாரணையாக செய்வதால் வாசி தாரணை என்று கூறப்பெறும் விட்டத்தில் உள் விளக்கம் செய்பவர்களுக்கு விட்டத்தினுள்ளே விளங்க வல்லார்கட்கு என்று கூறுகிறார். இதில் விட்டத்தினுள்ள விளக்கம் தரவல்லார்களை வல்லார்கள் என்று கூறுவதால் மற்றயவர்கள் அல்லார்கள் என்று ஆகின்றது. அப்படி விளக்கம் பெறச் செய்வதின் பயன் மா என்னும் வண்டின் துளையென்ன பொறிவாயில் ஐந்துடன் ஒருமித்து கூடுதலாகிய நடுநிலைத்தானமாய் மேல்மூலம் விளங்குவதால் அதை பிரமரந்திரம் என்று கூறப்பெறுகிறது. அப்பிரமரந்திரம் நுழைவாயில் குறுகியும் அதன்புறம் விரிந்தும் இருப்பது போன்று மாதுளங் கனியும் அக இதழ் ஐந்து கூடிய ஒன்றாகி வித்து நிரம்பிய ஓர் உருவமாய் விளங்குதலையும் அவ்வித்து முத்து முத்தாக அடர்ந்து முத்தின் நிலையமாக இருப்பதாலும் அவ்வித்து விளைவைத்தரும் முளைகொள்ளாமல் இருப்பதாலும் முத்து நிலைப்பேற்றை கொம்மட்டி மாதுளை யென்று கூறுகின்றார். மேல்மூலம் போன்றே கீழ்மூலமும் ஐம்புலன் ஒடுக்கம் கொண்ட ஒன்றாகவும் அது திரி அக்கரங்களுள் மகாரம் பொருந்தியுள்ள துளையாகவும் வாசிவித்து செறிவு கொள்ளும் இடமாகவும் விளங்குவதால் அதையும் கொம்மட்டி மாதுளை யென்று கூறுகின்றார். மாதுளை அணிலால் சேதம் உறுவதை காக்கும் செயற்பாட்டை குட்டம் என்று கூறுகின்றார். குட்டு என்பது ரகசியம். ரகசியத்தை வெளிப்படாமல் காப்பது குட்டம். மேல்மூலம் கீழ்மூலம் இரண்டும் வெளிப்படை உறுப்பாய் அமைவு பெறாமல் எல்லாவற்றையும் புறமாய் அமைத்து காணும் நடுநிலைத்தானமாக இருப்பதால் அதை குட்டம் என்று கூறுகின்றார். அதில் அணி என்னும் வரிசை வரிசையாய் தோன்றும் ரகரத் திரிபாகிய வாசிநிலைப்போக்கை அணில் என்று மாதுளையை கெடுக்கும் செயற்பாட்டை மூடி மறைத்துக் காக்கும் செயற்பாட்டை குட்டம் என்று கூறுகின்றார். அது விட்டம் போன்ற நடுநிலைத்தானம் கொண்டு விளங்கும் பிரமதண்டத்தை விட்டம் என்றும் அதன்இரு புறத்திலும் உள்ள மேல்மூலம் கீழ்மூலத்தை

கொம்மட்டி மாதுளையென்றும் முத்தி நிலைப் பேருகிய பயனை கொம்மட்டி மாதுளை யென்றும் கூறுவதே குட்டத்திலிட்டதோர் கொம்மட்டியாமே என்பது திருமூலர் காட்டும் முத்திநெறி விளைபோதக் குறிப்புச் செய்யுள். இதுவே காணக் கிடைக்காத சூனியமாம் வெறும் வெளியில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

வளை யென்பது சங்கு அது இரு புறமும் வாயிலைக் கொண்டது. குவளை யென்ருல் நிலத்தில் தோன்றும் வளையென்று பொருள். ஒரு புறம் வாயிலை உடையதாக இருக்கும். அத்தன்மை வாய்ந்தது பொறிவாயில். அதை குவளை யென்று குறிப்பிடுகிருர். தாமரை குவிதலும் மலர்தலும் உள்ள இயற்கையைக் கொண்டு கீழ்மூலாதாரத்தை குறிப்பிடுகின்ருர். இது மேற் கூறிய அகப் பொருள் விளக்கம்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

கிரியை நில்லா வுடம்பின் நிலையை யுரைத்தது

*ஆறு பறவைகள் ஐந்தகத் துள்ளன*
*நூறு பறவை நுனிக்கொம்பின் மேலன*
*ஏறும் பெரும்பதி ஏழுங் கடந்தபின்*
*மாறுத லின்றி மனைபுக லாமே.* சo (40)

ஐந்து இடங்கொண்டுள்ளன ஆறுபறவைகள் நூறு பறவைகள் நுனிக்கொம்பின்மேலிருக்கின்றன ஏறிக்கடந்து செல்லத் தக்கன வான நிலையங்கள் ஏழினையுங் கடந்த பின்னரே எந்த மாற்றமுமில்லாமல் வீட்டையடையலாம் என்று மூலமூர்த்தி கூறுகின்ருர் மரத்தின் அடியிலும் நுனியிலும் ஆறு பறவையும் நூறு பறவையும் இருப்பதற்கும் ஏழுபெரும் பதியினை கடந்து வீடுபுகுவதற்கும் என்ன தொடர்பு எனக் காணப்படும் தோற்றமாம் சூனியத்திற் றேடிக்காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை யுரைவருமாறு.

ஆறு சாமங்கள் உண்டு. ஒவ்வொரு சாமமும் ஐந்து நாழிகைப் போதையடக்கி கொண்டுள்ளன. இதுஒருநாள் ஒடுங்கலையளவு நிலை. மரமானது இரு கூறுகளையுடையதாய் ஒரு கூறு சூரிய சந்திரகிரணங்கள் செல்லாத நிலையாகிய நிலத்திலும் மற்ருெரு கூறு சந்திராதித்தர் ஒளிக்கதிர் விரியும் வானவெளியிலும் இருக்கின்றன. இந்நிலையை நம்முடம்பில் கீழ்மூலத்திற்கும் மேல்மூலத்திற்கும் ஒப்பிட்டு மரம் எனக் கூறுகின்ருர். கீழ்மூலம் சூரியகலை செல்லாத இருள் மண்டலம். மேல் மூலம் சந்திராதித்தர் சஞ்சாரத்தால் வளம் பெற்றுநிற்கும் வான வெளியாகிய அண்டம் போன்றது அதனுலேயே இவ்விரண்டு நிலையங்களையும் அண்ட

பிண்டம் எனக் கூறுகிறார்கள். இதையே அருணகிரிநாதர் சூரியனுடன் சோம நிழலிவை அண்டாத சோதி மருவும் பூமி என்கிறார். இவ்வண்ட பிண்டங்களில் நிலைகொண்டிருக்கும் வாசியையே பறவை என்று கூறுகிறார். பறவை பறந்து செல்வது போன்று வாசியும் நிலை கொள்ளாமற் பறந்து கொண்டிருக்கின்றன. ஐந்தின் அகத்தில் உள்ள ஆறு பறவைகள் சாமம் ஆறில் ஐந்து நாழிகை யளவாக வோடும் வாசிநடையாக விருப்பதில் அண்டமாம் நுனிக்கொம்பாகிய சிரத்தில் சரம் திரம் உபயம் என்னும் மூன்று நாடிகள் ஒரு நாளாகிய ஆறு சாமத்தில் சரம் நான்கு திரம் நான்கு உபயம் நான்காக நடைகொள்ளும் ஒவ்வொரு நான்கிலும் வாசிநடை ஐம்பூதக் கூறாக வமைந்து நிற்பதில் ஒன்றிற்கு இருபதாகி இருபதிலும் ஒன்றிற்கு ஐந்து கூறு யமைதி பெறலில் நூறாகும். இந்த நூறும் நுனிக்கொம்பாகிய அண்ட சிரத்தில் நடைபெறும் வாசியாகும். இந்த கூறுபாட்டளவே ஆயுளின் எல்லை இந்த நூறு பறவையாம் வாசிக்கூட்டம் ஏதும் ஊறுபாடு யேற்பட்டால் அத்தனை பறவைகளும் பறந்தோடிப் போய்விடும் பறவை பறந்தோடிப்போக மரம் இடப்பது போன்று சரீரம் கிடக்கும் என்று யாக்கை நிலையாமைக் காட்டிக் கூறியதே ஆறு பறவைகள் ஐந்தகத்துள்ளன. நூறு பறவைகள் நுனிக்கொம்பின் மேலன என்ற கூற்று (இந்த கணக்கின் அடிப்படையை கொண்டெழுந்தவைகளே சர நூலும் ஐம்போக்காகிய பஞ்சபட்சி நூலும் கோள் விதியர் நூலும்) இவைகள் பறந்தலையும் பறவையாக இல்லாமல் நிலைபேறாகிய வீட்டில் வசிப்பனவாக வமைய வேண்டில் ஏறும் பெரும்பதியாகிய ஏழாராம் ஆதார மண்டலங்களைக் கடப்பனவாக நடைபெறச் செய்தால் எந்தவிதமான மாறுதலுமில்லாமல் வீடுபேறு வாய்க்கும் என்று அமிததாரணையாக நடைபெறச் செய்வதைச் சுட்டிக் காட்டலே ஏறும் பெரும்பதி ஏழும் கடந்தபின் மாறுதலின்றி மனைபுகலாம் என்பதாம் இதுவே விரிந்து பரந்து கிடக்கும் சூனியத்திற் றேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

குறிப்புரை :-

அலகிலா அகிலமும் தாது மூலம் சீவன் என்ற மூவகைக்குள்ளடங்கும் அவ்வகையில் அகல இயலாமல் வேரூன்றி நிற்கும் தன்மையால் அகலியம் என்ற பெயருடைத்தாகிய தாவர இனங்கள் தாதுவாகிய நிலத்திற் கால் கொண்டு நிற்றலிற் றுதுவாகவும் மூலமாகவும் இருப்பதால் மூலம் என்னும் வேர் இகத்தைப் பற்றி நிற்பது தோன்ற மூலஇகஇயை என்ற சொல் மூலிகையாயது. அந்நிலையில் தாதுவும் மூலமுமாகக் காணப்பெறுவது பறவைகளின் புகலிடமாய் விளங்கலிற் தாது மூலம் சீவன் என்ற மூன்றுமாய் விளங்குவ தோன்ற மரத்தையும் பறவைக்

கூட்டத்தையும் காட்டி நம் மகத்திற் சரீரம் தாதுவென்றும் மூலம் மூலாதாரமென்றும் உயிர்க் காற்று சீவன் என்பதும் புலப்படக் காட்டித் தாது மூலம் இரண்டையுங் காட்டி உயிர்நிலையாமையைக் காட்ட மரத்திற் கூடிய கூட்டப்பறவை என்று குறிப்பிடப் பெறுவதின் உவமான நயம் சிந்திக்கற் பாலது.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

கொட்டனஞ் செய்து குளிக்கின்ற கூவலுள்
வட்டனப் பூமி மருவிவந் தூறிடுங்
கட்டனஞ் செய்து கயிற்றால் தொழுமியுள்
ஒட்டனஞ் செய்தொளி யாவர்க்கு மாமே. சயக (41)

உண்பதற்கு சமைக்கப் பெறும் வண்ணம் கொதிகொண்ட நிலையில் பொங்கி சிதறி விடுகிறது. குளித்துவிட்டு அன்னம் புசிப்பதற்காக சென்று கிணற்றில் நீர் இறைக்கும் போது வட்டவடிவமாகிய கிணற்றில் நீருடன் கலந்து மண்ணும் வருகின்றது. அன்னம் சிதருண்டு போனதை கட்டுப்படுத்தி கயிற்றினால் பூசனை யாற்றி தொழுது கொடுத்து தானும் உள்ளூர ஒட்டும் படியாக உட்கொண்டு அப்பொழுது தோன்றும் ஒரு பேரொளி அவ்வொளியானது எல்லோருக்கும் விளக்கத்தைத் தரும் என்று மெய் ஞான ஒளி காட்டும் சித்தர் பெருமான் கூறுகின்றார். இது ஒன்றும் புலப்படா விளக்கமாக இருக்கின்றது. இச்செயற்பாட்டால் எல்லோருக்கும் பேரொளி விளக்கம் கிடைக்கும் என்கின்றபடியால் விளக்க முடியாத சிக்கலாக விளங்கும் சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

அன்னமானது சிந்திச் சிதறி பொங்கி வழிதல் அகரம் முதல் 'ன' கரம் ஈருகவுள்ள அன்னத்துவா மூலாக்கினியினால் வெளிப்போந்து சிதறுண்டு பயனற்றதாக இப்பொழுது இருக்கின்றது. குளித்து உணவுண்ணச் செல்லும் பொழுது அந்த கிணற்று நீரும் மண் கலந்த நீராக இருக்கின்றது என்பது புகுகின்ற வாயு பரிசுத்தமானதாயும் வெளிவரும் வாசியாம் வாயு மண் கலந்த நீர் போன்று அசுத்தமாய் இருப்பதாலும் "கொட்டனஞ் செய்து குளிக்கின்ற கூவலுள் வட்டனப் பூமி மருவிவந் தூறிடுங் என்று கூறுகின்றார். இந்நிலை நீங்க அன்னமாகிய வாசியை கட்டும் முறையறிந்து கட்டுவதை கட்டணம் என்று கூறுகின்றார். அப்படிக் கட்டிய வாசியானது புகும் நூலாக அமைந்து நிற்பதை பிடித்து நீர் நிலையில் நின்று தொழுங்கால் உள்ஒளியை அகத்திலும் புறத்திலும் கண்டு தேவ தர்ப்பணம் ரிஷி தர்ப்பணம் மனுஷ தர்ப்பணம் பிதுர்தர்ப்பணம் பூத தர்ப்பணம் ஆகிய தர்ப்பணங்கள் செய்வதை (தொழுமி) தொழுது கொடு என்று சொல்லுகின்றார். அப்படி கொடுத்ததன் பிறகு நீயும் ஆசமனமாக உள் அழுந்தும் அளவாக உள்ள நீரை ஒட்டும் பற்றும் உண்டாகும் படியாக

அருந்திறைல்அக ஒளியும் புற ஒளியும் விளக்கம் தரும்படியான கதிர்ஒளிவீசி மிளிரும் . இவ்வகைச் செயற்பாடு செய்வதற்கு உரிமை எல்லோருக்கும் உண்டு. குறிப்பிட்ட ஒரு ஜாதி யாருக்கு மட்டும் உண்டு என்பதல்ல என்பதை கட்டணஞ் செய்து கயிற்ருல் தொழுமியுள் ஒட்டணஞ் செய் தொளி யாவர்க்குமாமே என்று கூறுகின்ருர். இது யோக சாதன சரியை விளக்கம். இதற்குரிய கிரியை விளக்கம் வருமாறு.

மூலாதார நிலையமே வாசி நிலை கொண்டு சலனம் செய்யும்மிடம். அதில் கால் கொண்டு நிற்றல் குளத்தில் சந்தியாவந்தனம் செய்வதற்காக குளத்து நீரில் நிற்றல். அப்படி கால் கொண்டு நின்ருல் அன்னத்து வாவாகிய வாசி சிதருண்டு போகாது. அப்படிக் கில்லாமல் மண் அகத்தூறிய கிணற்றடியில் நின்று கொண்டு அச்செயலை செய்வது மண்கலந்த நீரிலே குளிப்பதை ஒக்கும். "குளிக்கப் போய் சேற்றைப் பூசிய" என்ற நிலைமை மூலத்தில் எழுந்தவாசி அங்குள்ள அசுத்தங்களை கொண்டு வெளிப்போவதை மண் கலந்த சேற்று நீருக்கு ஒப்பிடுகின்ருர். ஆகவே, தெய்வ வழிபாட்டிற்கும் வைதீக நெறி சடங்குகளுக்கும் கிணற்று நீரை பயன்படுத்தக் கூடாது என்பது தெளிவாகின்றது. அப்படிக்கில்லாமல் அமிதமாக மழைபொழிந்து ஒரு வழியாய் உட்சென்று பெருவழியாகிய சுழிமுனையில் வான மண்டலத்து நீராகிய மலையில் பெருக்கெடுத்தோடி தேங்கி நிற்கும் குளத்தை தூய்மை மிக்க தீர்த்தம் என்றும் அதில்னின்று புகும் நூலைப்பிடித்து சந்திதர்ப்பணம் செய்வதை அமிர்தமயமாகிய அமிததாரணைக்கு ஒப்பிடுகின்ருர். பஞ்சென்ன பறந்து நின்ற வாசியாம் காலை நூலாக்கி நாலங்குளப் பிரமணமாக பிடித்து உண்பதாம் ஆசமனம் செய்வதை ஒட்டனம் என்று காட்டுகின்ருர். வாசியானது அமிததாரணையில் உட்புகுந்து ஒட்டி குளிரும் தன்மையைத் தருவதால் நீரைப் பருகிவிடாமல் உள் அழுந்தும் அளவே கொள்ள வேண்டும் என்று காட்டுகின்ருர். இதனுல் தேவரிஷி மானுட பிதுர்கள், பூதங்கள் எல்லாம் புனிதம் பெறுவதை ஈவதும் உண்பதும் ஆகிய கிரியையை செயல் வேண்டும். இச்செயலால் காலைப் பொழுதில் எழும் கதிரவனது எல்லோருக்கும் பாகுபாடின்றி விளக்கம் தருவதுவேயல்லாமல் இந்த செயற்பாடாம் யோக சாதன விளைவு எல்லோருக்கும் பொது என்று கூறுகின்ருர். உள் அழுந்தும் அளவு ஆக நீரைப் பருகுவதே உளுந்து முழுகக் கூடிய அளவே தான் ஆசமனம் பண்ண வேண்டும் என்ற கிரியை வழக்கத்தில் இருக்கின்றது. இதையே ரோம ரிஷி குறிப்பிடும் போது

**நீர்ஏது நீர்குடிக்க வாறங்கேது**
**நினைவு கெட்ட மாந்தர்களே நிறுத்திப் பார்க்க**
**கூருன சந்திரனின் நாலே மிச்சம்**
**குடிக்கிறதும் பிடிக்கிறதும் அது தான் ஐயா**

என்று விளக்குகின்ருர். இதை ஒப்பு நோக்குக. இதுவே யோக சாதன சரியைக்கு அமைபெரும் கிரியையாம். இவைகள் திருமூலர் கூறிய சிக்கல்

நிறைந்த சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை. காயத்திரி மந்திரத்தில் இதையே ஆ போஜ் யோதிர சோம மிருதம் என்று கூறப் பெறுகிறது.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

ஏழுவளைகடல் எட்டுக் குலவரை
ஆழும் விசும்பினில் அங்கி மழைவளி
தாழு மிருநிலந் தன்மை யதுகண்டு
வாழ நினைக்கில தாலய மாமே. சமஉ (42)

பூ மண்டலத்தை சக்கிராகாரமாய் சூழ்ந்து நிற்கும் கடலும் அக்கடலிற்கு எதிரிடையாக வானை எட்டி நிற்கும் மலைகளும் அகமும் புறமுமாய் எல்லாவற்றையும் தம்முள் அடக்கிக் கொண்டு நிற்கும் வெளிமண்டலமும் தீயும் நீரும் காற்றும் பூமண்டலமும் ஆகிய ஏழின் தன்மையை அறிந்து உணர்ந்து வாழவேண்டும். அப்படி வாழ்வை விரும்பி அறிந்துணர்ந்தால் அதுவே மக்கட் குலத்திற்கு உய்வைத் தரும் திருக் கோயிலாகும் என்பது ஆலய அமைப்பிற்கு சாசனம் வகுக்கும் ஆகம நூலிற்கு முதல்வராகிய ஆகமச் சித்தர் வாக்கு. இதில் குறிப்பிடப் பெற்றவை எல்லாம் அளவிடற்கு அரிதான பெருக்கத்தை உடையது. இதன் உண்மையை உணர்ந்து செயல்பட்டு வாழ நினைத்தால் அதுவே ஆலயம் என்று கூறுவது நமக்குச் செயல்படுத்த முடியாத பெருக்கத்தைத் தரும் ஒன்று என நமக்குத் தோன்றும் அப்படி செய்யற்கரியதை ஆகம முதல்வர் கூற மாட்டார். ஆகவே இப்பெரும் பாழும் சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

ஏழு வளைகடல்என்னும் தொகுதியில் காணப்பெறும் பகுப்புக்கள் ஏழு. அந்த ஏழையே சத்த ஆவரணம் என்று கூறப்பெறும்.அரணம் என்றால் 'அ' என்னும் உயிருக்கு பாதுகாப்பாக அமைந்த ஏழு கோட்டைகள் என்று பொருள்படும். அந்த ஏழிற்கும் கோணம் உண்டு. மந்திரங்களும் உண்டு. இந்த கோணத்தையும் மந்திரங்களையும் அறிந்து கொண்டால் அது வாழ்க்கையை வளப்படுத்தும் பொருளாகும். அப்பொருளே 'அ' வென்னும் பசு இலயம் ஆம் ஆலயம் ஆகும். இதன்படியே தான் ஆலயங்கள் எங்கெங்கும் அமைவு பெற்று உள்ளன. அவ்வாலயத்தை குறியீடாக குறித்து எழுதிப்பார்த்தோமானால் அதுவே நாற்பத்து முக்கோணம் என்னும் வாலாம்பிகை பீடமாம் சக்கிராகரமாக அமையும். இது விளக்கமாக கோணங்கள் எவ்வாறு அமைய வேண்டும். அதில் அக்கரங்கள் எவ்வாறு எவ்வாறாக அமைய வேண்டும் என்பது குருமுகமாய் கேட்டு உணரத்தக்கது. இதை வெளிப்படையாக சொல்வது மரபல்ல. வெளிப்படையாகச் சொல்லாவிட்டாலும்

செயற்பாட்டில் ஆலயங்கள்எல்லாம் இப்படியே தான் அமைந்திருக்கின்றன. இதை அறிவதற்கு தெய்வீக பேராற்றல் வேண்டும். நாம் இதை விளக்கமாகச் சொல்லலாம். அப்படி விளக்கமாக சொல்லுவதிலும் மரபு தவறுமல் சொல்ல முடியும். அவ்வாறு சொன்னுல் இப்பொழுது போலியாக அமைந்திருக்கும் நாற்பத்தி முக்கோண சக்கரங்களை அமைத்து வைத்திருக்கும் மேரு பீடம் என்ற அமைப்பை கொண்டாடுவதற்கும், இவ்வமைப்பிற்கு முதல்வராகக் கருதும் ஆச்சாரிய பீடாதிபதிகளையும் தகுதியில்லாதவர்கள் என்று உலகம் புறக்கணிக்க செய்து விடும். அச்செயலை நாம் விரும்பவில்லை. தூலலிங்கம் என்று பேர் பெறும் ஆலய முன்னிலை சிகரி என்பது தூலதேகத்தில் அமைந்துள்ள ஒன்பது வாயில்கள் பெண்ணின் கூறுகிய பதினொரு வாயில்களைக் கொண்டு அமைக்கப் படவேண்டும். அப்படிக்கில்லாமல் நாட்டிலேயே உயரமான சிகரியை நான் பதிமூன்று அடுக்காக கட்டுகின்றேன் என்று சொல்லிக் கட்டிய ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள் என்று கூறப்படுபவரையும் புறக்கணிப்பதாகி விடும். ஆகையால் நாம் ஈண்டு அதை கூறவில்லை. சிறிது காலத்தில் தமிழில் உண்மையான வேதவேதாந்த சித்தாந்த இதிகாசங்கள் வர இருக்கின்றன. அப்படி வரும் பொழுது தானே போலிகள் எல்லாம் மறைந்துவிடும் என்பதாக அவசரப்பட்டு நாம் ஆலய அமைப்பாக விளங்கும் நாற்பத்து முக்கோண பீடத்தை ஈண்டு கூறவில்லை. அறிவாற்றல் உள்ளவர்கள் உணர்வதற்கு இதுவே போதுமானது. இதுவே திருமூலர் காட்டும் ஆகம மந்திரத்தில் காணப்பெறுது விளங்கும் சூனியத்திற் றேடிக் கண்ட சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

ஆலிங் கனஞ்செய் தகஞ்சுடச் சூலத்துச்
சாலிங் கமைத்துத் தலைமை தவிர்த்தனர்
கோலிங் கமைத்தபின் கூபப் பறவைகண்
மாலிங்கன் வைத்தது முன்பின் வழியே. சூடு (43)

இருவர் சேர்ந்து ஒரு மண்ணுல் ஆன சால் செய்தார்கள். அதை பச்சை மண்ணுக இருந்தால் நிலைபெற நிற்காது எனக்கருதி வெய்யலில் காய வைத்த அச்சாலை உடம்பில் சூடு ஏறும்படியாக தழுவி எடுத்து இரண்டு பேரும் மட்பாண்டம் சுடும் சூளையில் வைத்தார்கள். இப்படி கோலி எடுத்து சூளையில் வைத்தது இரண்டு பேரும் ஆகையால் இரண்டுங் கூடி ஒன்ருய் ஒருமித்த செயலே அன்றி தலைவர் என்று உரிமை கொண்டாடல் தவிர்க்க பெற்றது. அந்நிலைமையில் கிணற்றில் கூடுகட்டும்குருவி அதை வழியாகக் கொண்டு சென்றவழியே மீளுகின்றது என்பது விளைவறி சித்தரின் மெய்பொருள் மந்திரம். இதில்

இரண்டுபேர் சேர்ந்து மண்சால் செய்தார்கள் என்றும், அதை இரண்டு பேரும் தழுவி சூளையில் அமைத்தார்கள் என்றும், அதில் ஒரு கிணற்றில் கூடு கட்டும் குருவி சென்று சென்றவழியே மீளுவதாக இருக்கின்றதென்பதும் நடைமுறையில் இல்லாத ஒன்று. மட்பாண்டம் ஆகிய மண்சால் செய்பவர்கள் அதற்கு இருவர் தேவைப்படாது. ஒருவரே செய்யலாம். அது சூளையிலிடுவதற்கும் இரண்டு பேர் தேவையில்லை. கிணற்றில் கூடுகட்டும் குருவி அதிற் சென்று பின்பக்கம் திரும்புவதற்கு வழியில்லாமல் சென்றவழியே மீளுகின்றதென்பதும் இயற்கைக்கு மாருன காட்சி. கிணற்றுப் பறவை நீரும் நிழலும் பொருந்தியிருப்பதை விரும்பி கிணற்றின் படிக்கட்டில் கூடுகட்டுகின்றது. அவ்வாறு நீரும் இல்லை நிழலும் இல்லை. வெளிச்சம் புகமுடியாதபடி இருள் சூழ்ந்திருக்கின்ற சாலில் அதுபோய் நிலைகொள்ளாது சென்ற வழியே மீளுகின்றது என்பது இயற்கைக்கு விரோதம். இவ்வாறு உண்டு என்று சொல்லுகின்ருர். விளைவறி மெய்யுணர்வுடைய தெய்வீகச் சித்தர். இதில் காணக் கிடைக்காத சூனியத்தில் தேடிக்கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

பெரியோர்கள் மெய்யுணர்வு இல்லாத மக்களுக்கு அவர்கள் உணர்ந்த ஒன்றை வைத்து உணராததை உணர்த்துவது மரபு. அவ்வகையாக அமைத்த சூளைதான் நாயனர் குறிப்பிடும் சூளை. இதையே சித்தர் பாடல்களில்

**இருவர்மண் சேர்த்திட ஒருவர் பண்ண**
**ஈரைந்து மாசமாம் வைத்த சூளை என்றும்**
**நந்தவனத்தில் ஓர் ஆண்டி**
**அவன் நாலாரு மாதமாய் குயவனை வேண்டி**

என்று கூறுவதும் ஈண்டு கூறிய செயற்பாட்டு அமைவையே குறிக்கும். இதில் மண்பாண்டம் செய்வதையும் சூளை வைப்பதையும் குறிக்கின்றதே தவிர அதன் விளைவையும் பயனையும் கூறவில்லை. அதைக் கூறுகின்ருர் நம் சித்தர் பெருமான். இதிற்கண்டதைக் கொண்டு காணுததைக் காட்டுவது என்பது உலக மக்கள் கருத்தொருமித்து காமநுகர்ச்சியை அடைவதும் அதனுல் கரு ஏற்படுவதும் அக்கருவானது தாயினுடைய கருப்பாசயத்தில் அமையுங்கால் மூலாக்கினியால் சூடப்படுவதையும் குறிப்பது உலக மக்கள் காணுவதாகிய ஒன்று. அதைக் கொண்டு காணுததைக் காட்டுவது ஞான சாதன விளைவில் ரவிமதியாகிய சூரியசந்திரன் ஒன்று கூடுவதாகிய சுழிமுனைச் சேர்க்கை அப்படி ஒன்று கூடின சுழிமுனையானது அக்னி மண்டலமாகிய மூலாதாரதலத்து அமைவது. அப்படி ஒன்றுகூடி மூலாதாரத்தலத்து அமைந்து சூடு சூளை போன்ற நெருப்பில் நிலைகொள்வது பச்சை மட்பாண்டம் போன்ற யாக்கையை ஞாஞக்கினியால் சுட்டு நிறைவுறச்

செய்வதாகும். இதையே ஆலிங்கனஞ் செய் தகஞ் சுட சூலத்துச் சாலிங் கமைத்துத் தலைமை தவிர்த்தனர் என்று கூறுகின்றார். தலைமை தவிர்த்தலாவது இருகதிரும் ஒரு கதிராய் துலங்குவது. இப்படியாக மூலாதாரத்து எழுந்த மெய்ச்சுடராம் ஞாளுக்கினியினால் பச்சை மண்ணை சுட்டமண்ணாய் செய்வது போன்ற நிலைபேருக்கி தீயிற் காயச்சும் காய்ச்சலை ஏற்றி நிலையுறச் செய்வதால் அதற்கு காயசித்தி என்று பெயர். இதில் நீரும் நிழலும் விரும்பிய பறவை சென்று மீளுகின்றது என்பது அங்கிதாரணையில் அமித தாரணை பொருந்துவதைக் குறிக்கும். இதுவே ஞானசாதனம் பயில்பவன் அடைய வேண்டிய விரும்பத் தக்க விளைவாம் குறிக்கோளாகும். இதையே குறியி ஆய கூபப்பறவை என்றும் அப்பறவை இச்செயலில் விருப்புற்றதாய் இருக்கின்றதென்றும் கூறுவதே "கூபப்பறவை கண் மாலிங்கன் வைத்தது முன்பின் வழியே என்பது தாகும். இதில் காம நுகர்ச்சி சரியை மட்பாண்டச் செயல் கிரியை ஈண்டு உரை செய்தது யோக ஞானவிளக்கம் ஆகும்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

ஞானம் : சிவஞானம் பெறத் திருவருள் வேண்டும்

கொட்டுக்குந்தாலி இரண்டே இரண்டுக்குங்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரை வலிதென்பர்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரை மூன்றுக்கும்
இட்டம் வலிதென்பர் ஈசன் அருளே. சுமச (44)

நிலத்தை பண்படுத்தும் கருவியாகியன மண்வெட்டியும் குந்தாலி என்னப்படும்கூந்தாரமும் ஆகிய இரண்டே. மண்வெட்டி என்னும் கொட்டிற்கும் குந்தாலி என்கின்ற கூந்தாரத்திற்கும் பாரை என்னும் கடப்பாரை வலிதென்பர். இம்மூன்றும் நிலத்தை பண்படுத்தும் கருவியாயினும் இக்கருவிகளைப் பயன்படுத்தி நிலத்தை செப்பம் செய்திருந்தாலும் இறைவனின் திருவருட் பேளுகிய வானம் வழங்காவிட்டால் பண்பாடு செய்யப்பட்ட நிலம் பயன் தராமல் போய்விடும். அவ்வாறு கொட்டு குந்தாலி பாரை மூன்றையும் பயன்படுத்தி பண்படுத்தப்பட்ட நிலம் நீர் பாச்சலின்றி இருக்குமா ? நீர்பாச்சலில்லாத நிலத்திற்கு இந்த பண்பாடு செய்வதுண்டா ? நீர் பாய்ச்சலும் பருவ காலமும் ஒத்து இருந்தால் தானே செய்வார்கள் அப்படிக்கில்லாமல் கொட்டு குந்தாலி பாரை மூன்றைக் கொண்டு நிலத்தை வளப்படுத்துதல் காணக் கிடைக்காத ஒன்று என்னும் சூனியத்தில் தேடிக் காணக் கிடைக்கும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

விளைவை தருகின்ற நிலம் இச்சரீரம். இச்சரீரத்தில் போதல் வருதல் ஆகிய இரண்டு செயற்பாட்டைக் கொண்டு விளங்குவது கொட்டாகிய மண் வெட்டியும் குந்தாலி என்கின்ற கூந்தாரமும் ஆகும். மண்வெட்டிக் கொட்டால் மண்ணை வெட்டினுல் அந்த மண் மண்வெட்டி கொட்டிற்கு உட்பாகத்திலேயே திரும்பும். குந்தாலி என்னும் கூந்தாரத்தை கொண்டு மண்கட்டியை உடைத்தால் அது வெளியில் சிதறி ஓடும். இவ்வாறு உட்செல்வதும் வெளியில் சிதறி ஓடுவதுமாகிய இரண்டு வாசி நடையை கொட்டு குந்தாலி என்று கூறுகின்றுர். ஒன்று உள்ளே புகும் மற்றொன்று வெளியில் சிதறும். இவ்விரண்டும் இல்லாமல் பாரை என்னும் கடப்பாரையால் கெள்ளினுல் மண்ணில் தொளை பொருந்தி அடைப்பு நீக்கம் பெறும். அவ்வடைப்பு நீக்கம் பெறுங்கால் அமிதமாகிய ஊற்றுநீர் சுரக்கும் கொட்டு என்று கூறப்படும். மண்வெட்டியாலும் குந்தாலி என்று சொல்லப்படும் கூந்தாரத்தாலும் மண்ணில் தொளைபடுத்த முடியாது தவிர அவ்விரண்டால் சரிக்கப் பெறும் மண் ஊற்றுத் தொளையையும் மூடிவிடும். இந்த செயல்பாடு நம்மிடத்தில் நடந்து கொண்டேயிருக்கின்றது. இச்செயல்பாட்டை தவிர்த்து பாரை என்னும் கடப்பாரையாம் சுழிமுனை நாடியை துலங்கச் செய்தால் அமிர்தம் கிடைக்கும். அவ்வாறு கிடைப்பது கொட்டு குந்தாலியாகிய இரண்டிற்கும் வலிமையுள்ள சுழிமுனை நாடி கதியால் மட்டும் ஏற்பட்டு விட முடியாது. வானம் வழங்கினுல் தான் நிலத்தில் நீரும் சுரக்கும். அந்த நீர் சுரக்கும் படியாக கடப்பாரையால் தோண்டிய பள்ளமும் நிரம்பும். இந்த மூன்று நாடியின் செயல்பாட்டால் மட்டும் நீரை சுரக்கச் செய்ய முடியாது. ஆகவே தான் கொட்டு குந்தாலிக்கும் கடப்பாரைக்கும் மூன்றுக்கும் இட்டம் வலிதென்பர் ஈசன் அருளே என்கின்றுர். இதில் நாம் காணப்பெறுவது என்னவென்றுல் ரேசக பூரக கும்பகம் செய்து வாசியை வசப்படுத்தினுலும் இறைவன் அருளால் தான் ஞானத்தை அடைய முடியும். அது வானம் வழங்குவது போன்றது. யோகியினுடைய யோக சாதனம் கொட்டுக்குந்தாலி பாரை இம் மூன்றையும் கொண்டு நிலத்தைப் பண்படுத்துவது போன்றது. இம்மூன்று செயலும் எல்லோரிடத்திலும் நடை பெற்றுக் கொண்டேயிருக்கின்றது. நடைபெருத ஒன்றும் நடைபெறக் காண வேண்டியதும் முதற்பொருட் திருவருட்பேறே ஆகும் என்பது தேடிக் காண முடியாத சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை ஆகும்.

மூன்றையும் செய்து வாசியை வசப்படுத்தினுல் ஈசன் அருள் இன்றேல் சித்தியாகாது.



அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

கயலொன்று கண்டவர் கண்டே இருப்பர்
முயலொன்று கண்டவர் மூவரும் உய்வர்
பறையொன்று பூசல் பிடிப்பா னொருவன்
மறையொன்று கண்ட துருவம் பொன்னுமே. சமரு (45)

ஒருவன். மீன் பிடிக்கின்றான். மீனை பிடிக்கப்போனவன் ஒரு கெண்டை மீனைப் பார்த்துவிட்டான். அதைப் பார்த்துக் கொண்டேயிருக்கின்றான். பிடிக்கவில்லை. மற்றும் மூன்று பேர் கூடி முயல் பிடிக்க போகின்றார்கள். ஒரே ஒரு முயல் தான் அகப்பட்டது. அதனால் அந்த மூவரும் உய்வு பெற்றார்கள். வாய்ச் சண்டையிட்டு கலகம் விளைவிக்கின்றான் ஒருவன். மற்றொருவன் ஒரு சுழற்சியைப் பார்க்கின்றான் அவனுடைய உருவம் பொன்மயமாகின்றது என்று நூதன விளைவு காட்டும் நூல்மறை முனிவர் ஆகம மந்திரம் கூறுகின்றார். இதில் மிகுதிப்பாடுள்ள தன்மையை விளக்கும் சொல்லே மீன் என்பது. மீன் கூட்டம் கூட்டமாக வசிக்குமேயொழிய ஒரு மீனாக இருக்காது. ஒரு மீனைப் பார்த்தவன் பார்த்தக் கொண்டேயிருக்கின்றான் என்று சொல்கின்றார். மூன்று பேர் கூடி முயல் வேட்டைக்கும் புறப்பட்டார்கள். அவர்கள் ஒரு முயலைக் கண்டார்கள். அதை கண்ட மாத்திரத்திலேயே அவர்களுக்கு உய்வு கிடைத்த விட்டது. வாய் பேச்சாய் ஒருவன் சண்டைபிடித்துக் கொண்டிருக்கின்றான். இவைகள் இப்படியிருக்க சுழற்சியை ஒருவன் காண்கின்றான். அவனுடைய உருவம் பொன்மயமாக மாறுகின்றது. என்பது எங்கும் காணக் கிடைக்காத தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

கயல் என்றால் 'க' என்பது ஒன்று, அயல் என்றால் ஒன்றாக வேறுபட்டு நிற்பதைக் குறிக்கும். அதுவே, சுழிமுனை நோக்கமாகிய பூசரிமுத்திரை. சுழிமுனை நோக்கத்தை நோக்குகின்றது இரண்டு கண்கள். அது சுழிமுனையாகிய உள் நாட்டத்தைப் பார்த்து விட்டால் வேறொன்றையும் நோக்காது. அதையே தான் நோக்கிக் கொண்டிருக்கும். அதையே கயலொன்று கண்டவர் கண்டேயிருப்பர் என்று சொல்லுகின்றார். முயல் பிடிக்க போன மூவர்கள் உய்வு பெற்று விட்டர்கள் என்பதில் மூயல் என்பதே முயல் என்று குறுகி நிற்கின்றது. எந்த இடத்தில் சென்றால் முடிவு பெற்ற இடமாக மேல்விளைவு இன்றி காணப்படுமோ அந்த இடத்தையே முயலொன்று கண்டவர் என்று சொல்லுகின்றார். முயலொன்று கண்ட மூவர் இடம் வல நடு என்னும் வாசி நிலையாகும். வாசிநிலையானது மீளாத கதியைப் பெற்று தெய்வீக பெறும் பேறு பெற்று நிலைபெறுவதை முயலொன்று கண்டவர் மூவரும் உய்வர் என்று மூலாதாரச் சிறப்பியலைக் கூறுகின்றார்.

சுழிமுனை நோக்கம் கொண்டு வாசி சாதனம் பயின்று நாதாந்த தளத்தை அடைவதையே கயலொன்று கண்டவர் கண்டேயிருப்பர் முயலொன்று கண்டவர் மூவரும் உய்வர் என்று கூறுகின்றார். வாய்ச் சொல்லால் கலகம் விளைவிப்பவன் அப்படி கலகம் விளைவிக்காமல் வாய்ச்சொல்லை நிறுத்தி மௌனியாகின்றான். இதையே பறையொன்று பூசல் பிடிப்பானொருவன் வாய்ப்பறைசாற்றி கலகம் விளைவிப்பவன் அதைபிடித்து விட்டான் என மோன நிலை அடைவதை பறையொன்று பூசல் பிடிப்பான் ஒருவன் என்று காட்டுகின்றார். இந்த வாசி சாதனத்தினால் பயனடைந்து நான்மறை இதுவே எனக் கண்டவன் குற்றமற்ற மெய்யை உடையவனாகின்றான். நரை, திரை, பிணி, மூப்பு, சாக்காடு என்னும் ஐந்தின் உடலுக்கு உறும் குற்றங்கள் அந்த குற்றத்தை உடைய உலோகம் இரும்பு. இரும்பானது சவடு, ஊரல் ஆகிய துரு, கடினம், உருகாத தன்மை, உடைதல் இந்த ஐந்தையும் உடையது. இவ்வைந்தையே உடலுக்குறு குற்றம் என்று உவமித்துக் கூறுகின்றார். இரும்பு வேதித்தால் பொன்னாகும். பொன் உருகும் தன்மை சவடின்மை ஊறலற்ற தன்மை, ஒளி, நிறை ஆகிய ஐந்து சிறப்பியலை உடையது. இச்சிறப்பியலையே காயசித்தி என்று கூறுவர். இதையே மறையொன்று கண்டவர் உருவம் பொன்னாமே என்று விளக்குகிறார். இதில் யோக சாதனத்தால் மெய் வாய் கண்மூக்கு ஆகிய நான்கிலும் குரு முகமாய் செவிவழியாக எழுதாக் கேள்வியை கேட்டு வேதிக்கப் பெற்ற தெய்வீக உடம்பு அமைவுரும் த்ன்மையை கூறுகின்றார். இதுவே, வெறும் பாழும் சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

குறிப்புரை :- சித்தர்களில் பெரும் பாலானோர்கள் இக்கலியுகத்திற்கு முந்திய துவாபரயுகத்தில் வாழ்ந்தவர்கள். துவாபர யுகத்து இறுதியிலும் கலியுகத் தொடக்கத்திலும் வாழ்ந்திருக்கின்றார்கள். அந்த யுகத்தில் கோள்நிலை ஆதியெனவற்றின் தன்மைகளும் அந்த யுகத்தில் மக்களுடைய சரீர இயற்கையும் ஆயுளும் வேறுபட்டதாகும். அந்த சரீரத்தில் ஞான சாதன சித்தி ஏற்பட்டால் நரைதிரை மாறல் முதலியன ஏற்பட்டிருக்கின்றது. இந்த கலியுகத்தில் அப்படி ஆவதாக காணக் கிடைக்கவில்லை. சரீரம் புனிதமாயும் எழிலாயும் குறுகுதல் வளர்தல், பருத்தல் முதலியன இல்லாததாயும் மாசற்ற தெளிந்த அறிவுடையதாகவும் ஆகிய தெய்வீகச் சிறப்பு மட்டும் உடையதாக தான் காணப் பெறுகின்றது. இதையே பட்டினத்தடிகள்

**பொருளுடையோரை செயலினும் வீரரைப்போர் களத்தும்**
**தெருளுடையோரை முகத்திலும் தேர்ந்து தெளிவது போல்**
**அருளுடையோரை தவத்தில் குணத்தில் அருளில் அன்பில்**
**இருளறு சொல்லினும் காணத்தகும் கச்சி யேகம்பனே.**

என்று கூறுகின்ருர். மேற்கூறிய திருமந்திரத்தில் கூறியவாறு மேனி பொன்னும் தன்மை இந்த கலியுகத்தில் கிடைக்காத ஒன்று என்றறிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

கோரை எழுந்து கிடந்த குளத்தினில்
ஆரை படர்ந்து தொடர்ந்து கிடந்தது
நாரை படுகின்ருற் போலல்ல நாதனுர்
பாரை கிடக்கப் படிகின்ற வாறே. சமகா (46)

ஒரு குளம் இருக்கின்றது. அக்குளம் மண்ணுகிய பள்ளத்தில் இல்லாமல் பாறையில் இருக்கின்றது. அக்குளத்தில் கோரை கோரையானது ஆக்கம் பெற்று எழும்பி நிற்கின்றது.அதோடு ஆரைக் கீரையும் படர்ச்சியுற்று இடைவெளியின்றி நெருங்கி நிற்கின்றது. அதில் மீனை உணவாகக் கொள்ளும் நாரையொன்று காத்துக் கொண்டிருக்கின்றது. ஆனுல் அது மீனை கொத்தி விழுங்கவில்லை. அந்த நாரை கோரையும் ஆரையையும் நீக்கி மீன் இனங்களை கொத்தித் திண்ணவும் வழியில்லை. அப்படி கொத்தினுலும் பாறையின் மேல் நீர் நிலை இருக்கின்றபடியால் நாரையின் மூக்கு பாறையில் குத்தி பயனற்றதாகிவிடும். இது இறைவனுடைய அமைப்பாக விளங்குகின்றது என்று கூறுவதில் கோரை எழுந்து கிடந்த குளம் எது ? ஆரை படர்ந்து தொடர்ந்து கிடந்தது என்ருல் கோரையும் ஆரையும் நாரைக்கு தடையாய் இருக்காது. மீன் நீரினின்று துள்ளும் தன்மையை உடையது. ஆகவே நாரை பாறையில் மூக்கு படியும் படியாக கொத்த வேண்டிய அவசியமில்லை. நல்ல நீர் நிலையும் அதில் புள்ளும் கீரையும் மீன் இனமும் நெருங்கி நிற்க நாரை பார்த்துக் கொண்டே யிருக்கின்றது என்று சொல்வது எவ்வகையிலும் நிகழக் கூடியது அல்ல. மீனுக்கு சத்துருவாகிய நாரை அதன் செயற்பாட்டை செய்யவிடாமல் இறைவன் அமைத்திருக்கின்ருன் என்பது நிகழாத நிகழ்ச்சி. ஆனுல் சொல்லுபவர் நமக்கு அதிசய காட்சியைக் காட்டும் ஆற்றல்வல்ல அருளுடை அண்ணல் ஆகையால் இவ்வதிசய நிகழ்ச்சி விளையும் சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

கோரை எழுந்து கிடந்த குளம் என்பது நீர்நிலை அமைந்துள்ள பாறை அந்த பாறையானது கல்லின் இயற்கை வடிவமாகிய நீள் வட்டத்தைக் குறிக்கின்றது. நீள் வட்டம் மூலாதாரத்தினுடைய வடிவம். மூலாதாரம் அக்னி மண்டலம். அதே போன்று நீர் நிலையைத் தாங்கி நின்ருலும் நீரினுடைய தன்மையில் ஊறும் தன்மையுடையதல்லகல். கல்லினுள் தீ உண்டு. அகையால் மூலாதாரத்தை பாறைக்குளம் என்று கூறப்

பெறுகிறது. மூலாதாரத்தை அடுத்து உள்ள நிலையம் சுவாதிட்டானம் சுவாதிட்டானத்திற்கு கோணம நாற்கோணம் அதையே ஆரை என்று கூறுகின்றார். மூலாதாரம் சுவாதிட்டாணம் இரண்டையும் கடந்துள்ள ஆதாரம் மணிபூரகம் எனப்படும். அதனுடைய கோணம் பிறைசந்திரன் என்று வகுத்துள்ளார்கள். பிறை என்பது சந்திரகலை வளர்ச்சியில் மூன்றாவது நாள் தோன்றப் பெறும் சந்திரனையே பிறைசந்திரன் என்பார்கள். அதே போன்று முப்பட்டை வடிவம் கொண்டதண்டும் அதில் மூன்று கவையாய் பிரிந்த தலைப்பைக் கொண்ட உருவத்தைப் பெற்று விளங்குவதும் கோரையின் வடிவம் ஆகும். அதற்கு மேல் உள்ள ஆதாரம் ஆனகதத் தானம் ஆகும். அதன் அடையாளம் ஆகிய கோணம் முக்கோணம். முற்கூறிய பாறையும் கோரையும் ஆரையும் ஆகியவற்றிற்கு இடமாய் நிற்பது குளத்து நீர். குளத்து நீரை உருவகப் படுத்தி அமைவு பெற செய்து பார்த்தால் முக்கோண வடிவமே துலங்கி நிற்கும். நீர் தழும்பாமல் அமைவுறச் செய்யும் மட்குடம் முக்கோண வடிவம் பொருந்தியதே. மேலும் முக்கோணம் வடிவம் பொருந்தி திரவப் பொருளைப் பாச்சும் கருவியை புனல் என்று கூறுவதும் நோக்க தக்கது. அதை ஆனகத் தானம் என்று கூறுவது அனலால் நிலை கடந்து கொதிப்பாகிய கதியை கொள்ளும் இயற்கை விளைவைத் தரும் தீயினுடைய செயற்பாட்டில் அமைவதால் அனாகதம் என்று கூறப்பெறுகிறது. அவ்வனலுக்குரிய கோணம் முக்கோணமே. தீ தான் நீரை அடக்கும் தன்மையுடையதால் நீரைக் கீழ்படுத்தி அமைக்கின்ற கோணத்தை முக்கோணமாகிய வடிவத்தைக் கொண்ட அனாகத்தைக் குறிப்பிடுகின்றார். இவ்வாறாகிய நீர்நிலையில் சஞ்சாரம் செய்து திரிகின்றதை மீன் என்று சொல்லுகின்றார். அனாற்கதத்திற்கு அடுத்த ஆதாரம் விசுத்தி என்பதாகும். விசுத்தி தானத்திற்கு உரிய கோணம் அறுகோணம். அவ்வறு கோண வடிவத்தை உடையது கண் கண்ணினுடைய தன்மையை கொண்ட உயிரினம் கெண்டை மீன். கண்ணைப் போன்று நடுப்பாகத்தில் கரும் புள்ளியும் மற்றை இரண்டு பாகங்களிலும் முக்கோண வடிவக் குவிப்பும் கொண்டது கெண்டை மீன். ஆகையால் நாரையால் நோக்கப் பெற்ற கெண்டை என்றும் நாரையால் கவர முடியாதது என்றும் சொல்வதோடு சலசரம் எனப் பெயருடையதாகி நிலை கொள்ளாமல் நீந்தி சலனம் செய்யும் தன்மையை குறிப்பிடும் போது விசுத்தித் தானம் நிலைப் பொருளாகிய காற்றைக் குறிப்பிடப்படுகிறது. அதை அடுத்துள்ள ஆதாரம் அக்க இணை நிலையமாகிய ஆக்ஞை ஆகும் அது ஆகாயத்தின் இயலைக் கொண்டது. ஆகாயத்தினுடைய இயற்கை வட்டவடிவமாகிய சுழற்சி. அது நாரையென்று கூறுகின்றார். நாரை முற்கூறிய ஆரையும் கோரையும் அது படர்ந்த நீரையும் போல ஓரிடத்தில் நிலை கொள்ளாமல் பறந்து காணப்பெறுவதும் வான்வழியாக குளத்தில் இறங்கும்

தன்மையுடையதாலும் ஆகாயத்திற்கு நாரையைக் குறிப்பிடுகின்ருர். இதில் நாரை மீனை கொத்தி விழுங்குவ போன்று உள்ளது மக்களுடைய வாழ்நாள். ஆனுல் வாழ்நாளாகிய மீனை கொத்தி விழுங்கி விடாமல் இறைவன் பாதுகாப்பளிக்கின்ருர். அப்பாதுகாப்பே கோரையும் ஆரையும் பாறையும் ஆகும். அப்பாதுகாப்பை நம்பி வாழாவிருந்தால் நீர்நிலை வற்றி வரலும் அப்போது ஆரையும் கோரையும் பாறையும் வெதும்பி மீன் இனமாகிய வாழ்நாள் அழிந்து போய்விடும். ஆகையால் வாழ்நாள் வளர்ந்து கொண்டேயிருக்கும் எனக் கருதி வீண் பொழுது போக்காமல் தவத்தை செய்து நிலையாமைக்கு அஞ்சி நற்பயன் அடையுங்கள் என்று நிலையாமையைச் சுட்டி காட்டப் பெறுவதே கோரை எழும்பி கிடந்த குளத்தினில் என்று கூறப் பெறும் திருமந்திரத்தில் காணப் பெறும் சூனிய நிலையில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

இவ் உரையில் நிலையாமையை மற்றவர்கள் யாநம் கூறியுள்ளவாறு கூருமல் வாழ்ந்து வரும் நாளையும் பருவத்தையும் சுட்டிக்காட்டி அதில் நிலையாமையை உணர்த்துவது ஒரு தனி பெறும் சிறப்பு.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

கொல்லைமுக் காதமுங் காடரைக் காதமும்
எல்லை மயங்கிக் கிடந்த இருநெறி
எல்லை மயங்கா தியங்க வல்லார்கட்
கொல்லை கடந்துசென் றூர்புக லாமே. சுஎ (47)

ஓர் ஊர் புக வேண்டியிருக்கின்றது. ஆனுல் அதற்குத் தடையாக முக்காதம் கொல்லையும் அரைக்காதம் காடும் இருக்கின்றது. ஆனுல் அந்தக் காடும் கொல்லையும் கொல்லையென்று தனிப்படும் இடம் இல்லாமலும் காடு என்று தனிப்படும் இடம் இல்லாமலும் காட்டில் எல்லையும் கொல்லையில் எல்லையும் விரவிக் கிடக்கின்றது. அந்த கொல்லையின் எல்லையையும் காட்டின் எல்லையையும் வரையறை செய்தால் போக வேண்டிய ஊருக்கு வெகு விரைவில் போய் விடலாம் என்று மக்கள் வாழ்வுக்கு வழிவகுத்துக் காட்டும் முதல்வர் கூறுகின்ருர். ஊருக்குச் செல்வது என்ருல் (நிச்சயமாக) கண்டிப்பாக வழியிருந்தே ஆக வேண்டும். வழியில் வழியில்லாமல் கொல்லையும் காடும் இருக்க முடியாது. அதிலும் கொல்லை எது என்றும் காடு எது என்றும் வரையறை செய்ய முடியாதபடி கொல்லை காடாக இருக்கின்றதாம். ஊர் செல்வதற்கு வழிவகுக்காமல் கொல்லை எது காடு ஏது என்று வரையறை செய்து விட்டாலே வெகு எளிதாக அவ்வூருக்குச் சென்று விடலாமாம். இவ்வாறு சொல்லும் போது ஊர் என்று இருந்தால் போக்கவரத்திற்கு

தடையாக கொல்லையும் காடும் மண்டி கிடக்க முடியாது. அப்படி மண்டிக் கிடப்பினும் கொல்லை எது காடு எது என்று பிரித்தரிய முடியாது என்று சொல்லுவதும் தவறு. கொல்லையை காடாக்கலாம் காட்டை வெட்டி சுத்தப் படுத்தி கொல்லை ஆக்கலாம். இப்படிக்கிருக்க செய்ய முடியாத செயல் பேஏன்றும் அப்படிச் செய்தால் விரைவில் செல்ல வேண்டிய இடத்திற்கு சென்று விடலாம் என்றும் கூறுவது நம் அறிவிற்கு புலப்படாத சூனியமாக தோன்றுகிறது. வாழ்விற்கு வழி காட்டும் வள்ளல் இவ்வாறு கூறுவதால் சூனியமாகத் தோன்றும் பாழ் நிலையில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

தெய்வீகத் தன்மை வாய்ந்த பெரியோர்கள் அகிலாண்ட கோடிகளெல்லாம் புறத்தைச் சென்று உலராமல் அகத்தினுள் தேடியே கண்டு மகிழ்ந்திருக்கின்றார்கள். அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் உண்டு என்பது அவர்கள் காட்டிய மெய்நெறி விளக்கம். ஆகையால் இதில் கொல்லை என்றும் காடு என்றும் கூறப் பெறுவது நம் அகத்தில் விளங்கிக் கிடக்கும் இயற்கையே யாகும். இதை ஞானியர்களுடைய உண்மையறியாத புறக்கல்வி கற்ற மக்கள் வெளியில் தேடி அவலமான கலைகள் பலபுனைந்திருக்கின்றார்கள். அதில் திணை மயக்கம் என்பது ஒன்று. அந்த திணை மயக்கத்தைத் தான் இத்திருமந்திரம் கூறுகின்றது. கொல்லை என்பது மக்கள் வாழ்பகுதிக்கு பின்புறம் உள்ளது. அக்கொல்லை செம்மைப்படுத்த படாதிருந்தால் காடு மண்டிப் போய்விடும். அப்படியான இடம் நம் அகத்தில் மூலம் முதல் ஆறு தளங்கள் என்று சொல்வது உயிரியற் கலை செறிவுற்று விளங்கும் நாடு அதற்கு புறம்பாக உள்ளது புறத்திணை என்று சொல்லப் பெறும் தோட்டக் காடு. தோட்டக்காடாகிய இடத்திற்கு அகப்புறத்தை விட்டு புறப்புறமாக அகமாம் மனமும் அதைச் சார்ந்துள்ள உயிரும் அதைச் சார்ந்துள்ள வாசியும் ஒன்று கூடி தனக்குரிய பதி என்னும் நிலையை அடைய முடியாமல் தத்தளிக்கிறது. இதில் கொல்லை முக்காதம் என்பது இடம் வலம் நடு ஆகிய மூன்றில் சவண்டு திரியும் வாசியைக் குறிக்கும். சவலலுக்கு காதம் என்று பெயர். அதையே கொல்லை முக்காதம் என்று கூறுகின்றார். புக வேண்டிய ஊர் என்பது ஆதார மூலத்தளம். அங்கு சென்று நிலைபெற வேண்டுமானால் சுவாதிட்டாணம் மணிபூரகம் அனாகதம் விசுத்தி ஆக்ஞை என்னும் ஐந்தும் காடுகளாக இருக்கின்றன. அதனாலேயே பத்து பரும்புலி யானை பதினைந்து வித்தகர்ஐவர் வினோதகர் இரெண்மர் என்றதாய திருமந்திரத்தை நோக்குக. அந்தக் காடு ஒவ்வொன்றும் அரைக்காதமாக கொல்லை முக்காதத்துடன் ஐந்தரைக் காதமாக இருக்கின்றது. ஒவ்வொரு காடும் கொல்லையும் கூடியது ஐந்து காதமே தான். இதுவோ ஐந்தரைக் காதமாக இருக்கின்றது. அவ்வைந்தரைக் காதம் என்பது சரம் நிறம் உபயம் ஆகிய மூன்றும் தளங்கள் ஐந்தும் கூடியது. சிரம் திறம் உபயம் ஆகிய மூன்றில்

ஐம்பூதங்கள் நடைபெறுவதே ஐந்து தளமும் ஐந்து காடும். சரம் (ச) திறம் (ச) உபயம் (ச) ஆகிய பனிரெண்டு இராசிகளிலும் சூரியன், சந்திரன், அக்கினி, ஆகிய மூன்றாய் நின்றதில் ஒவ்வொன்றும் கூட ஆறாகும். ஒவ்வொன்றிற்கும் உரிய நாழிகை ஐந்தாக அமையும் பொழுது 60 நாழிகையாக நிறைவுறும். இவ்வாறு முறையாக நடைபெற்றால் செல்ல வேண்டிய ஆதார மூலத் தளத்தை வாசி சார்ந்து விடும். அவ்வாறு சாரும் பொழுது பிராணயாமம் நிறைவு பெறும். ஆனால் இப்பொழுது சரம் திறம் உபயமும் அதைச் சார்ந்துள்ள சூரியன் சந்திரன் அக்னியும் ஐம்பூத நிலயங்கள் ஆகிய தளங்கள் ஐந்தும் நடைபெற்றுக் கொண்டு தான் இருக்கின்றது. ஏன் அவ்வூரில் புகமுடியவில்லை என்றால் இராசி நாழிகை ஐந்தாக இல்லாமல் மேஷம் $4^1/_4$ ரிஷபம் $4^3/_4$ மிதுனம் $5^1/_4$ கடகம் $5^1/_2$ சிம்மம் $5^1/_4$ கன்னி 5 துலாம் 5 விருச்சிகம் $5^1/_4$ தனசு $5^1/_2$ மகரம் $5^1/_4$ கும்பம் $4^3/_4$ மீனம் $4^1/_4$ ஆக நடைபெறுகிறது. அவ்வாறு நடைபெறக் காரணம் இராசிநாழிகை ஐந்தே யாகினும் மேஷம் $4^1/_4$க்கு மேல் உள்ள $^3/_4$ கால் நாழிகை இடபத்தில் இருக்கிறது. இவ்வாறே ஒவ்வொரு ராசியும் மற்றொரு ராசியில் கலந்து விரவி நிற்பதால் வாசியை நடத்தும் வழியறியாதவர்களுக்கு தான் செல்ல வேண்டிய இடமாகிய பதியைச் சென்று அடையமுடியவில்லை. இதையே திணை மயக்கம் என்று சித்தர்கள் கூறியிருக்கின்றார்கள். இத்திணை மயக்கத்தை மயக்கின்றி வகுத்து ஒவ்வொரு ராசிக்கும் ஐந்து நாழிகையாக நடத்தினால் மாத்திரைப் போதில் அடைய வேண்டிய பதியாம் ஊர் சென்று அமைதி பெறலாம். அதையே கொல்லை முக்காதமும் காடு அரைக்காதமும் எல்லை மயங்கிக் கிடந்த இருநெறி எல்லை மயங்காது இயங்கவல்லார்கட்கு ஒல்லை கடந்து சென்று ஊர் புகலாமே என்று கூறுகின்றார். இவ்வாறாக வாசிநிலை அறிந்து நடத்தாமல் வாசி நடையின் விளைவை வரையறுத்து காணப் புகின் அது சரியான விளைவு காட்சியை காட்டாது. என்பனவே ஈண்டு கூறிய சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை தருக்கின்றது. இதை கூர்ந்து நோக்கில் வாசி சாதன விளைவு காட்சியை காணலாம். இதுவே சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

உழவொன்று வித்து ஒருங்கின காலத்
தெழுமழை பெய்யாத் திருநிலச் செல்வி
தழுவி விணைசென்று தான்பய வாது
வழுவாது போவன் வளர்சடை யோனே. சூலை (48)

நன்செய் ஆகிய நிலத்தை ஒன்று போல நன்றாக உழவு செய்கின்றான். வானம் வழங்குதலாகிய மழையைப் பெய்யவில்லை. நிலமகளானவள் நீரைத் தழுவி யணையும் செயற்பாட்டால் விளையக்

கூடிய பயன்தரும் விளைவும் விளையவில்லை. உழவன் அவன் கடமையை தவறுது செய்தமை போன்று அதைக் கண்காணிக்கும் சடையப்பனும் கண்காணித்துக் கொண்டுதான் இருக்கின்றுன் என்று புலப்படா உண்மை புலப்படச் செய்யும் ஆகம தந்திரி கூறுகின்ருர். இதில் நன்செய் நிலத்தை முறையாக உழுது கிடக்கின்றது. மழை பெய்யவும் இல்லை. விளைவு தரவும் இல்லை என்பதும் நிலக்கிழார் கண்காணிப்பதும் இயற்கையே இதனுல் ஏற்படும் விளைவு பஞ்சம் என்பது எல்லோருக்கும் தெரிந்த ஒன்று. பஞ்சம் ஏற்படுவதை யாரும் விரும்ப மாட்டார்கள். அதற்கு மாற்று வழி கூருமல் பஞ்சப் பயன் விளைவதை மட்டும் எடுத்துரைப்பது ஏன் என்று விளங்காத சூனியமாக இருக்கின்றது. இச்சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

நிலம் என்பது இவ்விடத்தில் சரீரத்தைக் குறிக்கின்றது. உழவு என்பது உயிர்ப்பு நடையைக் குறிக்கின்றது. அவ்வுயிர்ப்பு நடைப் பயிற்சிச் சாதனம் குருமுகமாய் கிடைத்து விட்டதைக் கொண்டு அச்சாதனத்தை சாதித்துக் கொண்டேயிருந்தால் அது பயனற்றதாகி விடும். நிலத்தை உழவு செய்த உழவனுக்கு வானம் வழங்கும் நீர் இன்றியமையாதது. வான் வழங்கும் நெறி இறைவனது திருஅருள் பாலிப்பாகும். அவ்வருளைப் பெருமல் என்ன சாதனம் செய்தாலும் வறண்ட நிலத்தை உழுவதை ஒக்கும். சாதனப் பயன் கிடைக்காது. இதையே உழவொன்று வித்து ஒருங்கின காலத் தெழுமழை பெய்யாத் திருநிலச் செல்வி தழுவிவினை சென்று தான் பயவாது என்று கூறுகின்ருர். கண்காணிப்பவன் பயிர் வளர்ப்பவனுக இல்லாமல் மயிர் வளர்க்கும் சடையோனுய் இருக்கின்ருன் என்று கூறுவது மாது ஒரு கூறனுகிய இறைவன் அம்மை ஒரு பாகத்து அமைந்துள்ள அருளாளனுக இல்லாமல் சடைமுடிக் கடவுளாக இருக்கின்ருன். சடைமுடிக் கடவுள் வான மண்டலமே அதிர ஆயிரம் முகம் கொண்டு பாயும் கங்கையையும் சடைமுடியில் அடக்கியவன். அப்பேர்க் கொத்த வளர் சடைக் கடவுள் அருள் உருவாம் அம்மையோடு இல்லாமல் இருந்தால் வானம் எப்படி வழங்கும். சிவானந்த விளைவு எப்படி விளையும். நிலத்தை உழுவது விளைவின் பொருட்டு விளைவிற்கு பயன்தருவது வான் வழங்கும் நன்னீர். அந்நன்னீர் இறைவனது திருக்கருணை. அத்திருக்கருணை ஓர் உருவம் பாகம் பிரியாதிருக்கும் மரகத வடிவ பச்சை பச்சுருக் கொண்ட அம்பிகை. அவள் அருளைப் பெறுவதற்கு அன்பு மயமாகிய திருவருள் ஒழுக்கம் வேண்டும். அதை அறியாமல் தன் செயலாகிய உழவை மட்டும் செய்தால் எப்படி பயன் விளையும். விளையாது. ஆகவே, குருவருளை பெற்ருலும் திருஅருள் வேண்டுவது அவசியம். ஆகையால், மாசற்றவர்களாகி இயமநியமாதி ஒழுக்கங்களைக் கடைப்பிடித்து அருள்

உருவாம் எந்தையின் கண்காணிப்புக்கு உரியவர்கள் ஆகுங்கள் என்று யோக ஞான சாதன பயிற்சியாளரை எச்சரித்துக் கூறுவதே இத்திரு மந்திரத்தில் காணப் பெறும் புலப்படா நெறியாகிய சூனியம். அச்சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டம் பத்தித்திருவினை ஆக்கும் எச்சரிக்கை மொழியாம் சூனிய சம்பாதனை உரை விளக்கம் ஆகும்.

குறிப்புரை :- பார் அஞ்சும் அச்சமே → பஞ்சம் திருவருள் இல்லையென்றால் பயிர் விளைவிப்பதில் பஞ்சம் தான் விளையுமாம்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

*பதுங்கிய பாய்புலி பன்னிரு காதம்*
*ஒதுங்கிய தண்கடல் ஓதம் உலவ*
*மதுங்கிய வார்கனி யாரமு தூறப்*
*பொதுங்கிய ஐவரைப் போய்வளைத்தானே.* சுமகா (49)

வலிமை மிக்க புலிஒன்று பாய்வதற்காகப் பதுங்கியது. அது பாயும் முன்னமே பாய்வதற்கு (வசதியாக) வாய்ப்பாக சமுத்திரமே அப்புலி சென்று உலவி வரும் அளவிற்கு ஏதுவாக அது கவர்ந்து இருந்த இடத்தை விட்டு விலகியது. மது தங்கிய களிப்பைத் தரும் அமிர்தம் ஊறும் படியாக பஞ்சாயத்தார்களாக நடுநிலையாளர்கள் ஐவரை தன்பக்கமாக காரிய சித்தியாகும் பொருட்டு வளைத்துக் கொண்டான்.

இந்தக் குறிப்பில் புலிபாய பதுங்கவும் அதைக் கண்டு கடல் நிலம்விட்டு நீங்கவும் அப்படி நீங்கி நிலத்தில் புலிக்கு உணவாகும் படியான உயிரினங்கள் எதுவும் இல்லாமல் தேன் சொட்டத் தங்கும் கனிகள் வளம்பெற நிறைந்திருக்க நடுநிலையாளர்கள் ஐவரை தன்வசப் படுத்திக் கொள்ளுகின்றான் ஒருவன் என்பது காணக் கிடைக்காத காட்சியும் வேற்றுமையில் ஒற்றுமையும் ஆக அமைந்து திகைக்க வைக்கிறது. அவ்வாறு திகைக்க வேண்டியதில்லை. இது நம் உலகத்தில் காணக் கிடைக்காததே தவிர நம்மால் காண முடியாத ஒருவன் உள்ள உலகத்தில் இவ்வாறு இருக்கின்றன என்பதை இச்சூனியத்தில் தேடிக்காணும் சம்பாதனையாம் சூனிய சம்பாதனை உரையில் காணலாம்.

பிங்கலை நாடி சூரியகலை உலவை கொள்ளும் பிங்கலை நாடி பூரிதம் கொள்ளுங்கால் சூரியன் அனற்கதி உள்ளவனாக இருப்பதால் அதன் எதிர்நிற்க மாட்டாமல் சீதளம் இளகி வாசி நடை கொள்ள வெளி நிலம் கிடைக்கின்றது. இதையே பதுங்கிய பாய்புலி பன்னிருகாதம் ஒதுங்கிய தண்கடல் ஓதம் உலவ என்று கூறுகின்றார்.

அதில் நடைகொண்டு உலாவும் புலிக்கு உணவாகும் வனவிலங்குகள் எதுவும் இல்லை தேன் சொட்டும் அமிர்தம் போன்ற தீங்கனிகள் நிரம்பி இருக்கின்றன என்று மேன் மண்டலமாகிய சந்திரமண்டலத்தின் தன்மையைக் கூறுகின்றார்.

ஒருவன் ஞானாசிரியனுடைய நல்லருள் பெற்று சாதனை செய்யும் போது பிங்கலை நாடியில் ஓடும் சூரிய கலையை முப்பத்திரண்டு அங்குலம் இழுத்து அதையே நடை கொள்ளச் செய்யுங்கால் யோக சாதனத்திற்கு தடையாயிருந்த சீதளம் பொருந்திய ஆமங்கள் எல்லாம்கழன்று வழிவிட்டு அமிததாரணை செய்ய வாய்ப்புக் கிடைப்பதையே "மதுங்கிய வார்கனி யாரமுதூற" என்று கூறுகின்றார்.

இவ்விளைவைக் கண்டிருந்த சாதகன் தன்னுடைய சாதனத்தை மேலும் நன்கு உறைப்பச் செய்து இடம்வலம் இரண்டாய் இல்லாமல் நடுநிலைத் தானத்தில் நின்ற ஐவரைப் போய் வளைத்துக் கொண்டான் என்று கூறுவது ஆருதாரத்தில் உள்ள ஐம் பெருந்தலைவர்களை வசப்படுத்திக் கொண்டான். எவ்வாறெனின் அகார உகார மகார மாகிய ஓங்காரம் விளைந்து தன்னுள் அடக்கிக் கொள்ளும் இயலுபுடையதாக வாய்க்கின்றது.

"பதுங்கிய பாய்புலி என்பதில்" 'அ' காரமும் ஓதுங்கிய தண்கடல் ஓதம் உலவ என்பதில் 'உ' காரமும் மதுங்கிய வார்கனி யாரமுதூற என்பதில் 'ம' காரமும் தோன்றுகின்றது. அது எல்லாவற்றையும் அடக்கிக் கொள்ளக் கூடியது அதைக் கொண்டு சாதகன் போது தங்கிய ஆருதார மலரில் இருப்பவர்களை வளைத்துக் கொள்ளுகிறான் என்பது ஐம்பெருந் தலைவர்கள் கூடிய திரு ஐந்தெழுத்தை ஓங்காரம் சுற்றி வளைத்துக் கொள்ளுகின்றது. இதனால் சாதகன் ஐம்பெருந் தலைவர்கள் செய்யும் பேராற்றல் மிக்க வல்லவன் ஆகின்றான் என்பது இத்திருமந்திரத்தில் காணும் சம்பாதனைத் தேட்ட உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

தோணியொன் றேறித் தொடர்ந்து கடல்புக்கு
வாணிபஞ் செய்து வழங்கி வளர்மகன்
நீலிக் கிறையுமே நெஞ்சின் நிலைதளர்ந்
தாலிப் பழம்போல் அளிக்கின்ற அப்பே. ருய (50)

கடல்கடந்து வாணிபம் செய்யும் நோக்குடன் நல்ல தோணியைக் கொண்டு தொடர்ந்து பயணத்தை மேற்கொண்டு பொருள் ஈட்டி அப்பொருளை வழங்கும் முறையோடு வழங்கி ஓர் ஆண்மகவை

வளர்க்கின்றுன். அம்மகன் மாயையை விரும்பி குறைபாடு கொள்ளுமேல் அது மழைபெய்ய வேண்டிய வானம் ஆலங்கட்டி மழையாய் பெய்தால் அதன் பயனுவது மிகுந்த குளிர்ச்சி கசியும் நீராக இருப்பது அன்றி பயன் தராது அதனுல் தந்தைக்கு மனக்கவலே கொள்ள வேண்டிய நிலே ஏற்படும் என்று கூறுகின்றுர். கடல் கடந்து பொருள் ஈட்டி வாணிபஞ் செய்து வழங்கி வளர்த்த மகன் மாயை வசப்பட்டு தடுமாறுவது யாரும் விரும்பதக்க தல்ல என்பதை மட்டும் இதில் குறிப்பிடுகின்றுர் இது விரும்பத்தக்க விளேவு அல்லவாயினும் இவ்விளேவை தவிர்க்க வழி ஒன்றும் கூருமல் குறிப்பிட்டு காட்டுவது புலப்படாத சூனியமாக இருக்கின்றது. அச் சூனியத்தில் குறிப்பில் குறிப்புணர வைக்கும் பெரியவரின் சொற் சூனியத்தில் தேடிக் காணப் பெறும் சூனிய சம்பாதனே உரை வருமாறு.

கூருன முகப்பை யுடையதும் காற்றுல் உந்தப் படுவதும் கரையேற்றம் தருவதும் ஆகிய தன்மையுடைத்தாதல் பற்றி பிராணன் லயமாய் வாசியிலேறி ஆமம் என்னும் மூலாதாரத்தை அடைவதாம் பிராணுயாமத்தை தோணிக்கு உவமித்துக் கூறுகின்றுர். இதுவே தோணியொன்றேறித் தொடர்ந்து கடல்புக்கு என்று கூறுகின்றுர். கடலாகிய அளத்தற்கரிதாம் தன்மையும் திரையெழுந்து மோதுதலும் உண்ணமுடியாத உவர்ப்பும் உள்ள இயல் வாசியின் தன்மையைக் காட்டுதலால் அது கடல் என்று கூறப் பெறுகிறது. அவ்விடத்தில் அமைதி கொண்டு வாசி தாரணே செய்து அங்கி தாரணே அமையப் பெறும் செயற்பாட்டை செய்தலேயே வாணிபம் என்று கூறுகின்றுர். இவ்வாறுன வாசி தாரணே அங்கி தாரணே வாய்க்கப் பெறும் நலத்தால் அமையும் விளேவே புத்திரப் பேறு வாய்க்கப் பெறுவதாகும். அவ்வாறு வாய்க்கப் பெற்ற புத்திரன் புதிதாகக் காணும் உலகியற் சூழலில் சிக்கிவிடாமல் காப்பதும் தந்தையின் பொறுப்பேயாகும். புதிதாய் காணப்பெறும் உலகியல் சூழல் என்பது ஐம்பெரும் பூதங்களின் மாயா விசித்திர விளேவுகள். ஆன்மாவிற்கு ஞானமாகிய புத்திரன் தோன்றும் பொழுது ஞானத்தின் சிறப்பியற்கையாக அமையும் சித்து விளேயாட்டாகிய மாயா விசித்திர சுழலில் ஆன்ம ஞானம் நாட்டம் கொண்டு ஆடல் புரிவதே சித்து விளேயாட்டு. அதையே வாணிபஞ் செய்து வழங்கி வளர்மகன் நீலிக் கிறையுமே என்று கூறுகின்றுர். நீலி என்பது பாசத்தின் முதிர்ச்சியாகிய உருவைக் கொண்ட மாயா காரியம் அதை அநுசரித்தால் சிறுமை ஏற்படுமே தவிர பெருமை ஏற்படாது. அதனுலேயே அத்தன்மையாளர்கள் சித்தர்கள் என்றும் அவர்கள் காட்டும் ஆடலே குழந்தை விளேயாட்டாம் சித்து விளேயாட்டு என்றும் சொல்லப் பெறுகிறது. இந்த விளேயாட்டினுல் உலகிற்கு நன்மை ஏற்பட்டாலும் அதை ஈன்றவனுக்கு கடந்த பாசம் தொடர்வுறும் தன்மையாக கருதி

அதனிடத்து வெறுப்புக் கொள்ளுதலே இயற்கையாகும். அதையே நீலிக் கிறையுமே நெஞ்சின் நிலை தளர்ந்து என்று கூறுகின்றார். இயமநியம ஆசன பிராணாயாம சாதனைகளைச் செய்து அடையும் பயன் நிறைவு பெறாமல் குழந்தை விளையாட்டாக அமையுமாயின் அதற்கும் ஒரு சிறப்பியல் உண்டு என்பதையே ஆலிப் பழம்போல் அளிக்கின்ற அப்பே என்று கூறுகின்றார். ஆலிப்பழம் என்பது ஆலங்கட்டி மழை அது நல்ல குளிர்ச்சியைத் தரும் நீரையும் தரும். ஆனால் ஆலங்கட்டி ஆலங்கட்டியாகவே நின்று விடாது அது போன்று உலகில் கர்ணப்பெறும் விசித்திர விளைவுகள் அனைத்தும் அழியப் பெறுவனவே. அதை விடுத்து மேநிலைக்குச் சென்றவர்கள் தன் வழித்தோன்றல் அம்மாயாகாரிய நிமித்தத்தின் வெறுப்புக் காட்டுவார்களேயன்றி உவப்புக் காட்டமாட்டார்கள். அதுவே முறைமை என்று ஞான சாதன பேறு பெறலினும் குறைபாடு நேரவிடாமல் காக்குமாறு விடுக்கும் எச்சரிக்கையே

தோணியொன் றேறித் தொடர்ந்து கடல்புக்கு
வாணிபஞ் செய்து வழங்கி வளர்மகன்
நீலிக் கிறையுமே நெஞ்சின் நிலைதளர்ந்
தாலிப் பழம்போல் அளிக்கின்ற அப்பே.

என்று கூறுவதாகும். இதுவே குறிப்பிற் குறிப்புணர வைக்கும் சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

யோக சாதனை விளை வுண்மைக் காட்சி

முக்காத மாற்றிலே மூன்றுள வாழைகள்
செக்குப் பழுத்த திரிமலந் காய்த்தன
பக்கனார் மிக்கார் படங்கினார் கன்னியர்
நக்கு மலருள் நடுவுநின் றாரே. ருமக (51)

மூன்று காதம் அளவுள்ளதான ஆற்றினிடத்து மூன்று வாழைகள் இருக்கின்றன. அது பழுக்க ஆரம்பித்தது. காய்க்கவும் ஆரம்பித்தது. பழம் வாழைப்பழமாக இல்லை. காயும் வாழைக்காயாக இல்லை. பழுத்தது செக்காயிற்று காய்த்தது திரிந்து ஒடுங்கும் திரிமலம் ஆயிற்று. பக்கத்தில் உள்ளவர்கள் மிகுதிப் பாடு கொண்டார்கள் கன்னியர்கள் கொடியேந்தி விரிந்த மலருள் நடுநிலை கொண்டு நின்றார்கள் என்று கூறுவதில் வாழை, தோட்டத்தில் வைக்க கூடியவையே யன்றி ஆற்றில் வைக்கக் கூடியது இல்லை. அல்லாமலும் ஆற்றில் மரங்களை வளர்ப்பது வழக்கமில்லை.

அதுவும் காதத்திற்கு ஒன்ருக இருக்கின்றதாம். அப்படி யிருக்கின்ற வாழை செக்கு செக்காய் பழுக்கின்றதாம். விரிந்து மலங்கி காய்கின்றதாம். பக்கத்தில் உள்ளவர்கள் மிக்கார்கள் ஆணுர்களாம். கன்னியர்கள் கொடியேந்தி புறப்பட்டு மலர் நடுவுள் நின்ருர்களாம். ஈது ஒன்றும் யாங்ஙனும் காணக் கிடைக்காத காட்சி. இப்படியாகிய சூனியத்தில் காணப்படும் தேட்டமாம் சம்பாதனை உரை வருமாறு.

முக்காதம் என்பது காதில் உள்ள மூன்று பகுப்புக்கள் அம்மூன்று பகுப்பாவன. புறஒலி, அகஒலி என்பனவாம். அதில் புறஒலி இரண்டு அக ஒலி ஒன்று ஆகிய மூன்றுண்டு. அதையே முக்காதமாற்றிலே என்று சொல்லுகின்ருர். ஆற்றிற்கு ஒலிக்கும் இயல் உடைமையால் (ஒலி இயல்) (ஒலியல்) என்ற ஒரு பெயருண்டு. அவ்வொலி காது அண்டத்தின் கூருக உள்ளபடியால் அண்டத்தில் கால் கொண்டு தோன்றும் வளியின் ஒலியே அதுவாகும். அவ்வொளி உயிர்க்கணங்களுக்கு வாழ்வை தருகின்ற படியால் மூன்றுள வாழைகள் என்கின்ருர். 'வ' காரம் என்பது காற்றினுடைய உயிர்கூறு எழுத்தாகும். அது இழைந்து சுழல்கின்ற படியால் வாழையென்று கூறப்பெறுகிறது. வாழையின் இலை சுருண்டு தோன்றுகின்றமையும் அதில் தோன்றும் தாள் இழைந்து நெருக்கம் கொள்ளுவதாலும் வாழையென்று கூறப்பெறுகிறது. ஈண்டு செவிப்புலனினும் சுழற்சியும் அதில் சாதன விளைவால் ஏற்படும் நிகழ்ச்சியில் பிடரிமார்க்கமாக கீழ்முகம் கொண்டு இறங்குகின்ற தன்மையாலும் முக்காதம் ஆற்றிலே மூன்றுள வாழைகள் என்று கூறுவது சிவயோக சாதன விளைவை காட்டுகின்றது. மேலும் அதறிலேருன்றுகின்ற தோற்றங்கள் வாழைப்பூ மடலும் அதனுட் தோன்றும் பூங்கொத்தாகிய சீப்பும் அச்சீப்பில் திரிதிரியாய் தோன்றும் மகரந்த நரம்பும் காய்ந்து அழிவது திரிமலம் காய்த்தது என்று கூறப்பெறுகிறது. காய்த்தால் பழமாக வேண்டும் அல்லவா ? அப்படி பழுக்கவும் செய்கின்றது. அந்த பழம் சுழன்ருடும் செக்காக இருகின்றது. சுழன்ருடும் செக்காவது சாதன விளைவால் மூலாதாரத்தமைந்த வாசி வெளிபோந்து செல்லாமல் அவ்விடத்திலேயே சுழன்று நின்று ஆடுவதால் செக்குப் பழுத்தது என்று சொல்லுகின்ருர். இதன் விளைவாக காணும் நிகழ்ச்சியை பக்கணர் மிக்கர் என்று சொல்லுகின்ருர். பக்கணர் என்பது பக்காநார் என்பதின் குறுக்கம். பக்கு என்னும் கூகையானது கூகூ என்று இறையும் தன்மையால் கூகை குளருகின்றது என்று சொல்வதுண்டு. அக்கூகை அவ்வாறு குளறுவது சாவின் நிலைபேருகவுள்ள இடத்தில் காணப்பெறும் அவ்விடம் உயிரிழந்த களேவரம் கிடக்கும் இடமாகும். அந்நிலைமைக்கு குறியீட்டுப் பெயர் சாத்திரம். மேற்கூறிய விளைவான சிவயோக சாதன செயற்பாட்டை அடையாமல் சாத்திரம் கூறுவது பேரிரைச்சலுக்கும் குளறுவதற்கும்

ஒப்பாகும் என்று அறிவின் மிக்கோர் என்று உலக மக்கள் கூறப்பெறும் சமயசாத்திய வாதிகளை குறிக்கின்றது. மூலையில் அடங்கி வெளியிடத்து தலைகாட்டாமல் இருக்கும் கன்னியர்கள் கொடிபிடித்துக் கொண்டு விரிந்த மலர்மீது நடுநிலைப்பாடு கொண்டு நிற்பதாக சிவயோக சாதனம் செய்து பலபோகம் துய்த்த ஞானியர் சிவயோக ஞானசாதன வெற்றிக் கொடியேந்தி சிவமணம் கமழ சமரச சுபாவம் உடையவர்களாய் விளங்குவதை பக்கனுர் மிக்கார் படங்கினுர் கன்னியர் நக்கு மலருள் நடுவு நின்ருரே என்று கூறுகின்ருர். இதுவே வெளிப்படை தோற்றமாய் காணப் பெருத தோற்றமாம் சூனியத்தில் தேடிக் கண்ட சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

**அடியும் முடியும் அமைந்ததோர் ஆத்தி**
**முடியும் நுனியின் கண்முத்தலை மூங்கில்**
**கொடியும் படையுங் கோட்சரண் ஐந்தும்**
**மடியும் வலம்புரி வாய்த்ததவ் வாறே.** ருமஉ (52)

ஒரு அதிசய மரம் இருக்கின்றது. அம்மரத்தினுடைய அடிப்பாகமும் தலைப்பும் அத்தியாக இருக்கின்றது. அப்படி முடிந்த மரத்தின் நுனியின் இடமாக முத்தலை மூங்கில் ஒன்று இருக்கின்றது. கொடியும் படைக்கலன்களும் சரத்தைக் கோத்த தனுசும் இருக்கின்றன. மேலும் வலம்புரி சங்கும் ஒன்று உண்டு. அதை முழக்கினுல் படைகள் யாவும் மடிந்து போகும் வாய்ப்புண்டு. என்று கூறுவதில் ஒரு மரத்தினுடைய அடியும் நுனியும் ஒன்ருகவும் நுனியின் முடிவில் மூன்று தலைப்புகளைக் கொண்ட மூங்கிலாகவும் வெற்றிப்பாதையும் படைக்கலமும் வில் அம்பும் இருக்கின்றன என்றும் இத்தனை இருந்தாலும் வலம்புரிச்சங்கு ஒன்று உண்டு அதை முழக்கினுல் மட்டுமே படைகள் யாவும் மடிந்து போய்விடும் என்று கூறுவது. எங்கும் காணமுடியாத ஒரு மரமும் அதனிடத்து போர்க்கருவிகளும் இருக்கின்றன. படைகளை முறியடிப்பதற்கு இத்தனை இருந்தாலும் சங்கம் ஒன்றே போதும் என்று கூறுவது இயற்கைக்கு மாருன தொடர்பு கொண்டுள்ள செயற்பாட்டு அமைப்பு விளைவுக் காட்சியாகும். வெளிப்படையாகக் காணக் கிடைக்காத சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

அடியும் முடியுமாகிய கீழ்மூலம் மேல்மூலம் இரண்டும் அமைவுறப் பெற்ற பிரம தண்டத்தின் மேலும் கீழும் நந்தி ஒளியெனக் கூறப்பெறும் ஒளிவட்டம் மிளிர்ந்து காணப்பெறுவதையே அடியும் முடியும்

அமைந்ததோர் ஆத்தி என்று கூறுகின்றார். நந்தி ஒளி பிரகாச வட்டம் என்பதையே நற்றமிழில் ஆத்தி என்று சொல்லுகின்றார். ஆத்தி அமைந்து காணும் அடிமுடியைக் கொண்ட தாருவாய் விளங்கும் ஆத்திமரமாகிய பூதிகத்தில் வெளிப்பாகத்தில் முத்தலை மூங்கில் என்று மூவகைச் சரங்கள் நடைபெறும் அனுகதத் தானமாகிய ஆதேயமாம் நாசியையே முத்தலை மூங்கில் என்று கூறுகின்றார். உட்துளை பொருந்தி வாய் அடைப்புக் கொண்டுள்ளதால் முத்தலை மூங்கில் என்று குறிப்பிடுகின்றார். (மேலும் கொடியும் உண்டு படையும் உண்டு எனக் கூறப் பெறுவது) வெளியை அளாவி நிற்கும் கருடனையும், சென்று பற்றும் பொறியாகிய கூர்மை மிக்க வாளாயுதத்தையும் குறிப்பிடுகின்றார், அவ்விரண்டும் சக்கராயுதத்தையும் வாளாயுதத்தையும் ஒத்த செவிப்புலனையும் கட்புலனையும் குறிப்பிடுவனவாம். செவி சுழற்சி மிக்க சக்கராயுதத்தையும் கண் பாய்ந்து மீளும் கூர்மை பொருந்திய வாளாயுதத்தையும் ஒத்துள்ளன. மேலும். கோலாகிய சரத்தைக் கோத்து நிறகும் தன்மையுடையதாய் அங்கத்தில் ஒருபுடை சார்பு கொண்டு விளங்கலால் சார் அங்கம் எனப்படும் தனுவாகிய முள்ளந் தண்டை கொடியும் படையும் கோட்சரம் ஐந்தும் என்று கூறுகின்றார். இதில் மூக்கினை முத்தலை மூங்கில் என்றும், செவியையும் கண்ணையும் கொடியும் படையும் என்றும் சொல்லுவதில் காணப்பெறும் மூன்றுடன் முள்ளந்தண்டினை சாரங்கமாகியவில்லென்றும் கூட்ட நான்காகி படைகள் யாவையும் மடிவு கொள்ளச் செய்யும் வலம்புரிச் சங்கம் என்னும் குரல்வளையையும் கூட்டப் பஞ்ச ஆயுதங்களாக அமைவு பெறுகிறது. ஆகிய இவ்வைந்தால். விளையப்படும் விளைவாவன முத்தலை மூங்கில் என்னும் ஊதும் தலைப்பும் அடைத்து இசைக்கும் தலைப்பும் வெளிப்போம் தலைப்பும் உடைய புல்லாங்குழல் என நாசியைக் கூறுகின்றார். அதில் ஏற்படும் நாதம் பசுவாகிய உயிரினங்களை வசீகரிக்கும். கொடியென்னும் வெளிப்போந்து சுழற்சிக் கொள்ளும் தன்மையுடைத்தாகிய கருடனுடைய இயலைக் கொண்டு விளங்கி கூறுபாடு கொள்ள வைத்து வெற்றி வாய்ப்பைத் தரும் சக்கராயுதமாக எழுதாக் கேள்வியைக் கேட்கும் சக்கராயுதத்தை செவிப்புலனைக் கூறுகின்றார். செவிப்புலனின் சிறப்பியலாக காணப் பெறுவது எழுதாக் கேள்வியைக் கேட்கும் வாய்ப்பு வாளாயுதம் என. கூரிய நோக்குடன் சென்று குற்றத்தைக் களைந்து மீளும் கவர்தரும் ஆற்றலைக் கண்ணிற்கு குறிப்பிடுகின்றார். வசியம் வாய்ச்செயம் ஆற்றலுக்கு ஆட்படுத்தல் குறிக்கோள் நிறைவு பெறல் ஆகியன எல்லாமும் ஞானசாதனச் சார்பால் ஈண்டுக் கூறிய விளைவுகளை தந்தாலும் இதில் மிக்கதாய் இருப்பது வலம்புரிச்சங்கம் என்னும் கண்டக்கருவியே யாகும். அதன் ஒலியால் பகைக்குலம் எல்லாம் அழிந்து போய்விடும் என்று ஞானசாதன விளைவில் தோன்றும் தோற்ற விளைவை அதனால் ஆம்

பயனை நெறிப்படுத்திக் கூறுகின்றார். இதில் மேல்மூல கீழ்மூல ஒளியை நந்தி ஒளியாம் ஆத்தி என்றும் ஆன்ம ஞானத்தைத் தரும் ஒலி வழங்கும் இடமாகிய நாசியைப் புல்லாங்குழல் என்றும் எழுதாக் கேள்வியாகிய உபதசம் சொல்லும் நிலையத்தை சக்கராயுதம் என்றும் குறிக்கோள் நிறைவைத் தரும் செயற்பாட்டைக் கொண்ட சரசாதன ஸ்தானத்தை சார் அங்கம் என்றும் இவைகளையெல்லாம் எடுத்து இயம்பும் குரல்வளைத் தானமாகிய கண்டக் கருவியை வலம்புரிச் சங்கம் என்றும் கூறப்பெறுவதில் ஆன்ம ஞான சாதன விளக்கப் பயன் தெளிவாகின்றது. இதுவே, திருமாலின் பஞ்சாயுதங்கள். இவைகளின் பேராற்றல் எல்லா சித்திகளும் அமைவுற்றுக் காணும். இதுவே, காணக் கிடைக்காத சூனிய நிலையில் தேடிக்கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை. (இவ்வாகமத்தை உலகுக்கு அருளிச் செய்த காலம் மகாபாரத காலத்திற்கு முற்பட்டதாகையால் திருமாலுக்குரிய பஞ்சாயுதங்களில் தண்டாயுதம் என்று இப்பொழுது கூறப் பெறுவதை தண்டம் என்னும் மூங்கிலாலாகிய புல்லாங்குழலை தண்டாயுதம் என்று கூறுகின்றார். அக்காலத்தில் இருந்த நூற்களில் காணப்படும் செயற்பாட்டை உள்ளடக்கி கூறுவதாக இத்திருமந்திரம் அமைந்துள்ளது.

புராணங்களில் கூறப்படும் கதைகள் - இதனுடன் இணைக்க வேண்டும்.

திருமந்திரப் பாசுரங்கள் அனைத்தும் வெண்டளை யாப்பாலே அமைந்துள்ளது. ஐயைந்தும் என்றால் வெண்டளை அமையவில்லை. பொருளும் அமைவு பெறவில்லை ஐயைந்து என்பது ஐந்து எனத் திருத்தப்பட்டுள்ளது என்று உறுதி செய்து ஐந்து என்று காட்டப்பட்டுள்ளது.

கொடி வானளாவிப் பறக்கக் கூடியது. கருடனும் அத்தன்மையுடையதால் ஆம். அதனையும் சென்று பற்றும் தன்மை கண் கொண்டுள்ளது.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

பன்றியும் பாம்பும் பசுமுசு வானரந்
தென்றிக் கிடந்த சிறுநரிக் கூட்டத்துக்
குன்றாமை கூடி தராசின் நிறுத்தபின்
குன்றிநிறையைக் குறைக்கின்ற வாறே. ருமக (53)

பன்றியும் பாம்பும் பசுவும் முசுவும் வானரமும் வெப்பம் தீரும்படியாக தென்றல் காற்று வாங்கிக் கொண்டு புன்மை மிக்க நரிக்குழுவில் கிடக்கின்றன. அச்சிறுமையைத் தவிர்த்து நிறைகோலால் நிறுத்ததன்

பின்னர் சிறுமையைத் தரும் அளவையைத் தவிர்க்கின்ற தன்மை காணப் பெறக் கிடைக்கின்றது என்பது உலக நிகழ்ச்சியில் காணக் கிடைக்காத சூனியம் இவ்வாறான சூனியத்தில் தேடிக் கிடைக்காத தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

நிலமைந்து நீர்நான்கு தீ மூன்றே

உலவை இரண்டொன்றுவிண் : ஞானக்குறள்

என்றபடி அருவமாகிய ஒரு குணம் பொருந்திவானும். அருஉருவமாகிய காலும் (காற்றும்) அருவம், அருஉருவம், உருவம் மூன்று தன்மையும் பொருந்திய நெருப்பும், அருவம், அருஉருவம், உருவம், அகளம் (சுவை) ஆகிய நான்கு தன்மையும் கொண்ட நீரும் அருவம், அருஉருவம், உருவம், அகளம், அத்துடன் சகளீகரித்துக் காணும் தன்மை உடைய மண்ணும் ஆகிய இவ்வைந்தின், ஓசை அத்துடன் ஊறு அவையிரண்டுடன் உருவம் அம்மூன்றுடன் சுவை, இந்நான்குடன் மணம் ஆயதன்மையைத்தரும் ஐம்பூதங்களை திருமூலர் நமக்கு உருவகப் படுத்திக் காட்டுகின்றார்.

ஒரே காலுடையது பாம்பு.

ஒரு காலில் நிலைபெறுவதாய பாம்பு இரண்டு காலில் நிலைபெறுவதாயது குரங்கு அவ்வாறு மூன்று கால்களை கொண்டுள்ளது முசு (ஒரு கையையும் காலாகக் கொண்டு நிற்கும் இயல்புடையது முசு) இங்ஙனம் நான்கு கால்களைக் கொண்டு நிலைபெறுவது கால் நடையெனவே பெயர் கொண்டுள்ள பசு. இத்துடன் நான்கு கால்கள் நிலம் சாரும் தன்மையோடு தலையையும் நிலத்தில் சார்புறச் செயல்படுத்தும் செயற்பாடு உள்ளது பன்றி. ஆக இவ்வைந்தும்மேற்கூறிய ஐவகைத் தன்மைப் பொருத்தத்தை காட்டுவனவாக அமைவதால் அவைகளை பன்றியும் பாம்பும் பசுமுசு வானரம் என்று கூறுகின்றார்.

இவைகள் ஐவகைத் தன்மையால் எல்லாமுமாய் விளங்கும் பெரும் சிறப்பு உடையன. இவ்வாறான சிறப்புள்ள ஒரு கூட்டம் அமிர்தமயமாகிய வடமலைச் சாரற் காற்றை வாங்காமல் தென்மலைச் சாரற் காற்றாகிய தென்றலை விரும்பி சிறுகாலன் எனப் பெயர் கொண்ட விலங்கின் வன்மைக்கு சிறப்பு மிக்கதாகிய கால் சிறு காலாகி புன்மை கொண்டுள்ள நரிக்கூட்டம் என்னும் ஒடிப்பதுங்கும் கால் என்று உண்மை உணர்ந்தோரால் கூறப்படும் பன்னிரெண்டு எட்டாய் சிறுமை கொள்ளும் காலாகிய அதோகதிப் பிராணவாயுவைச் சார்ந்து கிடக்கின்றது. அதை தென்றிக் கிடந்த சிறுநரிக் கூட்டத்து என்கின்றார் இதனால் விளைவன புன்மையேயாம். இவ்வாறாகிய சிறுமை தீர்க்கப்பட

வேண்டியதைக் குன்றுமை கூட்டி என்று சொல்லுகின்றார். குன்றுமையைக் கூட்டுவதற்கு நிறைகோலாகிய தராசில் நிறுக்க வேண்டுமாம். தராசு என்பது இடம்வலம் இரண்டாகிய தலைப்புகளைக் கொண்ட இடகலை பிங்கலை நாடியாகும். அதை நிறுப்பது இடகலையும் பிங்கலையும் சமநிலையில் நிற்க ஒருமைப்பாடு கொண்டுள்ள தலைப்பை உடைய நடு உள்ள முள். நேர் நிற்கும் அம்முள்ளே சுழிமுனை முற்கூறிய இரண்டும் ஒன்று கூடினால் அது ஒரு முனையாகிச் சுழிமுனையாகும். அவ்வாறு சுழிமுனையை சேர்ந்து குன்றுந் தன்மையைக் குறைக்கலாம். இதையே குன்றி நிறையை குறைக்கின்றவாறே, என்று நிறைவு பெற வேண்டிய தன்மையை நமது மந்திர உபதேசத்தில் காட்டுகின்றார். இது சூனியத்தில் தேடக் கிடைக்காத தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை என்றறிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

மொட்டித் தெழுந்தோர் மொட்டுண்டு மொட்டினைக்
கட்டுவிட் டோடின் மலர்தலுங் காணலாம்
பற்றுவிட் டம்மனை பாழ்பட நோக்கினாற்
கட்டுவிட் டார்க்கன்றிக் காணவொண் ணாதே. ருயச (54)

முகிழ்த்து கிளைத்து எழுந்த ஒரு மொட்டு இருக்கின்றது. அந்த மொட்டினை வளையம் வர ஒட்டி கட்டினால் மலர்தலைப் பார்க்க முடியும். பற்றுதலை விடுத்து அந்தமலர்வளையத்தை உருத்தெரியாமல் கண்ணுற்ற அப்படி கண்ணுறுவது கட்டி விட்டாரையன்றி மற்றவர்களுக்கு காண்க முடியாது என்று கூறுவதில் மலர் அரும்பு மாலையாக கட்டப்பெறுகிறது என்றும் வளையம் வரும்படியாக கட்டுவிட்டோட்டினால் அது மலர்தலைக் காணலாம் என்றும் சொல்லுவதில் மலர் அரும்பு கட்டினால் கொஞ்ச நேரத்தில் மலர்ந்துவிடும். அது இயற்கை. இந்த மலர்மாலையை வளையம் வர கட்டிவிட்டாரை தவிர கண்ணுற் காண முடியாது என்று சொல்லுவதும் பற்றுக்கோடு இல்லாமல் அந்த மாலையை உருத்தெரியாமல் பார்த்தால் அவர்களுக்கு மட்டும் அது மலர்தல் காண முடியும் என்று கூறுவதில் மலர் அரும்பை வளையம் வர கட்டினால் தான் மலர்தலைக் காணலாம் என்பது இயற்கைக்கு மாறுபாடானது. கட்டினாலும் கட்டாவிட்டாலும் மொட்டு மலர்ந்தே தீரும். அப்படிக்கிருக்க கட்டிவிட்டாரையன்றி மற்றையோர்களுக்கு அந்த மலர்மாலையை காணவே முடியாது என்று கூறுவதும் நடைமுறைக்கு புறம்பான காட்சி. இவ்வாறு ஒரு அம்மானை விளையாட்டு இருக்கின்றது. அம்மனையை கட்டினவன் தான் காணமுடியும். கட்டினால் தான் மலரவும் செய்யும். அம்மாலையை பற்றுதலை விட்டு எடுத்தெரிந்து விளையாடும் போது அந்த

அம்மானை விளையாட்டை கட்டிவிட்டவன் தான் காணலாம் என்று சொல்லுவது இயற்கைக்கு விரோதமாக காணக் கிடைக்காத சூனியம். இதில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வரமாறு.

ஈண்டு கூறப்பெரும் மலர் அரும்பு முட்டிக் கிளம்பும் வாசி. அதையே மொட்டிட்டு எழுந்ததோர் மொட்டுண்டு என்று சொல்லுகின்றார். அம் மொட்டு கட்டுப்படாமல் மலர்ந்தால் வதங்கி அழிந்து போய்விடும். அந்த மொட்டை கட்டுவது என்பது குருமுகமாக தெரிந்து கொண்டு சாதனம் செய்யும் வாசி சாதனம். மொட்டு வதங்கி அழிவது பனி ரெண்டங்குலம் பாய்ந்த வாசி பனிரெண்டங்குலம் மீளாமல் மூன்றில் ஒரு கூறு அழிவதைக் குறிக்கும். சென்ற அளவு மீளாமையால் அது வளையம் வராமல் கம்மியாக இருக்கின்றது. வளையமாக அரும்பைக் கட்டிவிட்டு ஓட்டினால் அது வதங்கி அழியாமல் மலர்ச்சியுறும். மலரைக் கட்டுகின்ற நார். நாடியாகும். அதில் கட்டுப்படுகின்ற மலர் வாசி. அது சென்ற அளவு மீளுவது மாலையாக கட்டுவிட்டு ஓடுவது. வாசி மலர் மாலையாக கட்டப் பெறுவதை வாசி சாதனம் செய்பவனைத் தவிர மற்றவர்கள் காண முடியாது. அதையே கட்டுவிட்டார்க் கன்றி காணவொண்ணதே என்று சொல்லுகின்றார். ஆனால் இந்த மாலை கழுத்தில் அணிந்து கொள்ள கூடிய மாலையன்று. பற்று விட்டவர்கள் பற்றுக்கோடு கொள்ளாத பொருளை தூக்கி எறிவது போன்று எறிந்து விளையாடும் அம்மானை விளையாட்டு என்று கூறும் அம்மாலை விளையாட்டாகும். அந்த விளையாட்டு ஆதார மேல்மூலத்திற்கும் கீழ்மூலத்திற்கும் கட்டுப்பட்ட வாசி மலரை வீசி விளையாடும் செயற்பாடாம் ஆதாரமூலவாசி மேலும் கீழும் பிரணவாகாரமாக வளைந்து வருதை குறிக்கும். அதையே பற்றுவிட்டம்மனை பாழ்பட நோக்கினாற் என்று கூறுகின்றார். இதில் நாடிதாரணை வாசி தாரணை செயற்பாடும் அச்செயற் பாட்டு உருவமும் மலர்மாலையைக் குறிப்பனவாக உள்ளது. இந்த மலர்மாலை காண்பானுக்கு காட்சியேயொழிய மற்றயோர்க்கு காண முடியாது. ஆகையால் கட்டுவிட்டார்க் கன்றி காணவொண்ணாது என்றும் அப்படிக் கட்டினால் தான் வாசிமலராகுமே தவிர இல்லையேல் நாள் மலர் ஆகிவிடும் என்றும் அரும்பித்து எழும்புகின்ற வாசி தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்ற படியால் மொட்டித்தெழுந்தோர் மொட்டுண்டு என்றும். அம்மாலையை மேலும் கீழும் சுழன்று வரும்படியாக செய்தலை பற்றுவிட்டம்மனை பாழ்பட நோக்குதல் என்றும் இதன் கிரியையாகவே அம்மானை விளையாடல் அமைந்திருக்கின்றதென்றும் திருமூலர் அலங்கரித்து வாசி தாரணை நாடி தாரணையை காட்டுவதே தோன்றப் பெறுத சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரையாம்.

உரைக் குறிப்பு :-

பற்றுதல் இன்றி மலர் வளையத்தை வீசுதலும் பற்றினால் அன்றி பயன் இல்லையென்று பற்றி மீண்டும் வீசி பற்றச் செய்தலும் இவ்வாறே நிகழ்வது அமிர்த தாரணை குறிப்பைக் காட்டும் செயலாம்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

நீரின்றிப் பாயும் நிலத்தினிற் பச்சையாம்
யாவரும் என்றும் அறியவல் லாரில்லை
கூரு மழைபொழி யாதுபொழி புனல்
தேரினிந் நீர்மை திடரினில் லாதே. ருயரு (55)

நல்லநீர்ப் பாய்ச்சல் உள்ள நிலம் போன்று பசுமை படர்ந்திருக்கின்றது. ஆனால் நீர்பாய்ச்சல் கிடையாது. நீர்பாய்ச்சல் இல்லாத நிலம் எப்படி பசுமை படர்ந்து செழித்திருக்கின்றதென்று ஒருவராலும் அறிந்து கொள்ளவும் முடியவில்லை. மேகம் மழை பொழியவில்லை. மழை நன்கு பொழிந்தது போன்று நிலைப்படுத்தி எண்ணத் தோன்றுகின்றது. மேடாகிய திடலில் மழை பெய்தால் எப்படியோ அப்படி ஈரம் இருக்கின்றது. நீர் இல்லை, என்று காணாததை காட்டவல்ல சித்தர் பெருந்தகை கூறுகின்றார். இதில் காண முடியாத காட்சியை தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

இதில் ஞானசாதன செயற்பாட்டில் அமிர்த தாரணையென்பது அமிர்தம் என்ற ஒரு ஊற்றுப் பொருள் சொட்டிக் கொண்டிருப்பதாகவோ கசிந்து ஊற்று எடுப்பதாகவோ. தாரை கொண்டு ஓடி வருவதாகவோ உலக மக்கள் நினைப்பதை மறுத்து அமிர்த தாரணை விளக்கத்தை இதில் காட்டுகின்றார். அமிர்த தாராபதியான சந்திரன் அதனுடைய குளிர்ந்த நிலவொளியால் நிலத்தை குளிர்விக்கின்றான். நிலவொளியில் இருந்து குளிர்காற்று வீச அக்காற்றினால் நிலம் குளிரும் படியாக பனித்துளிகள் நிலத்தில் தோன்றுவது போல அமிர்த தாரணை பலிதமாகும் காலத்தில் சந்திரமண்டலமாகிய சிரத்தின்னின்று தன் நிழல் பொருந்திப் பாயும் அமிர்த கதியால் தேக வெப்பம் தீர்ந்து செழுமையடையும். அதையே நீரின்றிப் பாயும் நிலத்தினிற் பச்சையாம் என்று கூறுகின்றார். மேலும் இவ்வாறான செழுந் தண்நிழல் ஒளி தமக்குள்ளே அமைந்திருக்கின்றதென்பதை அறிய வல்லவர்கள் யாரும் இல்லை என்று அமிர்த தாரணை செயற்பாட்டின் அருமையையும் விளக்குகின்றார். அதுவே யாவரும் என்றும் அறியவல்லாரில்லை என்பது மேலும் மேகம் இல்லாமல் பொழியும் மழை போலவும் மழை பெய்த ஒரு திட்டு ஈரப்பதம் உள்ளது போலவும், அதில் நீர்நிலைப்பாடு கொள்ளாதது

போலவும் ஈரப்பதம் இருக்கும் என்பதை கூரு மழை பொழியாது பொழிபுனல் தேரினிந் நீர்மை திடரினில்லாதே என்று கூறுகின்றார். இதில் அமிர்த தாரணை என்றால் மக்களினம் நினைக்கும் தவறான எண்ணத்தைக் கண்டித்து அமிர்த தாரணை என்பது உயிர்க்கலை காற்றே தவிர பொழி புனலோ, வழி புனலோ, இழி புனலோ இல்லையென்பதை திட்டமாய் மறுத்துக் கூறுகின்றார். இதையே கிரியா மார்க்கத்தில் ஐந்து விரலை விரித்து உள்ளங்கையில் தேங்கும் புனலை ஆசமனம் பண்ணுவதாகும். நீரை கையால் முகந்து ஐந்து விரலையும் விரித்து விட்டால் தங்கிக் காணப்பெறும் உள்ளங்கை புனற் கரமே அமிர்த தாரணை கிரியை யென்று காட்டும் பொழுது பொழிபுனல் இழிபுனல் வழிபுனல் இவையாவும் இல்லாத நீரைப் பருகுவதேயே அமிர்ததாரணை கிரியை காட்டுவதைக் கொண்டு அறியலாம். இதுவே புறத் தோற்றத்தில் காணக் கிடைக்காத சூனியமாம் வெறும் பாழில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை என்றறிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

கூகை குருந்தம தேறிக் குணம்பயில்
மோகம் உலகக் குணர்கின்ற காலத்து
நாகமும் ஒன்று நடுவுரை செய்திடும்
பாகனு மாகின்ற பண்பனு மாமே. ருயகா (56)

இருள் நீங்கிய பகற்பொழுதை இரவாக கழித்துக் கண் துயிலும் பறவையாகிய கூகை குருந்தில் ஏறிற்றாம். ஏறியது குற்றத்தை நீக்கி நற்குணங்களை பயின்றதாம். உலகிற்கு மோகம் என்கின்ற இராகத்தை உணர்கின்ற போது நாகம் ஒன்று மெய் மொழி புகலுகின்றதாம். குதிரைப் பாகனாக ஒருவன் அமைவு பெறுகின்றானும் என்று தொடர்வின்றித் தனித்து நிற்கும். சொற்கூட்டங்களை அடுக்குகின்றார்; ஆன்ம ஞான தொடர்வு எற்படச் செய்யும் சொற் பெரும் கொண்டலாம் திருமூலத் தேவர். இதில் கூகை பறவை குருந்த மரத்தேறி குணம்பயில்வதும் மோகம் உலகுக்கு உணரவரும் காலம். ஒரு நாகம் மெய்மொழி வழங்குகின்றதாம். யாரோ ஒருவன் குதிரைப் பாகன் ஆகின்றானும் என்பது தொடர்பற்ற வினைச் சொற் கூட்டம். இதிற் காணும் தொடர்பற்ற நிலையே சூனியமாக இருக்கின்றது. அச்சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

இந்நூலில் இதுவரை வந்த பெரும்பாலான செய்யுள் விளக்கங்களில் குருமுகமாக தெரிந்து கொள்வதை வலியுருத்தி கூறப் பெற்றுள்ளது. குருமுகமாக தெரிந்து கொள்வது எவ்வாறு என்ற

விளக்கத்தை இந்த திருமந்திரம் விளக்குகின்றது. கடவுள் தன்மைக்கு பொருந்தா நெறியுள்ள ஒருவன் குருவினுடைய தன்மையை கண்டு தேறி மாசற்றவன் ஆகின்றான் என்பதே கூகை குரு அந்தமது தேறி குணம் பயில் என்று சொல்லுகின்றார். கூகை போன்ற மாறுபட்ட அறிவுடைய ஒருவன் குருவினுடைய அந்தத்தைக் கண்டு தேறி குணம் பயில்வது என்பது பொருந்தாத அறிவுடைய ஒருவன் யார் ஒருவருடைய உருவத்தை கண்ட மாத்திரத்தில் உள்ளம் உருகி தன்வயம் இழந்து கவரப்படுகின்றானோ அவரே குருவாகும் என்பதை கூகை குரு அந்தமது தேறி குணம் பயிலல் என்ற சொற்றொடர் காட்டுகின்றது. அவ்வாறான மனநெகிழ்ச்சி ஏற்படுவதற்கான காரணத்தையும் கூறுகின்றார். காமம் மோகம் என்னும் இரண்டும் பெண்ணிச்சையின் பாற்பட்டது. அதில் காமம் என்பது தன்னால் அடக்கி ஆளப்பெறும் மன எழுச்சி. மோகம் என்பது தன்னையொத்த மற்றொரு ஆன்மா தன்னுடைய ஜீவதாதுவில் தங்கி நின்று இச்சையை எழுப்புதலால் தோன்றப் பெறும் தன்வசப்படாத மன எழுச்சி. வேறு ஒரு ஆன்மா தம்மிடத்தில் தங்கியிருக்கின்ற படியாலும் அது தன்னை போன்றே ஆற்றல் உடைமையாலும் கட்டுப்படுத்த முடியாத விளைவைத் தரும் காமத்திற்கு மோகம் என்று பெயர். அதே போன்று ஞானாசிரியனுடைய அருள்நோக்கம் எதிர்நிலை படிவம் கொள்ளும் காரணத்தால் ஞானாசிரியனைக் கண்ட மாத்திரத்திலேயே உள்ளம் உருகி நெகிழும் செயற்பாடு காணப் பெறுகின்றது. அவ்வாறான செயற்பாட்டுக் காரணம் முதல்வராக விளங்குபவரே குரு என்பதாக நமக்கு மூலகுரு எடுத்துக் காட்டுகின்றார். அதுவே மோகம் உலகுக்கு உணர்கின்ற காலத்து என்ற சொற்றொடர் குறிப்பு. அதுவே நாகமும் ஒன்று நடுவுரை செய்திடும் என்பது நாகம் இடம் வலம் என்று இரண்டும் இல்லாத நடுநிலைப்பாட்டு உருவம் கொண்ட ஒரு பிராணி. அது உரைத்தல் என்பது நாகமானது தனக்கு உணவாக கொள்ளப் பெறும் பொருட்களின் மீது ஒலி எழுப்பும் காற்றை ஊதப் பெறுவதாகும். அதையே ஔவைப் பாட்டியார் மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின் நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்தி என்றும். மேலும் சிவவாக்கியர் மூன்று மண்டலத்தினும் முட்டி நின்ற தூணினும் நான்ற பாம்பின் வாயிலும் நவின்றெழுந்த அட்சரம் என்று கூறுகின்றார். இதுவே குருமுகமாக கேட்டு தெரிந்து கொள்ளக் கூடிய உபதசம். இதைத் தெரிந்து கொள்வதனால் பாகனுமாகின்ற பண்பனுமாமே என்று பயனையும் கூறுகின்றார். குதிரையைச் செலுத்துபவனுக்கு பாகன் என்று பெயர். குதிரைக்கு வாசி என்றும் ஒரு பெயர் உண்டு. வாசி நடையை முறைப்படி நடத்திவிக்கின்றபடியால் பாகனுமாகின்ற பண்பனு மாமே என்ற சொற்றொடர் விளக்குகின்றது. இது அருள் ஞான வள்ளல் ஆகிய மூலகுரு மெய்குருவினுடைய செயற்பாட்டு ஆற்றலை எடுத்துக் காட்டி விளக்கும் திருமந்திர உபதேசம்.

இதுவே தொடர்பற்ற சூனியமாக தோன்றிய சொற்றொடர் கூட்டத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரையென்றறிக.

குரு + அந்தம் = குருந்தம்

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

வாழையுஞ் சூரையும் வந்திடங் கொண்டன
வாழைக்குச் சூரை வலிது வலிதென்பர்
வாழையுஞ் சூரையும் வன்துண்டஞ் செய்திட்டு
வாழை யிடங்கொண்டு வாழ்கின்ற வாறே. ருயஎ (57)

வாழையைச் சூரை நெருங்கி வந்து இடமாகக் கொண்டது. வாழையைவிட சூரை வலிதினும் வலிதென்று கூறுவார்கள். அந்த வாழையையும் சூரையையும் வலிதிற் பிரித்து வேறுபடுத்தி வாழையினிடத்து சூரையை இணைத்து வேம்பையும் அரசையும் கல்யாணம் செய்வது போல் வாழையையும் சூரையையும் மணப்படுத்தி வாழவைத்தார்கள். இது எங்கும் காணக் கிடைக்காத ஒன்று வாழை முளைக்கின்ற தரையில் சூரை முளைக்காது. வாழை தோட்டத்துப்பயிர் சூரை காட்டுச் செடி எனவே வந்து இடம் கொள்ளுவதற்கு வாய்ப்பு இல்லை. ஆனல் வந்து இடங்கொண்ட தென்றும் வாழை மெல்லியலாள் போன்ற தென்றும் அதற்கு வல்லியாம் (வலிமை) போன்றது சூரை என்றும் மெல்லியயியலை யுடைய வாழையைக் காப்பாற்ற வல்லியமாகிய சூரை தேவை என்றும் சொல்லுவார்கள். அப்படிவன்மையும் மென்மையுமாகிய இரண்டும் ஒன்று படலால் வாழைத் தன்னியல் குன்றித் தவிக்கின்றது. அதைக் கண்டு வாழையையுஞ் சூரையையும் வேறுபடுத்தி மென்மைக்கு வன்மை வேண்டியது தான் என்ற கொள்கையால் வாழையையும் சூரையையும் கல்யாணம் செய்து வைத்துப் பார்த்தார்கள்.

இவ்வாறு நம்முலகத்தில் காண முடியாது என்பது மறுக்க முடியாத ஒன்று. இவ்வாறு பொருந்தி வாழ்கின்ற உலகம் ஒன்று உண்டு என்பதை திருமூலர் காட்டுகின்றார். அதன் விளக்கம் வருமாறு.

வாழை யென்பது சந்திர கலையினுடைய செயற்பாட்டுக் குறிப்பைக் காட்டுகின்றது. சூரையென்பது சூரிய கலையினுடைய செயற்பாட்டைக் குறிக்கின்றது. சூரியனும் சந்திரனும் ஒன்று கூடும் இயல்புடையது. அதனாற்றான் வாழையுஞ் சூரையும் வந்திடங் கொண்டன என்கின்றார். சந்திரன் எவ்வளவு வெப்பத்தைத் தணிக்கும் ஆற்றல் உடையதோ அவ்வாறு வெப்பத்தைத் தரும் ஆற்றல் உடையது சூரியன். சூர் என்பது

சூரியன் பெயர். அந்த இயல்புடையதால் சூரை என்று பெயர் வந்தது. வாழைக்கு தெய்வ மாதாகிய அரம்பை என்றே ஒரு பெயர். ஆகவே (வாழையே கதலியாகும் மற்றும் அரம்பையாகும். சூடாமணி) மணப்படுத்துவது முறைதான். ஆனால் சூரியனைச் சந்திரன் சந்தித்துக் கொண்டே யிருக்கின்றது. அச்சந்திப்பினால் சந்திரன் சூரியனோடு ஒன்றி நிலை கொள்ளாமல் ஓடி விடுகின்றது. ஆயினும் சூரியனின்றி சந்திரன் வாழ முடியவில்லை. ஆகையால் சூரியனோடு சந்திரன் ஒன்றி நிற்பதால் தன்னியல்பு குன்றிவிடாமல் சாதகன் ஒரு நிலையில் பிரித்து விடுகின்றான். அந்நிலையில் சூரியனுடைய வெப்பமும் தணிவுறுகின்றது. சந்திரனுடைய தட்பமும் மிகுதிப்படாமல் அமுதகதியாக நிற்கின்றது. அதைத் தான் வாழையுஞ் சூரையும் வன்துண்டஞ் செய்திட்டு என்று கூறுகிறார்.

சிவானந்த பெருவாழ்வு வேண்டுமென்றால் வாழையையும் சூரையையும் திருமணம் கொள்ளச் செய்தலாம் சாதன விளைவு பலிதமாகல் வேண்டும். அதைத் தான் வாழையிடங் கொண்டு வாழ்கின்றவாறே

இதில் சந்திரன் என்னும் வாழைக்கு சித்தர் பரிபாயச் சொல்லின் வாய்ப்பாட்டில் சாகாதகால் என்று பெயர். கால் என்பது சந்ததிக்குப் பெயர். வாழை முதிர்ந்து அழியுங்கால் அதற்கு வாரிசாகப் பிறகண்டு வருகின்றது. அதனாலேயே வாழைக்கு சாகாத கால் என்று பெயர்க் காரணம் காட்டப் பெறுகின்றது. அது நம் உடம்பில் சந்திரகலை வாழையினுள்ளாய தலைப்புக்கு வேகாத தலை என்று பெயர். வாழைத் தாரானது கவிழ்ந்து தொங்கும் அதில் தீ வைத்தது போன்று மேல் நோக்கி செந் தீ நிறமாக பழத்தினுடைய அடுக்கு வரிசைகள் காணும் ஆனால் அது வேகின்ற இந்தத் தீயல்ல என்பதால் வேகாதலை என்று வைத்துள்ளார்கள். போகாப்புனல் என்னும் வற்றாத நீர்ப்பாங்கை தனது அகங் கொண்ட உருவம் உடையது வாழையாகையால் அதற்கு போகாப்புனல் என்றும் ஒரு பெயர். மேலும் நெருப்பை ஆற்றும் ஒரு சிறந்த நடுப்பொருளாக வாழைப்பட்டைச் சாறு இருப்பதால் அதற்கு நெருப்பாறு (நெருப்பை ஆற்றக் கூடியது) என்று ஒரு பெயர். மேலும் வாழைத் தண்டை துண்டு படுத்தினால் பால் போன்ற வெண்ணிறம் உள்ள மயிரிழைக் கூட்டம் தென்படும். ஆகையால் அதுபற்றி (மயிர் பால்அம்) மயிற்பாலம் என்றும் அதற்கு ஒரு பெயர். இத்தகவுடையது வாழை.

வெண் சாரை, கரு நெல்லி என்ற பெயர் விளைவு சூரியனுக்கு உண்டு. சாரை வெண் சாரை என்று சொல்லப்படுகின்றது. சாரை நீரிலே கிடந்து வெளிறிப் போயிருக்கின்றது. அதற்கு விடமே இல்லை. அதனால் தன்னியல் தெரிந்து மற்ற விஷபாம்புகள் போல் கடிக்கும் முயற்சியில் ஈடுபடாமல் காலைச் சுற்றிக் கொள்கிறது. அது போன்ற தன்மை சூரைக்கு

இருப்பதால் அதற்கு வெண்சாரை என்று ஒரு பெயர். முற்கூறியபடி சந்திராகலா அமிர்தமும் மட்டின்றிப்பாய சூரியகலா வெப்பமும்ஒன்றுபடும் செயல் யோக சாதனத்தில் அமித தாரணையைப் பெருகின்றது. மேலும் அமுரிதாரணை என்றும் பெயர் காரணம் முரிவின்றி வாசி செல்லுகின்றபடியால் அமுரி என்று பெயர் அமுத தாரணையை அமுரிதாரணை என்றும் சொல்லுவதுண்டு. இந்த அமுரி தாரணை கொண்டால் காயம் சித்தியாகும். காயசித்தி என்பது வயோதிகத்தன்மை தோன்றுமல் இளமைக் கோலத்தைத் தரும் செயற்பாட்டைக் குறிக்கும். அச்செயற்பாட்டில் நரைதிரைக்கு இடம் இல்லையாகையால் சந்திரகலை அமுதத்தைத் தரும் சூரியகலைக்கு கருநெல்லி என்றும் ஒரு பெயர். இந்தத் திருமந்திரத்தில் சூரியர் சந்திரர்களுடைய சிறப்பியல்புகளையும் அதற்கு பெரியோர்கள் தந்த பெயர்க் காரணத்தையும் காட்டி விளக்கப் பெற்றது. இது திருமூலர் எதையோ காட்டுகின்றார். அப்படி ஒன்றும் இல்லையே எனக் கருதும் சூனியத்தில் தேடிக் கண்ட சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

நிலத்தைப் பிளந்து நெடுங்கடல் ஓட்டிப்
புனத்துக் குறவன் புணர்ந்த கொழுமீன்
விலக்குமின் யாவர்க்கும் வேண்டிற் குறையா
தருத்தமு மின்றி யடுவது மாமே. ௫௰௮ (58)

நிலத்தைபிளந்து அதில் கடலோடச் செய்கின்றான். அதில் சேர்ந்தது இரண்டு செழுமை மிக்க மீன்கள் அது நல்ல கொழுமையாகிய மீனாக இருக்கின்றதென்று விலைக்கு வாங்க வேண்டாம். விலைக்கு வாங்காமல் அதை விலக்கி விடுங்கள். மீன் வேண்டும் என்றால் இந்த இரண்டுமே யல்ல குறையாமல் கிடைக்க வாய்ப்புண்டு. செலவும் இல்லை. நன்றாக சமைத்துண்ணலாம் என்று ஆகமமந்திரம் கூறும் மூலகுரு கூறுகின்றார். இது எவ்வாற்றானும் நிகழும் நிகழ்ச்சியாக இல்லை. நிலத்தை பிளந்து கடலோடச் செய்வதும் ஓட்டுவதும் எளிமையான காரியம் அல்ல. அப்படியும் நிகழ்ந்திருக்கின்றது. வனவேடன் பறவைகள் விங்கினங்கள் இவைகளைப் பிடிப்பானே தவிர மீன்பிடிக்க மாட்டான். அப்படி பிடித்தாலும் இணைபிரியாத வனப்புள்ள இரண்டு மீன்களை. அதை கொல்ல வேண்டாம். உங்களுக்கு வேண்டில் அந்த இரண்டு மீன் அல்ல குறையாமல் கிடைக்கக்கூடிய வாய்ப்புண்டு. செலவும் இல்லை. நன்றாக சமைக்கவும் செய்யலாம் என்று கூறுவது காணக் கிடைக்காத நிகழ்ச்சி. இவ்வாறாகிய நிகழ்ச்சியாம் சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

கடலோடுகின்ற பிளவுள்ள நிலம் இடகலை பின்கலை நாடியாகும். இடகலை பின்கலை நாடியே பிளக்கப் பெற்ற நிலமாம். அதில் ஓடுகின்ற கடல் மூலாதாரமாகிய சமுத்திரத்தில் ஊன்றி கால் கொண்டோட நிற்கும் வாசி அடுக்கடுக்காகி அலைமோதி மீளுகின்ற சமுத்திரத்தையும் அதன் அலையையும் சென்று சென்று மீளும் வாசிக்கு ஒப்பிட்டு நிலத்தைப் பிளந்து நெடுங்கடலோட்டி என்று கூறுகின்றார். அந்த வாசியானது வனத்துக் குறவன் என்னும் வனவேடனும் மனத்தால் பெரிதும் அலைமோதப் பெறுகிறது. மனமாகிய வனவேடனாய் கொண்டு வரப்பட்ட புணர்மீன் சூரியகலை சந்திர கலையென்னும் பிராணன் அபாணன் என்னும் உயிர்க்கலைப் புணர்ச்சி அதையே புனத்துக் குறவன் புணர்ந்த கொழுமீன் என்று சொல்லுகின்றார். வாசியைச் சார்ந்து மனமும் பிராணன் அபாணன் ஆகிய உயிர் கூறும் தொடர்பு கொண்டு பிரியாமல் நிற்பதால் நிலத்தைப் பிளந்து ஓட்டிய நெடுங்கடல் என்றும் வனவேடன் என்றும் புணர்மீன் என்றும் முறையே வாசியையும் மனத்தையும் உயிர்க்கூறையும் கூறுகின்றார். அதில் மீன் என்று உயிர்க் கூறைக் கூறுவது தொடர்புற்று நிற்பதும் கரையேற முடியாததும் ஆகிய கூயிர்கூறின் விளைவைக் காட்டுகிறது. அவ்வுயிர்க்கூறு இரண்டாக உள்ளமையால் புணர்ந்த கொழுமீன் என்று கூறுகின்றார். மேலும் இதை விலக்கிவிடுங்கள் என்றும் மீன் வேண்டில் குறையாமல் கிடைக்க வாய்ப்புண்டு என்றும் செலவு ஒன்றும் இல்லையென்றும் சமைத்து பாகம் செய்ய ஆகும் என்றும் கூறுவதில் இடம் வலம் ஓடி நிற்கும் சுவாசம் ஆகிய மீன் கரையேறாமல் பிடிபடாமல் போய்க் கொண்டும் வந்து கொண்டும் இருக்குமேயொழிய பயன்தராது என்பது குருமுக பயிற்சி பெறாத நிலையில் வாசி வசப்படாமையை காட்டுவதாகும். வாசியானது வசப்படாமையை காட்டுவதாகும். வாசியானது வசப்படுங்கால் அது மூலாதாரத்தின் அமைவு பெறும் மூலம் அக்கினி மண்டலம் அவ்வக்னி சுவாலை கொள்ளும் அடுப்பு குண்டலி சத்தியாகும். அதில் வாசியாகிய நீரில் சஞ்சாரம் செய்யும் பிராண அபாணனும் மீன்கள் குறையாமல் வந்து சார்ந்து கூடிக் கொண்டேயிருக்கும் என்பது வாசியானது பனிரெண்டும் எட்டுமாக முறிவு பெறாமல் அமுரியாய் வந்து மீளா நிலைகொண்டு மேலும் மேலும் சார்புற்று அமைதலை அருத்தமுமின்றி யடுவது மாமே என்று செலவில்லாமல் வரவாவதை காட்டுகின்றார். அதுவே அமுரியாகி அமித தாரணை கொண்டு வாசி வசப்பட்டு நிற்கும் விளைவு இவ்விளைவால் நாசித்துளையையும் அதில் வாசி சஞ்சாரத்தையும் நிலத்தைப் பிளந்து நெடுங்கடலோட்டு என்று கூறப் பெறுகிறது. வனவேடன் என்று மனத்தைச் சுட்டிக் கட்டப் பெறுகிறது. இரண்டு கொழு மீன்கள் என்பது யடுதற்கு இயலாமலும் கரையேற முடியாமலும் சார்ந்து நிற்கும் பிராணன் அபாணனை காட்டுகின்றது. அமுரியாம் அமிர்ததாரணையாக மூலத்தில் வாசி

சார்வதை செலவின்றி வரவாக மீன் அடுவதாகக் கூறுகின்ருர். இதை ஆழ்ந்து நோக்குக. இதுவே ஆகம மந்திரம் கூறும் மூலுகுரு நமக்கு வாசிநிலையை சூட்டி காட்டிய சூனிய சம்பாதனை உரையாம்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

தளிர்க்கும் ஒருபிள்ளை தட்டா னகத்தில்
விளிப்பதோர் சங்குண்டு வெந்தழல் நாடிக்
களிக்குங் குசவர்க்குங் காவிதி யர்க்கும்
அளிக்கும் பதத்ததொன் ருய்ந்துகொள் வார்க்கே ருயலை (59)

ஒரு தென்னம்பிள்ளை யொன்று தளிர்த்து ஓங்கி வளர்ந்திருக்கின்றது. அதனிடத்து தட்டான் ஒருவன் இருக்கின்ருன். அவனிடத்து கூவலோசையுள்ள சங்கு ஒன்று இருக்கின்றது. சூளையில் யிட்டு சுடும் தொழில உள்ள குயவனுக்கும் கணக்கர்வழித் தோன்றலுக்கும் அளிக்கக் கூடிய ஒரு சொல் இருக்கின்றது. அது ஆராய்ந்து பார்ப்பவர்களுக்கு மட்டும் பலனளிக்கும் என்று சொல்லுவதில் தட்டாணுகிய பொற்கொல்லன் தென்னை மரத்தடியில் இருந்து தொழில் செய்ய மாட்டான். தட்டானுடைய தொழிலுக்கு உமியவோடும் ஊது குழாயும் தேவையே யன்றி சங்கு தேவைப்படாது. மட்பாண்டத்தை சூளையிட்டு சுடும் தொழிலையுடைய குயவனுக்கும் தட்டானுக்கும் ஒருவருக்கொருவர் உறவு கொள்ள வேண்டிய கட்டாயமும் இல்லை. இந்த இருவரோடும் காவிதியர் என்னும் கணக்கர் வழித் தோன்றல் உறவு கொள்ள சந்தர்ப்பமும் இல்லை. சந்தர்ப்பத்தை ஏற்படுத்துவதற்குரிய ஒரு சொல் உண்டு. வெளிப்படையாகத் தெரியாது ஆராய்ந்து பார்த்தாலன்றி என்று சொல்லுவதில் தொடர்வு அறுநிலையே காணப்படுகிது. தொடர்பறு நிலை சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

மக்கட் சரீரத்தை தென்னை மரத்திற்கு ஒப்பிடுகின்ருர். இருள் மூலத்திற் கால் கொண்டு எழும்பி ஒளி மண்டலம் அளாவ நிற்பது மூலாதாரத்திற் ருேன்றி அண்டவெளி நிலையத்திற் றளைப்பட்டு நிற்கும் செயற்பாட்டையுடைய உயிர்க்கலை தோற்றத்தையும் அவ்வுயிர்க் கலையின் அடிப்பாகம் தென்திசை பதியாகிய கீழ்மூலமாகவும் அதனின்று மேற்சென்று எழும்பி நிற்கும் இடம் உயிர்கலைக்கு வடதிசையாகவும் இருக்கின்றபடியாலும் அதுக் காய்கும் கிளை முடியாகவும் முக்கண் பொருந்திய சிரத்தினைப் போன்றும் இருக்கின்ற படியால் அதை தளிர்க்கும் ஒரு பிள்ளை என்று சொல்லுகின்ருர். தளிர்க்கும் ஒரு பிள்ளை என்பதில் தென்னைமரம் தோப்பாக இருக்குமேயொழிய ஒரு பிள்ளையை

மட்டும் வைத்து பலன் கருத மாட்டார்கள் என்பதை உணரும் பொழுது ஈண்டு கூறிய தளிர்க்கும் ஒரு பிள்ளை என்பது விளக்கமாகிறது. தட்டானகத்தில் என்பது அவ்வுயிர்கலையின் இடமாக காணப்பெறும் கண்ணைக் குறிக்கின்றது. கண்ணானது கீழ்இமையை மேல் இமை தட்டிக் கொண்டேயிருப்பதால் தட்டான் என்று கூறுகின்றார். அதுவே தளிர்க்கும் ஒரு பிள்ளை தட்டானகத்தில் என்பது. கட்புலன் இரண்டு வெளிநோக்காக இருக்க உள்நோக்காகக் காணப் பெறும் கண் என்னும் பிரமரரந்திரம் திறக்கப் பெற்று அதில் வாசியின் நடை ஓட்டத்தைச் செலுத்தும் போது சங்கத்துழநி கேட்கப் பெறுகின்ற படியால் விளிப்பதோர் சங்குண்டு என்று சொல்லுகின்றார். அக்கினி மண்டலமாகிய கீழ் மூலாதார சார்பு கொண்டு ஆமாசயமானது வாயை வாய்ப்பக் கொண்டு நின்று தொழில் படுவதால் வெந்தழல் நாடிக் களிக்குங் குசவர் என்று பொறிவாயில்களில் ஒன்றாகிய வாயைக் குறிப்பிடுகின்றார். அதுவே வெந்தழல் நாடிக் களிக்குங் குசவர்க்குங் என்பது. இதற்கு மேல் உள்ளதும் தட்டானாகிய கண்ணிற்கு கீழ் உள்ளதும் ஆதி நடுநிலை கொண்ட வாசி வழங்கும் மூக்கினை காவிதியர் என்று கூறுகின்றார். காவிதியர் என்றால் கணக்கர் வழியினர் என்று பொருள். ஒரு நாள் ஒன்றிற்கு 21.600 (உயகசஈ௱) சுவாசம் என்றும் ஒரு நாழிகை அளவில் ஓடும் சுவாசம் 360 (௩௱௬௰) என்றும் ஒரு கலைப் பகுப்பாகிய ஐந்து நாழிகையில் ஓடும் சுவாசம் 1800 (சஅ௱) என்றும் நிலை பிறழாத கணக்கை மேற் கொண்டிருப்பதால் அதைக் கணக்கர் வழியினர் வழியாகிய காவிதியர் என்றும் கூறுகின்றார். இப்பொழுது மெய்யை தென்னம்பிள்ளை என்றும் வாயை குசவர் என்றும் கண்ணை தட்டான் என்றும் மூக்கை கணக்கர் என்றும் கூறியுள்ளதைப் பார்த்தோம். இவர்களுக்கு நற்பதம் கிடைக்கச் செய்வது எழுதாதக் கேள்வியை கேட்கும் செவிப்புலனே யாகையால அதை அளிக்கும் பதத்து அது ஒன்று அதை ஆராய்ந்து பார்த்தால் தான் தெரியவரும் என்பதை பதத்தது ஒன்று ஆய்ந்து கொள்வார்க்கே என்று கூறுகின்றார். இதுவே தொடர்பறு பாழாய் விளங்கிய சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை என்றறிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

குடைவிட்டுப் போந்தது கோயிலெருமை
படைகண்டு மீண்டது பாதி வழியில்
உடையவன் மந்திரி யுள்ளலும் ஊரார்
அடையார் நெடுங்கடை ஐந்தொடு நான்கே. சூ (60)

கோயில் எருமைக் கடாவை வண்டியில் பூட்டினார்கள். அதோ எருமைக்கடா. அதுவும் கோயிலைச் சார்ந்த கடா. தன்னிச்சையாய்த் திரியும் இயல்புடையது. அது வண்டியை குடை கொள்ளும் படியாகச் சாய்த்து விட்டு ஓடிற்று. ஆனால் அது ஓடிக் கொண்டேயிருக்கவில்லை. எதிரில் போர் என்னும் படைப்பு ஆம் வைக்கோற்போர் குறுக்கிட்டது. அதோ படைப்பு அதைக் கடக்கவும் முடியாது தின்னவும் கொள்ளாது. இந்த திகட்டலால் வந்த வழியே மீண்டது. கோவிலும் நாடும் மக்களும் மன்னனும் உள்ள அத்தேயத்தில் மன்னன் மந்திரியோடு கலந்து ஆலோசனை செய்கின்றான். ஆலோசனை செய்வதென்பது மந்திரிக்கழகு வரும்பொருள் உரைப்பது என்றபடி வரும்முன் யோசித்துரைக்க வேண்டும். வந்தபின் யோசிக்கக் கூடாது. ஆனால் இம்மன்னனோ வந்தபின் யோசிக்கின்றான். அரசன் தான் அப்படி என்றால் குடிகள் தலைவாசல் கடைவாசல் ஜன்னல் சாளரம் எல்லாவற்றையும் திறந்துவிட்டு அச்சம் இன்றி இருக்கிறார்கள் என்பது எங்கும் காணக் கிடைக்காத ஒன்று ஆனால் அப்படித்தான் தோன்றும் தேட்டாளனாக இருந்தால் தேடிப்பார் என்று திருமூலர் சொல்லுகின்றார். அவ்வாறு தேடிப் பார்க்கும் சூனிய சம்பாதனை வருமாறு.

எருமை கட்டுமுறித்துக் கொண்டு போனால் மூக்குப் போன செவைக்குப் போகின்றதென்று சொல்வதுண்டு. அவ்வாறு மூக்கில் போகும் செவ்வையுடையது (சுவாசம்) உயிர்ப்பு அவ்வுயிர்ப்பு இருக்கும் இடம் கோ+இல் எனக் கூடிய புனிதமான இடம். அதனால் சுவாசத்தைக் கோயில் எருமை என்று சொல்லுகின்றார். மேலும்வாயுவின் நிறம் கறுமை உடையது. அது தன் போக்காகப் போக முடியாது. ஒரு அளவு சென்றவுடன் மீண்டு ஆக வேண்டும். அதை படை கண்டு மீண்டது பாதி வழியில் என்று கூறுகின்றார். படைத்தல் என்பது ஆக்கிக் குவித்தல்.அவ்வாறு ஆக்கிக் குவித்தல் என்ற இடம் தன் இனமாயும், தன்செயற்பாட்டை உடையதாகியும் வெளியில் உலவும் உலவை இருந்தாலும் அதைக் கடந்து இது போக முடியாது. சுவாசம் முட்டித் திரும்புகின்ற இடமும் காற்றுத் தான் ஆகவே, தன் வினைவால் ஆனதும் தனக்குத் தடையாய் உள்ளதும் ஆன தன்மை உடையதாக இருக்கின்ற காரணத்தால் படைகண்டு மீண்டது என்கின்றார்.

மன்னவனாகிய உயிரும் மந்திரியாகிய மனமும் ஒன்று கூடுகின்றது. ஒன்று கூடுகின்ற காலம் வாசியானது எருமையாகி (முன்னர் குதிரை) சண்டித்தனம் செய்கின்ற காலமாக இருக்கின்றது. அவ்வூரில் உள்ள குடிகள் என்னும் தத்துவக் கூட்டங்கள் அவர்கள் இல்லமாகி தேகத்தில் வாயில்கள் (எல்லாவற்றையும்) ஒன்பதனையும் மூடாமலே வைத்திருக்கின்றார்கள். இவ்வாறு இருந்தால் என்னவது என்று நம்மை எச்சரிக்கின்றார் திருமூலர் கோயிலில் பசு தான் இருக்க வேண்டும். பசுவிற்கு ‘ஆ’ என்று ஒரு பெயர் எருமைக்கு கடா என்று பெயர். பசுவிற்கு எதிர்மறைத் தன்மைவாய்ந்த எருமை கோயில் பசுவாகி வளம் தர வேண்டும். மன்னனிடத்தில் ஒரு தீங்கு நேர்ந்தால் விரைந்து செல்ல குதிரை வேண்டும். குடிகள் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள தீங்கு வருங்காலத்து வாயில்களை அடைத்துக் கொள்ள வேண்டும் என்று கூறும் அறிவுரையாகும்.

மன்னன் - உயிர்; மந்திரி - மனம்; குடிகள் - தத்துவக் கூட்டங்கள். வாயில்கள் - பொறிபுலன்கள் வெளிச் செல்லும் நாளங்கள் இவ்வாறு செப்பம் செய்வதே சிவயோகம். இவ்வாறு செய்யவில்லையென்றால் நாடும் அரசும் குடியும் இழிநிலை எய்த நேரிடும். எனும் எச்சரிக்கைக் குறிப்பே இதிற் காணப்பட்டுள்ள சூனியத்தில் தேடிக் கண்ட சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

**போகின்ற எட்டும் புகுகின்ற பத்தெட்டும்**
**ஆகிப் படைத்தன ஒன்பது வாய்தலும்**
**நாகமும் எட்டொடு நாலு புரவியும்**
**பாகன் விடாவிடிற் பன்றியு மாமே.** சூலக (61)

போவது எட்டு புகுவது பதினெட்டு இப்படி போவதும் புகுவதுமாய வாயில்கள் ஒன்பது. இது அல்லாமல் யானைகளும் பன்னிரண்டு குதிரைகளும் வேறு இருக்கின்றன. முற்கூறிய போவதும் புகுவதும் தன்னிச்சை கொண்டுள்ளன. யானைகளும் குதிரைகளும் பாகனால் செலுத்தப்பட வேண்டும். முறையே பாகன் தான் செலுத்துகின்றான் அப்படி அவன் செலுத்தாதுவிடில் யானைகளும் குதிரைகளும் பன்றியாய் போய்விடும். யானையும் குதிரையும் பன்றியாகுமா. இது நடைபெறக் காண முடியாத ஒன்று இவவாறாகிய சூனியத்திற்கு நடைபேறு கொள்ளக் காணக் கிடைக்கும் சம்பாதனை உரை வருமாறு.

போகின்ற எட்டு எனக் குறிக்கப் பெறுவது வசனம். கவனம். தானம். ஆனந்தம். விசர்க்கம். தாரஏடணை புத்திரஏடணை. தனஏடணை ஆக எட்டு புகுகின்ற பத்தெட்டு ஓசை பரிசம், உருவம், சுவை, நாற்றம், அன்னமயம்

பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்த மயம் மேலும் காமம். குரோதம். மோகம். லோபம் மதம் மாச்சரியம் இடும்பை வெட்கம் ஆகியனவாகிய எட்டும் கூடிய பதினெட்டு. இந்தப்பதினெட்டும் எட்டும் சஞ்சாரம் பண்ணுகின்ற வாயில்கள் ஒன்பதாகப் படைக்கப் பெற்றிருக்கின்றன. இதோடு அல்லாமல் யானையும் குதிரையும் ஆகிய புலன் ஐந்தும் வாசி பன்னிரெண்டும் வேறு சஞ்சாரம் செய்கின்றன. அதில் வாசியாகிய குதிரையையும் வாசியின் நடையைப் பேதப்படுத்தும் யானையாகிய ஐம்புலன்களையும் நடத்திச் செல்ல ஒரு பாகன் இருக்கின்றான். அப்பாகனுடைய கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு அமையாமல் மேற்கூறிய பதினெட்டும் எட்டும் போன்று இதுவும் திரிய ஆரம்பித்தால் சேற்றில் அழுந்தும் பன்னியாக இது ஆகிவிடும். யானை வலிமையும் உருவ பரிமானமும் கொண்டுள்ளது. சேறு என்பது ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்கள் ஆகும். ஆகவே, மனோநிலைச் சலனத்தால் வாசியும் சலனம் எய்தும் இவ்விரண்டும் சலனம் எய்தினால் கதி மாறிவிடும். இதைக் காப்பது அவசியமாகிறது இச்சலனத்தால் பாகனாகிய ஆன்மாவிற்கு கட்டுப்படாமற் போய்விடும். அங்ஙனம் கட்டுபடாமற் போய்விட்டால் யானையும் குதிரையும் பன்றியாய் போய்விடும் என்று எச்சரிக்கின்றார் இதவே காணக் கிடைக்காத காட்சி எனக் கருதும் சூனியத்திற் றேடிக் கண்ட சூனிய சம்பாதனை உரை யாகும்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

பாசி படர்ந்து கிடந்த குளத்திடைக்
கூசி யிருக்குங் குருகிரை தேர்ந்துண்ணுந்
தூசி மறவன் துணைவழி எய்திடப்
பாசங் கிடந்து பதைக்கின்ற வாறே. சூமஉ (62)

நீரை மூடும் பாசம் நிரம்பிய ஒரு குளம் உண்டு. அதில் கொய்யடி நாரை ஒன்று இரை கொள்ள இறங்கிற்று. பாசம் நிரம்பி இருக்கின்ற படியால் கால் வைப்பதற்கு கூசி ஒரு காலை முடக்கிக் கொண்டு நிற்கின்றது. அப்படி நின்று இரைதேடி உண்ணும் நோக்கமாக தலை வளைய கவிழ்ந்த நோக்குடன் இருக்கின்றது. இந்நிலையில் வேடுவன் அவன் இனத்தவருடன் புடவை கொண்டவனாகி அக்குளத்தை அடைகின்றான். பாசி புடவையில் அகப்பட்டு கரையில் வீசி எறிதலில் பதைபதைத்து அழிகின்றது. புடவை தலைக்குமேல் விரிந்து காணப் பெறுகிறது. காயவும் பெறுகிறது என்பது குறிப்பில் குறிப்புணர வைக்கும் சொற்செட்டு சித்திரமாக இத்திருமந்திரம் விளங்குகின்றது.

இதில் கொய்யடி நாரை மீன் உண்டதா வேடுவன் மீன் பிடித்தானு என்பது காணக் கிடைக்காத சூனியமாக இருக்கின்றது. இதிற்தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

நம் அகமாகிய இச்சரீரத்தில் அழுக்கும் பாசமும் வழுக்கலும் நிறைந்த இடம் கீழ்மூலாதாரம் ஆகும். அதையே பாசி படர்ந்து கிடந்த குளத்திடை என்று சொல்லுகின்றார். இவ்வாறான குளமாம் மூலாதாரத்தில் பிராணாதார வாசி உலவுதலைத் தவிர அடங்கி நிற்காது. அதை அடக்கி உட்கொள்ளும் நடுநாடியாகிய வெண்நிறம் பொருந்திய சுழிமுனையை கொய்யடி நாரை என்று கூறுகின்றார். அதற்கு குருகு என்றும் ஒரு பெயர் உண்டு. குருகு என்றால் வெள்ளை நிறத்தைக் குறிக்கும். அத்தகைய நாடி ஓர் உருவாய் மூலாதார தலத்தில் நிலை கொண்டு நிற்றலையே நாரை ஒரு காலை முடக்கி ஒரு காலில் ஊன்றி நிற்பதாகவும் மீன் பிடிக்க இயலாமல் சமயம் பார்த்துக் கொண்டு நிற்பதாகவும் கூறுவது கீழ்மூலம் சுத்திபெறாத நிலையில் வாசி அதில் அமையாமையை குறிக்கும். அதையே கூசியிருக்குங் குருகிரை தேர்ந்துண்ணுந் என்று கூறுகின்றார். அந்த பாசத்தை அகற்றும் வழியும் அதனிடை சுட்டி காட்டி உணர்த்தப் பெறுகிறது. அது மனமாகிய கிராதகன் தன் இனமாகிய புத்தி சித்தம் அகங்காரம் என்னும் துணையொடு வாசியாகிய கலையைப் பற்றி மூலாதாரத்திற்கு சென்று நிலைப்படும் செயலாகிய நாடி சுத்தி சாதனச் செயலால் விளைவால் கீழ்மூலம் தூய்மை பெறுதலை தூசி மறவன் துணை வழி எய்திட என்றும் பாசம் கிடந்து பதைக்கின்றவாறே என்றதாக நாடி சுத்தி காரண பிராணாயாமத்தால் கீழ்மூலாதாரம் புனிதம் பெறுவதையும் பாச நீக்கம் அமைவதையும் தூசி மறவன் துணைவழி எய்திடப் பாசங் கிடந்து பதைக் கின்ற வாறே என்று விளக்குகிறார். பாச நீக்கம் பெற்றால் கொய்யடி நாரையாகிய சுழிமுனை நாடி நிலை கொள்ளும் மூலாதாரத்தில் வாசியாகிய மீன் அமைவுபெற்று அடங்கிவிடும். இதன் கிரியையே இறுதிகாலச் சடங்கில் குளத்திற்கு சென்று துணியை நனைத்து கரையேறி பிழிந்து அத்துணியின் நிழலில் பாசம் கிடந்து பதைப்பது போன்று கரையேறி இறுதிச் சடங்கு ஆற்றுவது. இதுவே குறிப்பில் குறிப்புணர்ந்து தொடர்நிலை அற்ற சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை என்றறிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

கும்ப மலைமேல் எழுந்ததோர் கொம்புண்டு
கொம்புக்கும் அப்பால் அடிப்பதோர் காற்றுண்டு
வம்பாய் மலர்ந்ததோர் பூவுண்டப் பூவுக்குள்
வண்டாய்க் கிடந்து மணங்கொள்வன் ஈசனே. சாமநி (63)

கும்பமலையென்று ஒரு மலையிருக்கின்றது. அந்த மலையுச்சியில் ஒரு கொம்பு எழுந்து நிற்கின்றது. அக்கொம்பிற்கு அப்புறமாக அடிக்கின்ற ஒரு காற்றுண்டு. மணம் மிக்கதாய் மலர்ந்த ஒரு பூவும் உண்டு. அப்பூவுக்குள் மணம் நுகரும் வண்டாய் கிடந்து கொண்டிருக்கின்றான் ஈசன் என்பது ஆதி நவசித்தர்களில் முதல்வர் கூறும் கூற்று.

சித்தர் குல முதல்வர் உண்மையைத் தான் கூறுவார் ஆனால் பார்க்கும்பொழுது கும்பமலையாக ஒரு மலையும் இருப்பதாய் காணவில்லை. அப்படியே ஒரு மலையிருப்பினும் செடி கொடி புற்பூண்டு முதலியனவாகிய மூலிகைப் பொருட்கள் இருக்குமேயன்றி மலை உச்சியில் ஒரு கொம்பு தனித்து எழுந்து நிற்காது. அப்படி ஒரு கொம்பு இருக்கின்றதென்றும் அதற்கு அப்பால் அடிக்கின்ற ஒரு காற்று உண்டு என்றும். மணம் மிக்கதாய் மலர்ந்த ஒரு பூ உண்டென்றும் அப்பூவினுக்குள் இறைவன் வண்டாய் கிடந்து மணம் நுகருகின்றான் என்றும் கூறுவதில் பூவினுள் வண்டு தேன் உண்ணுமே தவிர அதன் மணத்தை நுகராது. இந்த வண்டு மணத்தை நுகருகின்றது என்று சொல்லுகின்றார். இது தேடிக் காணக் கிடைக்காத காட்சி. இதில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

யோக சாதன முயற்சியில் ரேசக பூரக கும்பகம் ஆகியன செய்யப் பெறும் பொழுது அதில் முதலில் 'அ' காரம் தோன்றி அது தீர்க்கையாய் 'உ' காரம் தோன்றி 'உ' காரமும் தீர்க்கையாகும் பொழுது மகாரம் தோன்றும். அந்த 'ம' காரமும் தீர்க்கையாகும் பொழுது ஓங்காரமாய் விளங்கும். 'ம' கார தீர்க்கை பெறும் இடமே கும்பகம் என்னும் கும்பம். அந்த கும்பத்தின் மேலுள்ள பாகமே கும்ப மலை. அந்த கும்ப மலை மேலுள்ள பாகமே பிரமரந்திரமாம் ஒரு கொம்பு இதையே கும்பமலைமேல் யெழுந்ததோர் கொம்புண்டு என்று சொல்லுகின்றார். இவ்வாறு கும்பமலை மேல் எழுந்ததோர் கொம்பிற்கும் அப்பாற் செல்லும் பொழுது அவ்விடத்தில் ஒரு காற்று அடித்துக் கொண்டிருக்கின்றதாம். அக்காற்று யாதெனில் இரண்டு பாதையாம் உபாதையின் செல்லும் காற்றானது உபாதை ஒழிந்து ஒரே காற்றாக அடிக்கின்றதாம். அந்த ஒரே காற்று என்பது இரு நாசித் துவாரங்களில் ஓடிக் கொண்டிருந்த வாசியானது சுழுமுனை என்னும் நாடியின் வழியாக ஒரு முகப்பட்டு வீசத் தொடங்குவதாம். இதேயே கும்ப மலைமேல் எழுந்ததோர் கொம்புண்டு

கொம்புக்கும் அப்பால் அடிப்பதோர் காற்றுண்டு என்று கூறுகின்றார். இந்நிலையில் அது காற்றாக இல்லாமல் வாசி மலராக மாறுகின்றது. அம்மாற்றம் நாசித் துளை வழியாக ஓடிக் கொண்டிருந்த வாட்டம் உள்ள மலராக இல்லாமல் வாடாத மலராக மலர்கின்றது. மலர்ச்சி என்பது மணம் பரப்பி எங்கெங்கும் கமழ் உறும் படியான தன்மைத்து அதையே வம்பாய் மலர்ந்ததோர் பூவுண்டு என்று சொல்லுகின்றார். அந்த பூவினுள் வண்டு ஒன்று அதன் மணத்தை நுகர்கின்றது. அந்த மணமானது சிவமணம் என பெயர் பெறும். அதையே ஆகமச் செம்மல் மற்றொரு இடத்தில் பூவினுட் கந்தம் பொருத்தியவாறு போல் சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது என்று கூறுகின்றார். சீவன்-பசு சிவம்-பதி ஈண்டு கூறியுள்ள செயற்பாட்டு விளைவில் பதிபசுவைக் கூடுகின்றான். அதுவே பூவினுள் வண்டாய்க் கிடந்து மணங் கொள்வன் ஈசனே என்று கூறப் பெறுகிறது. இது ஆகம மந்திரத்தில் கூறியுள்ள ஞானபாத கூறுபாடாம் விளக்க உரை. இதற்குச் சரியான இயைவு கொள செய்யும் சரியை உரை வருமாறு.

கும்பம்-கடம் அது வாயைத் திறந்துள்ள அமைப்பாய் இருக்கும். வாயைத் திறக்குங்கால் தோன்றுவது 'அ' காரம். அவ் 'அ' காரத்தை தீர்க்கை செய்ய அதில் நீரை நிரப்புவது 'அ' கார தீர்க்கை. அதில் தேங்காயை சிகையுடன் வைப்பது கும்ப மலைமேல் எழுந்ததோர் கொம்புண்டு என்று சொல்லப்பெறும். தேங்காய் ஆனது விரிந்து குவிந்த உருவத்தைக் காட்டுகின்ற படியால் அது 'உ' காரம். ஈண்டு 'அ' காரம் தீர்க்கையாகி 'உ' காரம் தோன்றலாயிற்று இந்த அகார உகாரம் தீர்க்கையாம் பொழுது 'ம' காரம் தோன்றும். அதுவே மாங்கொத்து வைப்பதாகும். இந்நிலையில் கொம்புக்கும் அப்பால் அடிப்பதோர் காற்றுண்டு என்னத் திகழ்வது கும்பமலை மீது எழுந்ததோர் கொம்பு உண்டு என திகழும் தேங்காய் சிகையின் மீது மூன்று ஒன்றாய் முடிந்த தர்ப்பையை வைப்பதாகும். அதுவே கொம்புக்கும் அப்பால் அடிப்பதோர் காற்றுண்டு என்று கூறப்பெறுகிறது. இந்த செயற்பாட்டில் ஆகம வேதமந்திரங்களை ஓதுவதே வம்பாய் மலர்ந்ததோர் பூ. அப்பூவினுள் எழுதாக் கிளவியாகத் தோன்றும் நறுமணத்தை நுகரும் வண்டாகிய பண்தாரராக ஈசன் இருக்கின்றான் என்பது ஞான சாதன விளக்க சரியை உரையாகும்.

குறிப்புரை :- மூலமாம் குள்த்திலே முளைத்தெழுந்த கோரையை தர்ப்பைபுல் வாசியின் வடிவம் என்பது எவ்வாறு பொருந்தும் எனில் காற்று வீசும் போது அதன் போக்காக போகாமல் எதிர்த்து நின்றால்இடர் ஏற்படும். தர்ப்பைப்புல்லும் அதன்போக்காக போகாமல் எதிர்த்து தடவினால் ஊறுபாடு விளைவித்துவிடும். அத்தன்மை காற்றின் இயலாக இருக்கின்றபடியாலேயே தர்ப்பைப்புல்லிற்கு சரம் என்ற ஒரு பொருள்

வந்துள்ளது. சரம் என்றால் வாசி. அதை அதன் போக்கில் செலுத்தி கட்டுப்படுத்த வேண்டுமேயொழிய எதிர்த்தால் இடையூறு விளைவிக்கும். அதனாலேயே வாசிக்கு தர்ப்பை என்று காட்டப் பெற்றது.

ஞான சாதன விளக்கத்திற்கு சரியாக அமைய பெற்ற சரியை உரையைப் பார்த்தோம். அடுத்தபடியாக கிரியா பாத உரை வருமாறு. ஞான சாதன சரியை புரியுங் கால் அதன் காரணமாக மனம் சலனமின்றி அசைவற்ற நிலையில் நிற்பதே கிரியை எனப்படும். கிரி என்பது மலை அதனுடைய இயைபு நிலைபேறாத தன்மை. கும்பசலத்தைப் பருகவும் அதை சிரசில் தெளித்துக் கொள்ளவும், மாங்கொத்தும், தருப்பையும் சேர்த்து கும்ப ஜலத்தில் தோய்த்து தெளித்தலும் அகார உகார மகார தீர்க்கை கிரியை. அவ்வாறு செய்யுங்கால் வேதஆகம மந்திரங்களை ஓதுதல் சிவமணம்கமழும் மலர். அச்சிவ மணம் நுகரும் வண்டு திருவைந்தெழுத்தை ஓதி திருநீற்று கவசம் அணிதலாம். ஞான சாதன விளைவு யோகத்தால் பெறப்படுவதால் ஞானம் யோகம் இரண்டையும் பிரிக்க இயலாது. ஆகவே முதலாவதாக கூறிய உரையிலேயே யோகம் ஞானம் இரண்டும் அமைந்து மூன்றில் நான்காக நிறைவு பெறுகின்றது இதுவே, வெறும் வெளிபாழும் சூனியத்தில் தேடிக்கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

வீணையுந் தண்டும் விரவி யிசைமுரல்
தாணுவும் மேவித் தகுதலைப் பெய்தது
வாணிபஞ் சிக்கென் றதுவடை யாமுன்னங்
காணியும் அங்கே கலக்கின்ற வாறே. சூ௬௪ (64)

குழலும் யாழும் சேர்ந்து இசைக்கின்றது. அதற்குத் தலைமை தாங்கி தாணுவாகிய முதற்பொருள் இருக்கின்றான். கொடுக்கல் வாங்கலாகிய வாணிபம் நடக்கின்றது. அது தவறுதலில்லாமல் சிக்கனமாக செய்யப்படுகிறது. சிக்கனமாக பொருளீட்டும் முன்னரேஉரிமைப் பொருளாகிய காணி கிடைத்துவிடுகின்றது என்று சொல்லுகின்றார். தொடர்பு அறு நிலையை தொடர்புபடுத்தும் சித்தர் பெருந்தகை. யாழும் குழலும் சேர்ந்து இசைப்பதற்கு தலைமை தாங்குவது தாணுவாய் நின்ற தலைவன் என்பதும் வாணிபத்தை முறையோடு செய்து சிக்கனமாக பொருள் ஈட்டும் முன்னரே காணி கிடைத்து விடுகின்றது என்பதும் தொடர்பறு நிலையும் நடைபெறா நிலையும் ஆகக் காணப் பெறுகின்றது. இப்படியாகக் காணப்பெறும் சூனியத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

வீணை நரம்புக் கருவி தண்டாகிய புல்லாங்குழல் துளை கருவி. இவ்விரண்டும் நாடியையும் வாசியையும் குறிக்கும் நாடியில் வாசி அடங்கிவிடும். இதில் நாடி இறைவன் குழல் கண்ணன். இவ்விருவரும் இணைபிரியாமல் வளம்தர நிற்பவர்கள். அதையே வீணையுந் தண்டும் விரவி யிசை முரல் தாணுவும் மேவித் தகுதலைப் பெய்தது என்று கூறுகின்றார். நாடியும் வாசியும் சிவனும் சீவனும். சீவன் உயிர் காற்றோடு கூடிநிற்கப் பெறுவது. அவ்வுயிர்க் காற்றையும் உயிரையும் நாடி கவர்ந்து நடைபெறச் செய்யும் தன்மையுடையதாகையால் தாணுவும் மேவித்தகுதலைப் பெய்தது என்று சொல்லுகின்றார். இரண்டும் ஒன்றையொன்று தொடர்பு கொண்டதேயன்றி பிரித்து அறியதக்கதல்ல. இதையே மற்றொரு இடத்தில் சீவனென சிவனென்ன வேறில்லை என்று கூறுகின்றார். இறைவன் யாழ் வாசிப்பதும் கண்ணன் குழல் ஊதுவதும் உயிர்பயிர் தழைக்கவேயாகும் அப்பர் பெருமான் "பெருங்கடல் மூடி பிரளயங் கொண்டு பிரமனும் போய் இருங்கடல்மூடி இறக்கும் இறந்தான் களேவரமும் கருங்கடல் வண்ணன் களேவரமும் கொண்டு கங்காளராய் வருங்கடல் மீளநின்று எம்மிறை நல்வீணை வாசிக்குமே என்பதாலும் கண்ணன் பசுக் கூட்டங்களை கவரும் பொருட்டு குழல் ஊதுவதையும் நோக்கத் தக்கது. யோக சாதன விளைவில் பத்துவகை ஒலி முழக்கம் காணப் பெறினும் வாயாகிய குழலிலும் நாசியாகிய நாடியிலும் கால் கொண்டு விளங்கும் குழல் ஒலியும் யாழ் ஒலியுமே சிறப்புடையதாய் அமையும். ஒன்று சீவன் ஒன்று சிவம், இவ்விருவகை ஒலியும் எடுத்தலோசை படுத்தலோசையாகிய ஆரோகண அவரோகண நிலையில் சமத்துவமாகிய ஒப்புடை ஒருமையாலேயே வளம் பெருவதால் அதை வாணிகம் என்று சொல்லுகின்றார். அதுவே வாணிபஞ் சிக்கென்றது வடை யாமுன்னங் என்று கூறப் பெறுவது. குழல் ஒலியும் யாழ் ஒலியும் ஆகிய நாதங்கள் நாதாந்த நிலையை சென்று அடையும் முன்பே காணியாகிய வீடு பேற்றிற்கு உரிமைப்பாடு உண்டாவதால் காணியும் அங்கே கலக்கின்றவாறே என்று கூறுகின்றார். இதில் எடுத்தலோசை படுத்தலேசையாம் ஆரோகண அவரோகணமே வாணிபம். அவ்விரண்டின் ஒலியும் (அவ்விரண்டென்பது வீணையும் தண்டும்) சீவனும் சிவமுமாக இருக்கின்றது. இவ்விரண்டும் அமைவுற பெற்றாலே வீடுபேற்றிற்கு உரியவன் ஆகின்றான். நாதாந்தம் அமைவது இதன்விளைவாகத் தானே வரும். இதனுடைய கிரியையே குழலும் யாழும் மறைமுழக்கம் தர வாசிப்பதாகும். இதுவே தொடர்பறு சூனிய நிலையில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை என்றறிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

கொங்குபுக் காரொடு வாணிபஞ் செய்த
தங்குபுக் காலன்றி ஆய்ந்தறி வாரில்லை
திங்கள்புக் கால்இரு ளாவதறிந்திலர்
தங்குபுக் கார்சிலர் தாபதர் தாமே. சாயரு (65)

கொங்கு நாட்டிற்குப் போய் வாணிபம் செய்தார்கள். அப்படி வாணிபம் செய்வது அக் கொங்கு நாட்டிற்கு சென்றதைத் தவிர ஆராய்ந்து அறிபவர்கள் இல்லை. திங்கள் மறைந்தால் இருளாகும் என்று சிந்தித்துப் பார்க்கவில்லை. தங்கிப் புகுந்தவர் சிலர் யோகியர் ஆயினர் என்று கூறுகின்றார் யோக நெறிவல்ல யோக சித்தர். வாணிபம் செய்வதற்காக தன் நாட்டை விட்டு கொங்கு நாட்டிற்குச் சென்று வாணிபம் செய்கின்றார்கள். அங்கு சென்று வாணிபம் செய்வதை அல்லாமல் வரவு செலவு ஆராய்ந்து அறியவில்லை. நாளும் நாளும் மதிகலை தேய்ந்து கொண்டே வருவது முடிவில் இருளாகிவிடும் என்பதைச் சிந்திக்கவில்லை. சிந்தித்து நிலை கொண்டு புகுந்தவர் சிலர் யோகியாகிவிட்டார்கள் என்று கூறுவதில் பொருள் ஈட்டுவதற்காக நாடு விட்டு நாடு கடந்து கொங்கு நாட்டிற்குப் போய் வாணிபம் செய்பவர்கள் வாணிபத்தின் நிலைமையை ஆராய்ந்து அறியாமல் செய்யமாட்டார்கள். அப்படி ஆராய்ந்து அறியாமல் செய்வதனால் தேய்பிறை சந்திரன் நாளுக்கு நாள் குறைந்து வருவதை முடிவில் இருளாகவே போய்விடும் என்பதையும் அவர்கள் சிந்திக்கவில்லை. அப்படிச் சிந்தித்து அவ்வூரிலேயே தங்கி புகுந்த சிலர் யோகியர் ஆகின்றார்கள் என்பது காணக் கிடைக்காத ஒன்று. வாணிபம் செய்பவர்கள் யாரும் ஆராய்ந்து அறியாமல் செய்வது கிடையாது. அப்படி ஆராயாமல் செய்வதன் காரணமாக செல்வம் நாளுக்கு நாள் குறைந்து வருவதைக் கண்டிருந்தும் முடிவு என்ன ஆகும் என்பதை சிந்திக்காமல் இருக்க முடியாது. அப்படி சிந்தித்து அங்கேயே தங்கியிருந்து புகுபவன் செல்வந்தனாக உயர்வானே அன்றி யோகியாகி விடமாட்டான். இப்படியெல்லாம் இருக்கின்றது என்று கூறுவது காணக் கிடைக்காத சூனியம் ஆகும். இச் சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

நம் சரீரத்தில் மேநிலைத்தானமாகிய அண்டம் என்னும் சிரமே கொங்கு தேசம் என்பது. அங்கு சென்று வாணிபம் செய்வது என்பது பொறிவாயில் வழியாக புலன் இன்பங்களை அனுபவித்தலும் அவ்வனுபவத்தில் ஈடுபட்டு வாசியை செலவழித்தலும் ஆகும். வாசி சென்று அழிவதாகிய செலவழித்தல் நாளுக்கு நாள் கூடுதலாகும் பொழுது அதை சிந்திக்கவே இல்லாமல் செலவழித்துக் கொண்டிருப்பதை கொங்குபுக் காரொடு வாணிபஞ் செய்தது அங்கு புக்காலன்றி ஆய்ந்தறி

வாரிலலை என்று சொல்லுகின்றார். அதை ஆய்ந்து அறிந்தால் செலவு 12 (யஉ) வரவு 8 (அ) இப்படி நாள்தோறும் செலவழித்துக் கொண்டேயிருந்தால் அதன்முடிவு அழிவு நிலையை கொண்டு போய்விடும். அதற்கு எடுத்துக்காட்டாக கொங்கு என்னும் வானமண்டலமாம் உயர்நிலை தானத்தில் இரவிமதி சஞ்சாரம் செய்வதில் மதிகலை நாளுக்கு நாள் தேய்ந்து கொண்டே வருவதைப் பார்க்கிறோம். அது மதிகலையானது சூரியனிடத்து தன்கலையைக் கொடுத்து தான்தேய்ந்து முடிவில் மறைந்து விடுவதைப் போன்றது என்று நமக்கு எடுத்துக் காட்டுகின்றார். வானமண்டலமாகிய சிரத்தில் வெளிச் செல்வது சூரியகலை உட்செல்வது சந்திர கலை. சூரியனுக்கு சந்திரன் தன்கலையைக் கொடுத்து தேய்ந்து தேய்ந்து நாளடைவில் இல்லாமலே போய்விடும். அதுபோன்று மக்களுடைய ஆயுளும் போய்விடுகின்றதை அறிபவர்களாக இல்லை. அப்படி அதை அறிந்து தங்க வேண்டிய இடத்தில் தங்கி புகலாய் அடைய வேண்டிய இடத்தை அடைந்தால் அவர்களே யோகிகள் இவ்வாறு அடைவது ஒரு சிலருக்கே வாய்ப்புள்ளதாக இருக்கிறது என்று கலை நுணுக்கம் காணும் படியாக எச்சரித்துக் கூறுவதே "கொங்கு புக்காரொடு வாணிபஞ் செய்வதும்

அங்கு புக்கவர்கள் ஆய்ந்து அறியாமையால் அழிந்து போவதையும் அப்படி அழிந்து போவதை தேய்பிறை சந்திரனுக்கும் ஒப்பிடுவதோடு இதை அறிந்து தங்கி புகுந்தவர்கள் யோகியர் ஆகின்றார்கள் என்பதை

"கொங்கு புக் காரோடு வாணிபஞ் செய்த
தங்குபுக் காலன்றி ஆய்ந்தறி வாரிலலை
திங்கள்புக் கால்இரு ளாவதறிந் திலர்
தங்குபுக் கார்சிலர் தாபதர் தாமே.

என்று கூறுகின்றார். இதுவே யோக நெறிவல்ல சித்தர் பெருந்தகை கூறிய சூனியத்தில். தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை என்றறிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

போது புலர்ந்தது பொன்னிறங் கொண்டது
தாதவிழ் புன்னை தயங்கு மிருகரை
ஏதமில் ஈசன் இயங்கு நெறியிது
மாத ரிருந்ததோர் மண்டலந் தானே. சாயசா (66)

சூரியன் உதயமாயிற்று அதன் பொற்கிரணங்கள் எங்கும் பரவியிருக்கின்றது. புன்னை மரங்கள் இருகரையிலும் பூந்தாது நிறைந்த மலர்களை சிந்தி நிற்கின்றன. குற்றமற்ற தன்மையைத் தரும். இறைவன்

இயக்குகின்ற நெறியிது. அழகு நிரம்பிய பெண்ணாக இருந்த மண்டலம் இது என்பது இயற்கையழகின் தோற்றத்தை தெய்வீகத் தோற்றமாய் வருணிக்கும் பயன்தரு தோற்றம் புரியாத நிலையைக் காட்டும் மங்கல தெய்வீகம் உணர் ஞான வள்ளல் கூறும் கூற்று. இதில் அருணோதயச் சிறப்பும் அழகு நிரம்பிய நீரோடை சூழ்ந்த பூமரங்களினுடைய வனப்பும் கூறுவதோடு எழில் நிறைந்த பெண்ணான ஒருத்தி நிலை பெற்றிருந்த மண்டலம் என்றும் கூறுவதை நோக்கும் போது ஒவ்வொரு நாளும் காணும் அருணோதயக் காட்சியும் நீரோடை சூழ்ந்த மலர்விரியும் மரங்களுடைய வனப்பும் கூறுவதோடு மாசற்ற தன்மையைத் தரும் ஈசனரின் இயற்கை யிது என்றும் பெண்ணாழ் இருந்த மண்டலம் என்றும் கூறுவது எதற்காக என்று நோக்கும் பொழுது இது அன்றாடம் காணும் காட்சி. இதைக் காட்டுவனேன் எதற்காகக் காட்டுகின்றார் என்பது ஒன்றும் புரியாத சூனியமாக இருக்கின்றது. மெய் ஞான வள்ளல் பயனற்ற ஒன்றை காட்டமாட்டார். ஆகையால் இச்சூனியத்தில் தேடிக் காணும் தேட்டம் யாது என்று குறிக்கோளுடன் தேடிக் காணப்பெறும் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

ஒவ்வொரு நாளும் இரவி தோன்றி மறைவதை நாம் கண்ணுறுகின்றமே யன்றி அதைப்பற்றி நாம் சிந்திப்பதில்லை. இதையே பிரிதொரு இடத்தில் "கிழக்கெழுந்தோடிய ஞாயிறு மேற்கே விழக்கண்டும் தேறார் விழியிலா மாந்தர்" என்று கூறுகின்றார். பால சூரியனாக தோன்றுகின்றது அப்பொழுது எழில் கொஞ்சி மிளிரும் தோற்றம் உடையதாக இருக்கின்றது. அதுவே வாலிப மிடுக்குடன் உச்சத்திற்கு வரும் பொழுது வெய்யவன் ஆகி விரும்பத்தகாத வெப்பத்தையும் கண்ணோக்க ஒண்ணா கதிர்வீச்சையும் உடையதாகி வெய்யவன் என பெயர் கொள்ள வெம்மை மிகுந்து பின்னர் கொஞ்சம் கொஞ்சமாக எல்லாம் அடங்கி விருத்தப் பருவத்தை அடைந்து மறைந்து விடுகின்றது. இது நம்முடைய பிறப்பின் நிலைமையைக் காட்டுகின்றது. அதை யாரும் உணர்வாரில்லை. அதை சிந்தித்து உணரப்பெறும் பொழுது இவ்வளவு அழகு எப்படி வந்தது என்றால் அதற்குக் காரணம் "தாதவிழ் புன்னை தயங்கு மிருகரை" என்று கூறுகின்றார். புள்ளிய நேயமே புன்னை என்று ஆகும். இறைவன் புள்ளி நேயம் கொண்டிருக்கின்றான். அதனால் எல்லையற்ற வனப்பு மிகுந்து மனம் கவரும் எழில் துலங்குகின்றது. அதையே போது புலர்ந்தது பொன்னிறங் கொண்டது தாதவிழ் புன்னை தயங்குமிருகரை என்று கூறுகின்றார். புள்ளிய நேயமென்பது இறைவன் அணைந்து.புள்ளி உறவுகொள்ளுவதோடல்லாமல் புள்ளிய நேயம் கொஞ்ச நேரமே நிற்கின்ற நேயம் என்றும் பொருள் தரும். அப்படி கொஞ்ச நேரம் சென்றதன் பிறகு இரவி தன் போக்காக சென்று சஞ்சரிக்க ஆரம்பிக்கின்றது. அதனால் வெய்யோன் எனப் பெயர் பெறுகின்றது.

புள்ளிய நேயங் கொண்டு மலர்ந்த புன்னை மரப் பூக்கள் அம்மரத்தடியை விட்டு தன்போக்காய் நீரோடையில் விழ ஆரம்பித்ததை பால சூரியன் வெங்கதிரோனுல் தோற்றம் தருவதை ஓடை வீழ்மலர் அடையும் தன்மைக்கு ஒப்பிடுகின்ருர். மரத்தில் இருக்கும் போது மலர் அழகாக மரத்தைப் புள்ளும் நேயமுடையதாக இருப்பதை பாலசூரியனுக்கு ஒப்பிடுகின்ருர். அதைவிட்டு உதிர்ந்து தன் போக்காய் ஓடை நீரில் வீழ்வதை வெங்கதிரோனுக்கு ஒப்பிடுகின்ருர். ஓடை வீழ் மலர் அலையால் கழிக்கப்படுவதாகிய அலைக்கழிக்கப்பட்டு மறைவதை விருத்தச் சூரியனுக்கு ஒப்பிடுகின்ருர். மேலும். குற்றமற்ற தன்மையைத் தரும் ஈசன் இயங்கும் நெறி இது என்றும் குறிப்பிடுகின்ருர். யான் எனது என்ற தற்போதம் இழந்து அவனோடு ஒன்றியிருந்த காலமே கருவும் கருவில் உருவும் அவ்வுருவப் பொலிவு கொண்ட குழவி தோற்றமும் ஆகும். அதையே பாலசூரியனுக்கும் புள்ளிய நேயமாகிய செயற்பாட்டிற்கும் உவமித்துக் கூறுகின்ருர். புள்ளிய நேயம் புன்னேயமாகி யான் எனது என்ற ஆணவமலம் தலைப்பட்டு அலைவுறும் யவ்வன பருவத்தையே வெங்கதிரவனுக்கு ஒப்பிடுகின்ருர். யவ்வனப் பருவம் நீங்கி முதிர்மெய் பருவம் அடைந்து அழிவதையே விருத்த சூரியனுக்கும் நீர்ஓடை வீழ்பூ அலைக்கழிக்கப் படுவதற்கும் ஒப்பிட்டு நம் சரீர நிலமையை வாழ்நாள் நிலைமையை சுட்டிக் காட்டுவதோடு அவனோடு ஒன்றியிருந்தால் என்ன தன்மை வாய்க்கின்றது என்பதையும் அவனைவிட்டு விலகியதால் ஏற்படும் அலைக்கழிவும் அழிவும் ஏற்படுவதை சுட்டிக் காட்டுகின்ருர். அதோடு எழில் விளைவு தரும் இயற்கை நிலையில்லாதது பருவ மாற்றங்களை அடைவது அது பாலப்பருவம் யவ்வனப் பருவம் முதிர்மைப் பருவம் அழிவுப் பருவம் ஆகிய நான்கு மண்டல கூறுபாடுகளை உடையதாக இருக்கின்றது. நான்கு மண்டலம் என்பது 45 (சுரு) நாள்களைக் கொண்ட வட்டங்கள். எட்டு கூடிய முந்நூற்றி அறுபது நாளாகும் 360 (௩௱சுய). இந்த நால்வகை பொழுதில் ஒன்றையொன்று கவர்ந்து நிற்கும். இடைப்படு பருவங்கள் நான்கும் கூட எட்டுப்பருவம் ஆகும். அவ்வெட்டுப் பருவத்தை அடையும் ஒன்ருக உயிர் இருப்பதாலேயே அதற்கு எட்டு என்ற ஒரு பெயரும் வந்துள்ளது. உயிரானது இந்த எட்டையும் எட்டிவிடாமல் புள்ளிய நேயம் பொருந்தும் புன்னை மலராக அவனை அடைந்தால் பால சூரியனுகவே என்றும் இருக்கலாம். ஆன்மாவின் பூ உருவ நிலையிது. அந்நிலையை மீண்டும் அடைவதுவே பண்டு என்பது பழமை. பழமைநிலை கருவும் கருவில் உருவும் உருவில் பொலிவு தோற்றமும் கொண்ட நிலை. அதை விடுத்து பாலப்பருவம் பாலியற் பருவம் யவ்வனப் பருவம் விருத்தப் பருவம் ஆதியனவற்றை அடைந்து அழிந்து விடாமல் பழைய நிலைக்குத் திரும்புவதே பண்டிதம் என்று பெயர். பண்டு இது என்று காட்டும் பண்டிதர்களே மெய் ஞான

பண்டிதர்கள். அந்நிலைமையை அடைவதற்கு குறிப்பை குறிப்பால் உணர்த்தும் தன்மையே முற்கூறிய திருமந்திரம். அகத்தில் ரவிமதி சஞ்சாரம் நாழிகைப் போதாக இருப்பது புறத்தில் முந்நூற்றறுபதைக் கொண்ட ஒரு ஆண்டாக இருக்கின்றது. பூ இருக்கும் இடத்தை விட்டு வீழ்ந்தால் அலைக்கழித்து அழியப் பெறுவதாகும் என்பதை நமக்குச் சொல்லாமல் சுட்டிக் காட்டி அருளுகின்றார் அருட் பெருஞ் சித்தர். இதுவே.

"போது புலர்ந்தது பொன்னிறங் கொண்டது
தாதவிழ் புன்னை தயங்கு மிருகரை
ஏதமில் ஈசன் இயங்கு நெறியிது
மாத ரிருந்ததோர் மண்டலந் தானே"

என்று கூறும் திருமந்திரத்தில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை என்றறிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

**கோமுற் றமருங் குடிகளுந் தம்மிலே
காமுற்ற கத்தி இடுவர் கடைதொறு
மீவற்ற வெல்லை விடாது வழிகாட்டி
யாமுற்ற தட்டினால் ஐந்துண்ண லாமே.** சூ௰௭ (67)

அரசன் முதல்வனாக அமர்ந்திருக்கின்றான். அவனுடைய குடிகள் ஒவ்வொருவரும் நயந்த விருப்பமுடையவர்களாய் அன்னம் சமைப்பதற்கு அடுப்பு மூட்டுகின்றார்கள். ஒவ்வொருவரும் இவ்வாறே செய்வதாக அமையும் நிலையில்அன்னம் பாலிப்பு நடத்தாத இடமே இல்லை என்று சொல்லும்படியாக உள்ள வழிகாட்டுதல் ஏற்புடைத்தாகின்றது. நாமும் அங்கு சென்று அதட்டிக் கூறினால் ஐவகை உணவுகளை உண்ணலாம் என்று சொல்லுவதை நோக்கும் போது அரசன் குடிகள் அமுது படைக்கும் படியாக எதிர்பார்த்து நிற்க மாட்டான். அப்படி நின்றால் அவன் அரசனும் அல்ல. அரசனுக்கு அமுதளிப்பதற்காக வீடுதோறும் சமையல் தொடங்க அவசியமும் இல்லை. ஒவ்வொரு வீட்டு வாயில்களிலும் அன்னம் பாலிப்புக்காக எதிர்பார்த்துக் கொண்டே யிருப்பதால் அவ்வூரே ஈவதற்கு வழிகாட்டியாக விளங்குகின்றது என்பதும் அப்படி விளங்குகின்ற ஊரில் நாம் சென்று அதட்டி கேட்க வேண்டிய அவசியம் இல்லை அப்படிக் கேட்பதாகச் சொல்லுவதும் உண்டியானது நக்கல் பருகல் உண்பன தின்பன என்ற நால்வகையே தவிர ஐந்து உண்ணலாம் என்பதும் இல்லாத ஒன்று. இல்லாத ஒன்றை மூலகுரு சொல்ல மாட்டார். இவ்வாறு இல்லாத ஒன்றும் சூனியத்தில் தேடிக்காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

ஆன்மாவானது உடம்பெங்கும் நிறைவு பெற்று நிற்கின்றது. அதையே கோமுற்றமருங் என்று சொல்லுகின்றார். ஆன்மாவாகிய அரசன் தத்துவக் கூட்டங்களாகிய குடிகளுக்கு முற்பட நின்று செயலாற்றுவனவாய் நின்று விளங்கும் தன்மையையே கோமுற் றமருங் குடிகளுந் தம்மிலே காமுற்ற தம்மிலே அன்புகொண்டு நிலைநிற்பதை காமுற்ற குடிகளும் என்று சொல்லுகின்றார். அக்குடிகள் மூலாக்கினியாகிய அங்கிதாரணை செயற்பாட்டால் அமிததாரணை பொருந்தும் நிலையை காமுற்ற கத்தி இருவர் என்று கூறுகின்றார். அகத்தி என்பது மனைதொறும் விளங்குகின்ற தீ என்று பொருள். மனைதொறும் விளங்குகின்ற தீ தீபாக்கினி. கமலாக்கினி. காடாக்கினி என்று சொல்லப்பெறும். தீபாக்கினி என்பது மனை விளக்கம் தர ஏற்றி வைக்கும் சுடர்ஒளி ஆகும். கமலாக்கினி என்பது வாழ்நாள் வளத்தைத் தரும் உதராக்கினியை குறிக்கும். அவ் உதராக்கினி வளர்வதற்கு கடத்தை அடுப்பேற்றி அடிசில் ஆக்கும் செயற்பாடாவதே காடாக்கினி என்று ஆகும். இதையே குடிகளும் தம்மிலே காமுற்றகத்தி இடுவர் கடைதொறு என்று கூறுகின்றார். இவ்வாறாக அங்கிதாரணை அமிததாரணை செய்து தத்துவக் கூட்டங்கள் எல்லாம் அதில் அமைவுருவனவாக செய்து வழிகாட்டும் நிலையில் ஓசை, பரிசம், உருவம், சுவை, நாற்றம் என்னும் ஐந்தையும் அமுதுண்பது போல் உண்டு அடக்கி விடலாம் என்பதையே யாமுற்றதட்டினால் ஐந்துண்ணலாமே என்று கூறுகின்றார். இவை யாவன நிறைந்து நின்ற உயிரும் அதைச் சார்ந்து நின்ற ஆன்ம தத்துவமாகிய தத்துவக் கூட்டங்களும் வாசிதாரணையால் எய்தப்பெறும் அங்கிதாரணை அமிததாரணை ஆகிய வேள்வித் தீயால் நலம் பெற்று விளங்குவதை குறிப்பனவே இத்திருமந்திர உரைக்குறிப்பு. இதுவே வெறும்பாழும் சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை என்றறிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

தோட்டத்து மாம்பழம் தொண்டி விழுந்தக்கால்
நாட்டின் புறத்தில் நரியழைத்து என்செயும்
மூட்டிக் கொடுத்த முதல்வனை முன்னிட்டு
காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே. ௩௰௮ (68)

ஒரு நல்ல மாளிகை. அதற்கு ஒரு தோட்டம் உண்டு. தோட்டத்தில் நின்ற மாமரத்தில் மாங்காய் காய்த்து தொங்கிக் கொண்டிருக்கின்றது. நன்றாய் பழுத்து விழும் பருவம் வந்துவிட்டது. அப்பருவத்தில் திருட்டு நரி ஒன்று ஊர் புறத்தில் உலாவித் திரிந்தது. அத சமயம் மாம்பழம் பழுத்துத் தொங்கியது தோட்டத்துக்குள்ளும் வெளியிலும் இல்லாமல் ஒரு தொண்டில் விழுந்து விட்டது. அந்த சத்தம் கேட்டு அந்த திருட்டு நரி ஓங்கி

ஊளையிட்டு தன் இனத்தைக் கூட்டிவிட்டது. நரிக்கூட்டம் மாம்பழத்தை என்ன செய்ய முடியும்? இந்த அரவம் கேட்டு வீட்டுக்காரன் விழித்து எழுந்தான். மேற்கொண்டு என்ன நடந்திருக்கும் காட்டில் பதுங்கி சும்மா கிடந்த நரியை ஊளையிட்டு வரவழைத்து வம்பு மூட்டிவிட்ட நிலைமை யாகிவிட்டது. தலைவனை விசுவாசித்து ஒரு திருட்டுக் கூட்டத்தை அவனுக்குக் காட்டிக் கொடுத்து விட்டு அந்த நரிக் கூட்டத்தை கைவிட்டு ஊளையிட்ட நரி ஓடிப்போய் விட்டது. இதில் நரி கோள் மூட்டவும் விரும்பவில்லை. அவனுக்குக் காட்டிக் கொடுக்கவும் விரும்பவில்லை. அந்த நரிக்கூட்டத்தைக் காட்டிக் கொடுத்துவிட்டு தான் மட்டும் தப்பித்துக் கொள்ளவும் விரும்பவில்லை. இவ்வாறான கலகத்திற்குக் காரணம் தோட்டத்தில் மாம்பழம் தொண்டில் விழுந்ததேயாம் என்னும் திருமந்திரத்தில் கூறப்படும் நிகழ்ச்சி எங்கும் காணக் கிடைக்காத ஒன்றே.

திருட்டு நரி ஆடு கோழிகளைப் பிடித்துத் தான் தின்னுமேயல்லாது ஊளையிட்டுக் கூட்டத்தைக் கூட்டாது. தனக்கோ தன் கூட்டத்திற்கோ உதவாத மாம்பழம் ஒரு தொண்டில் விழுந்தது கேட்டு ஒரு கூட்டத்தைக் கூட்டிற்று என்பது நடைமுறையில் காணக் கூடாத நிகழ்ச்சி இப்படி ஒன்று நிகழ்ந்ததாக திருமூலர் கூறுகிறார். இது எவ்வாறு நிகழும் என்பதை ஒன்றுமற்ற சூனியத்தில் தேடி சம்பாதிக்கும் சூனிய சம்பாதனை கூறும் அவ்வுரை வருமாறு.

வளமிக்க மாளிகை என்பது தலைவன் இல்லமாகிய இவ்வூன் உடம்பு. இவ்வூன்வுடம்பு விழுந்தால் தனக்கும் தனது கூட்டத்திற்கும் ஆக்கம் தரும் என்று கருதுவது நரியின் இயல்பு. அந்த நரி என்று கூறப் பெறுவது சிறுகாலன் என்று கூறப்படும் பெயரையுடையதும் காய வலிமையில்லாததும் புன்மைக் குணம் படைத்ததுமான செயலையுடைய நரி. இத்தன்மை வாய்ந்தது நம் இல்லம் என்னும் உடம்பில் இப்பொழுது உலவை கொண்டு தீய செயல்களுக்கு ஆதாரமாய் திரியும் சுவாசம். நம்மிடத்திலேயே இவ்வாறு தீயகுணம் படைத்த ஒரு கூட்டம் வாழ்வது விரும்பத்தக்கதல்ல என்ற நிலைமையை குருமுகமாக உணர்ந்து கொண்டு குருவின் திருவருளிற்கு பாத்திரனான ஒருவன் ஞானசாதனம் செய்கின்றான. அந்தச் செயற்பாட்டின் ஆரம்ப நிலைக்கு அகார தீர்கை என்று பெயர். காரணம் வாசியை பின்கலையால் இழுத்து இடகலையால் விடுவதே முதலில் செய்யப்படும் சாதனம். அவ்வாறு செய்யச் செய்ய அந்த நிலைமையினின்று ஒரு முதிர்ச்சி ஏற்படும். அந்த முதிர்ச்சிக்கு அகார தீர்க்கை என்று பெயர். காரணம் இப்பொழுது பனிரெண்டும் எட்டும் ஆக நிற்கும் வாசி சாதன நிலையில் உருவகப்படுத்திப் பார்க்குங்கால் நாசியின் நுனியின் நின்று இடங்கொண்டு செல்லும் போது ஒரு சுழிப்பும் ஒருநீள் கோடுமாகத் தோன்றும். அதைவிடும் போது நேர்கோடு

செங்குத்தாய் எழும்பி புருவமத்தியத்தை முட்டி சிதறி வெளியில் போகும் பொழுதுஅதன் வடிவம் நேர் மாருன குறுக்குக் கோடாகத் தோன்றும். இதுவே அகாரம் இந்த அகாரம் சாதனம் செய்ய செய்ய புருவ மத்தியத்தை முட்டி மேற்செல்ல ஆரம்பிக்கும். அப்பொழுது அகார வடிவம் தீர்க்கை பெற்று உகாரமாய் மாறும். ஆகையால் அதற்கு உகார தீர்க்கை என்று பெயர். அகார தீர்க்கை கடந்து காணப் பெறுவது உகாரம். அந்த உகாரச் சாதனம் செய்யச் செய்ய புருவமைய தொளை திறந்து வாசி மேற்செல்ல ஆரம்பிக்கும். இந்த இரண்டு சாதனத்திலும் நடக்கும் வாசி சாதனச் செயற்பாடு வீட்டில் முன்புறத்தில் நடப்பது போன்று புருவமையம் முதல் மணிபூரகம் வரை வாசி நடை கொள்ளும். இந்த உகார சாதனமும் முதிர்ச்சி பெறுங்கால் உகாரம் தீர்க்கை பெற்று வாசியானது மகார வடிவமாக மாறுதல் அடையும். அப்படி அடையுங்கால் அந்த வாசி செல்லுமிடம் வீட்டின் முன்புறம் இல்லை. பிடரி மார்க்கமாக முள்ளந்தண்டு வழியாக மூலத்தைச் சென்று அடையும் இது தலைக்கும் உடம்பிற்கும் இடையில் உள்ள தொண்டை கடந்து செல்லுவதை தோட்டத்தில் மாழ்பழம் தொண்டில் விழுந்தக்கால் என்று திருமூலர் கூறகின்ருர். அகாரச் சாதனத்திலும் அது தீர்க்கை பெற்றுச் செய்யும் உகார சாதனத்திலும் அவ்உகாரமும் தீர்க்கை பெற கிடைக்கும் மகார சாதனத்தையே தோட்டத்து மாம்பழம் தொண்டில் விழுந்தக்கால் என்று சொல்லப்பெறுகிறது. இந்த நிலைமை அடைந்தபின் ஏற்படும் விளைவைத்தான் நாட்டின் புறத்தின் நரி அழைத்து என் செய்யும் என்று கூறுகிருர். நாட்டின் புறம் என்பது தத்துவக் கூட்டமாகிய கருவிகரணகதிகள் சஞ்சாரம் புரியும்வரை கால் வலிமையற்ற சிறுகாலன் என்னும் புன்மைமிக்க விலங்காகிய நரிக் கூட்டம் என்னும் அஞ்ஞான இருளில் மறைந்து இழிசெயல் புரியும் மனேநிலை மாருமலே இருக்கும். அந்த நிலையில் தன்னுடைய இழிகுண இயல்பு தெரியாமல் திருவருட் கொள்கையை வளர்ப்பதாகக் கருதி தன்னை மதத் தலைவன் என்றும் ஞானசிரியன் என்றும் உலகிற்குத் தெரியக் காட்டி பெரியோர்கள் ஆக்கி நூலைப் பார்த்து பார்த்து பிழைப்பதற்காக வாய் ஞானமும் நூல் ஞானமும் பலவாறு பேசத் தொடங்குவதும் அக்காரணத்தால் மேலும் பல பேர்கள் இதே மாதிரி செயல்பட துவங்க அதனுல் வம்பும் மதவெறியும் பூசலின் மிகுதியாக அமையப் பெறும் அதையே தோட்டத்து மாம்பழம் தொண்டின் விழுந்தக்கால் நாட்டின் புறத்தின் நரியழைத்து என்செய்யும் என்று திருமூலர் கூறுகின்ருர். முற்கூறியபடி அகாரதீர்க்கை பெற்று உகார தீர்க்கையும் பெற்று மகார தீர்க்கையும் பெற்று பிரணவாகார நிலையில் நிற்பவர்களுக்கும் வாய் ஞானம் வீண் ஞானம் வயிற்று பிழைப்பிற்காக பேசும் சாத்திர ஞானம் இவைகள் யாவும் கலகத்திலேயே முடியும். மெய் ஞான விழி உணர்வுடைய பெரியோர்கள் முன்னிலையில் இந்த புன்

நெறிக் கூட்டங்களாகிய சமயவாதங்கள் யாவும் இல்லையாய்விடும். இது சமய தர்க்க விரோதவாதிகள் ஆகிய எல்லோரும் அவர் அவர்கள் தன் வலியறியாமல் சண்டையிட்டுக் கொள்வதைத் தவிர அதன் விளைவை அவர்கள் எதிர்பார்ப்பதில்லை. அதன் காரணம் ஒவ்வொருவரும் உலகம் உய்ய வேண்டும் என்ற பெருநோக்குடன் தான் செயல்படுகின்றனர்கள். நோக்கம் விரும்பத் தக்கதேயொழிய அதற்குரிய தகுதி அவர்களிடம் இல்லை என்பது உலக மக்களுக்கும் அவர்களுக்கும் எட்டாத ஒன்று. அதனாலேயே கலகம் விளைகின்றது. அக்கலக விளைவைத்தான் "மூட்டிக் கொடுத்த முதல்வனை முன்னிட்டுக் காட்டிக் கொடுத்தவர் கைவிட்டவாறே" என்று திருமூலர் கூறுகின்றனர். இது தற்கால சமயத் தலைவர்களை ஞானி எனக்கருதும் மக்களையும் அத்தலைவர்களையும் குறிப்பிட்டு நமது திருமூலர் காட்டி கொடுக்கும் முறை. இது ஒன்றும் இல்லாதது போன்று தோன்றும் சூனியத்தில் தேட்டமாகக் கிடைக்கும் சூனிய சம்பாதனை உரை.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

புலர்ந்தது போதென்று புட்கள் சிலம்பப்
புலர்ந்தது போதென்று பூங்கொடி புல்லிப்
புலம்பி னவளோடும் போக நுகரும்
புலம்பனுக் கென்றும் புலர்ந்திலை போதே. சூயகை (69)

சூரிய உதயங்கண்டு பறவைகள் ஒலிக்க பூங்கொடியும் சூரிய உதயங்கண்டு புல்லிப் படர இதையறியாமல் துயிலும் பெண்ணுடன் சுகிக்கும் நெய்தல் நில தலைவனுக்கு என்றும் சூரிய உதயமே ஆகவில்லை என்று கூறுகிறது இத்திருமந்திரம். உயிரினங்களாகிய பறவையும் மூலிகையினமாகிய பூங்கொடியும் சூரிய உதயங்கண்டு விழிப்பும் பொழிப்பும் அடையும்போது இதையறியாமல் ஒரு பெண் தூங்குகின்றாள் என்றும் அவளுடன் இன்பம் நுகரும் நெய்தல் நிலத்தலைவன் சூரிய உதயமே கண்டதில்லை என்று சொல்லுவதும் புலப்பாடு புலப்படாக்காட்சி. நெய்தல் நிலத்தலைவன் சூரிய உதயம் ஆகும்போது முதலில் சூரியனைப் பார்க்கக் கூடியவனாக இருப்பவன் அவனேயாம் கடல்சார்ந்த நிலம் நெய்தல். சூரிய உதயம் மலையாலும் காட்டு மரங்களாலும் உயர்ந்த மாளிகைகளாலும் மறைக்கப்பட்டுக் காணும் நெய்தல் நிலத்தலைவன் இருக்கும் கடற்கரை இவ்விதமான மறைப்புகள் ஏதும் இல்லாமல் பொழுது புலரும் காட்சி முதலிற் காணக் கூடியதாக அமைதல் இயற்கை அப்படிக்கிருக்க அவனுக்கு என்றுமே சூரிய உதயம் ஆனதில்லை அவன் சூரிய உதயத்தை கண்ணாரக்

கண்டதில்லை என்று கூறுவது புலப்பாடு புலப்படா காட்சி நெறியாக இருக்கின்றது. இதைச் சொல்லுபவர் காணுததைக் காட்டும் ஞானியார் பெருந்தகை ஆகையால் இவ்வாருன சூனியத்தில் தேடிக்காணும் தேட்டத்தை நாம் அடைவது காணுத காட்சியை காண்பதாகும் என்று இச்சூனியத்தில் தேட்டமாய்க் கிடைக்கும் சூனிய சம்பாதனை உரையை கூறுவோம்.

நம்மிடத்தில் ஐந்துபுட்கள் எப்பொழுதும் வாசம் செய்கின்றன. அவைகளுக்கு பஞ்ச பட்சி என்று பெரியோர் பெயர் கூறுவர். அவ்வைந்து பட்சிகளில் சூரிய உதயங்கண்டு ஒலிப்பது கோழியும் காகமும் ஆகும். கோழியும் காகமும் பஞ்சபட்சிக்குரிய தொழில்களில் முறையே துயிலும் அரசும் ஆகிய தொழிலைக் கொண்டு விளங்குவது. அவ்விரண்டும் அதன் தொழிலை மாறுபாடின்றி செய்கின்றன. அதையே புலர்ந்தது போதென்று புட்கள் சிலம்ப என்று கூறுகின்ருர். சுவாசம் என்னும் உயிர்க்காற்றுத் தொகுதி பூங்கொடிக்கு உவமானமாகக் காட்டப் பெறுகிறது. அப்பூங் கொடியாம் வாசித் தொகுதி ஒலியின் பிறப்பிடங்கள் ஏழிலும் தோன்றி ஒலிப்பதை பூங்கொடி புல்லல் என்று சொல்லுகின்ருர். அதையே புலர்ந்தது போதென்று பூங்கொடி புல்லியதாக கூறுகின்ருர். இப்பொழுது முறையே குறிஞ்சி நிலம் முல்லை நிலம் மருத நிலம் பாலை நிலம் ஆகியவற்றின் இயல்புகளை பஞ்சபட்சி தொழிலுக்கு ஏற்றிக் கூறப்பட்டதாக உணர்ந்தோம். அதில் இரண்டை பட்சியாகவும் இரண்டை படர்கொடி மூலிகையாகவும் காட்டியிருப்பினும் ஐந்திணை கூறுபாடுள்ள நிலங்களில் நானிலக் கூறுபாடுகள் அமைந்துள்ளது. இவ்வமைபுகளைக் கொண்ட நானிலம் உடம்பில் அண்ட பிண்டம் எனக் கூறுப்படும் இரண்டில் சிரமாகிய அண்டத்தை இடமாகக் கொண்டது. அண்டம் சூரிய உதயத்தால் விளக்கம் பெறுவது. பிண்டம் நெய்தல் நிலமாகிய இருள் மண்டலம். அதில் தலைப்படு தானம் மூலாதாரம். அது இருள் சூழ்ந்த இடம். ஒளி படர முடியாத இடம் அதுவே திரையோத ஆயிஇ என்னும் மாயாசக்தி நிலைகளமாகிய ஆதார மூலம். அதுவே கடற்கரை என்று சொல்லப்பெறும் இடம். அவ்விடத்தில் ஆன்மா தன்வயம் இழந்து துயில் கொள்ளும் தன்மை உடையது. அவ்ஆன்மா மேல் மூலாதாரத்தில் நிலை கொண்டிருக்கும் காலத்திலும் திரையோத ஆயி என்னும் மாயாசக்தியின் செயற்பாட்டினின்றும் விடுதலை பெருமல் அஞ்ஞான இருளை சார்ந்தே நிற்கும். அது தன்னுடைய சொந்த இடமாகிய ஆதார மூலத்தைச் சாரும் பொழுது ஒன்றும் உணராமல் தூங்கியே போய்விடும். அதைத்தான் புலம்பினவளோடும் போக என்று கூறுகின்ருர். புலன் என்பது மேன் மண்டலத்தில் ஓசை, சுவை, மணம், ஒளி ஆகிய புலன்களைக் கொண்டது அதற்கு கீழாக உள்ள இடம் மூலாதாரம் ஆகையால் அதைப்

புலம்பின்னவள் என்று சொல்லுகின்ருர். அப்புலம்பின்னவள் என்னும் ஆதார சக்தியை சார்ந்து நிற்கும் சீவனை நெய்தல் நிலத் தலைவனுகிய புலம்பன் என்று சொல்லுகின்ருர். புல்லினமும் பூங்கொடியும் புலரிகண்டு பூரிக்கும் பொழுது மனிதன் உறங்கிக் கிடக்கலாமா? என்ற இழிவுச் செயல்குறிப்பை இத்திருமந்திரம் சுட்டிக் காட்டுகின்றது. இதுவே புலப்பாட்டிற்கு எட்டாத சூனியத்தில் தேடிக்கண்ட சூனிய சம்பாதனை உரை என்றறிக.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

யோகம் : தியான யோகம் செய்யும் நியதி

**தோணியொன் றுண்டு துறையில் விடுவ**
**தாணி மிதித்துநின் றைவர்கோ லூன்றலும்**
**வாணிபஞ் செய்வார் வழியிடை யாற்றிடை**
**ஆணி கலங்கில் அதுவிது வாமே.** ௭௰ (70)

ஆற்றில் செலுத்தப் பெறும் தோணி ஒன்று இருக்கின்றது. அத்தோணியில் ஆணியை மிதித்து நின்று ஐந்துபேர் தோணியை செலுத்தும் துடுப்புக் கோலை ஊன்றுகின்ருர்கள். அதனுல் தோணி செல்கின்றது. கொடுக்கல் வாங்கல் ஆகிய வாணிபம் செய்பவர்கள் வழியின் இடையிலும் ஆற்றின் இடையிலும் வந்து சேர்கின்ருர்கள். வாணிபம் நடைபெறுகிறது. அப்படி நடைபெறுவதற்கு காரணமான வழியினிடையிலும் ஆற்றினிடையிலும் ஆணியை மிதித்து செயல்படுத்தாமல் விட்டால் அது இதுவாகிவிடும் என்கின்ருர் திருமூலர்.

வழியும் துறையும் ஆக உள்ளது ஆறு. அவ்வாற்றின் வழிசெல்லவும் துறையில் இறங்கவும்படகைச் செலுத்த வேண்டும். அவ்வாறு படகு செல்வதற்கு ஐந்து பேர் தேவையில்லை மேலும் ஆணியை மிதிக்க வேண்டும் என்று கூறுகின்ருர். அப்படிமிதித்து செலுத்தாவிட்டால் தோணி ஆற்றுப் போக்காய் போய்விடும் என்றும் சொல்லுகின்ருர். ஆற்றில் விடும் தோணியானது சிறியதாய்த்தான் இருக்கும். அதைத் செலுத்துவதற்கு ஐந்து பேர் தேவையில்லை. தோணியில் மிதிக்கக் கூடியதாக ஆணி இருப்பதாகவும் காணப் பெறவில்லை. இப்படி இல்லாத ஒன்ரும் சூனியத்தை உள்ளதாகக் காட்டும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

தோணி என்பது மனம். மனத்தை இழுத்துச் செல்லும் யாறு வாசிப்போக்கு. வாசி போக்கில் மனமான தோணி ஓடிவிடாமல் மனமாகிய தோணியை நிறுத்தினுல் தான் ஆற்றின் இடையிலும்

வழியிலும் கொள்ளுதலும் கொடுத்தலுமாகிய வாணிபம் என்னும் திருவருட் பேறும் பயனும் கிடைக்கும். ஆற்றின் போக்காக தோணி ஓடிக் கொண்டேயிருந்தால் கொள்ளுதலும் கொடுத்தலுமாகிய திருவருட்பேறும் பயனும் கிட்டாது. ஆற்றில் தோணியை செலுத்துவதே ஆள்வினை குறிக்கோளை அடைவதற்காகத்தான். ஆள்வினை குறிக்கோளையே புருஷாத்தம் என்று வடநூலார் கூறுவர். ஆள்வினை குறிக்கோளை அடைவதற்கு துறையிலும் வழியிலும் படகு நிற்க வேண்டியது அவசியம். அவ்வாறு நிறுத்துதற்குரிய சாதனம் ஆணி. ஆணி என்பது தானும் அசையாமல் தன் சார்வுறு பொருளையும் அசையாமல் நிறுத்தக்கூடிய ஆற்றல் உள்ள ஒரு பொருள். அது போல் படகை நிறுத்துவதற்குரிய சாதனமாகிய நங்கூரத்தை ஆணி என்று கூறுகின்றார். நங்கூரம் பாய்ச்சாவிட்டால் நீர்போக்கின் படி படகு போய்விடும். பாய்ச்சிய நங்கூரத்தை படகை செலுத்துவதற்காக எடுக்கும் பொழுது படகின்முனையை தாழும் படியாக மிதிக்க வேண்டும். அப்படி மிதிக்கும் போது தொய்வுற்ற நங்கூரச் சங்கிலி படகு நிமிருங்கால் விடுபட்டு நங்கூரப் பாய்ச்சல் எடுபட்டுவிடும். அதன்பிறகு படகைச் செலுத்தலாம். ஆணியாகிய நங்கூரத்தைப் பாய்ச்சி படகை நிறுத்தலும் அதை மிதித்து கழறச் செய்யலும் இல்லையேல் படகு ஆற்றின் போக்காய் போய்விடும். அதனால் ஒரு பயனும் விளையாததுடன் கவிழ்ந்தும் போய்விடும். இதையே ஆணி கலங்கில் அது இதுவாமே என்று கூறுகின்றார். இதில் ஆற்றுப் போக்கு வாசி. மனம் தோணி அதைச் செலுத்தும் ஐவர்கள் வாசி நடையிற் காணும் ஐம்பூத செயற்பாடுகள். வாசியானது இடமாக ஓடினும் சரி வலமாக ஓடினும் சரி ஐம்பூத செயற்பாட்டுக்குள் அடங்கியே நடைபெறும்.அதைத் தான்ஐவர் கோலூன்றலும் என்று சொல்லுகின்றார். வலமோ இடமோ ஐம்பூத கூறுபாடு கொண்டு வாசி ஓடிக் கொண்டேயிருந்தால் ஆள்வினை குறிக்கோள் எட்டமுடியாது. ஆள்வினை குறிக்கோளாம் திருவருட் பேற்றினை அடைவதற்கு ஆற்றின் போக்காய் படகு செல்லுவது போன்று ஓடும். மனமாகிய தோணியை நிறுத்த வேண்டும். இடமோ வலமோ ஆற்றின் போக்காய் செல்லும் வாசிபற்றித் திரியும் மனம் நிலைப்பட ஆணி என்னும் நங்கூரமாகிய சுழிமுனையை வாசிப் பாச்சலாக்க வேண்டும். அச்சுழிமுனைவாசிப் பாச்சலில் கோல் ஊன்றும் ஐவர்கள் என்று சொல்லிய ஐம்பூதங்களுக்குச் செயற்பாடு இல்லை மனமானது நிலைபெற்றுவிடும் மனமானது நிலைபெற்றால் தன் வழிதுறையில் செய்யப்படும் வாணிபம்ஆகிய திருவருட்பேற்றை அடைய முடியும். சுழிமுனையில் வாசிபாச்சலுருங்கால் சமுத்திரத்தைக் கண்ட நதிபோல் வாசிபாச்சலும் அடங்கிவிடும் மனமும்நிலைபெற்றுவிடும். திருவருட் பேறும் ஆள்வினை குறிக்கோளை அடைய முடியும் என்பதை திருமூலர் நமக்கு வாசிபாச்சல் ஆறு போன்றது என்றும் ஓடும் தோணி

போன்றது மனம் என்றும் அதைக் கட்டுப்படுத்த இடம் வலம் ஆகிய சுவாச கதியை நடுநிலைத் தானமாகிய சுழிமுனையிற் கூட்டி மனதை ஒருமுகப் படுத்தி திருவருட்பேறும் புருஷோத்தம் என்னும் ஆள்வினை குறிக்கோளை அடையவேண்டும் என்று கூறுவதே இல்லாததை உள்ளதாய் காட்டும் சூனியத்தில் தேடிக் கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை.

நங்கூரம் என்பது "நங்" என்று உரமாய் ஊன்றப் பெறுவது. நங்கென்பது பிருதிவுபிஷமாகி நிலத்தைக் குறிக்கும்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

**போதிரண் டாகிப் புரிந்தருள் செய்திட்டு**
**மாதிரண் டாகி மகிழ்ந்துட னேநிற்குந்**
**தாதிரண் டாகிய தண்ணம் பறவைகள்**
**வேதிரண் டாகி வெறிக்கின் றவாறே**

உலகம் உய்வுறும் படியாக இரவிமதியாகிய போது இரண்டாக செய்திட்டிருக்கின்றான் அவனும் பெண்ணாள் ஒருபாகத்தில் அமைய இரண்டாகி அமையும் ஓர் உருக்கொண்டு உலகிற்கு மகிழ்ச்சியை விளைவிக்க இருக்கின்றான். தாதுக்களும் இரண்டாகவே இருக்கின்றன இப்படியிருக்க அவனால் ஏற்படுத்தப்பட்ட பறவைகள் இரண்டும் ஒன்றுகொன்று எதிர்மாறு கொண்டு வெறிப்பது ஏன் என்று நமது சிந்தனையை தூண்டிவிடுன்கிறார் திருமூலத்தேவர். இதில் உலகிற்கு ஒளியாக உள்ள பொருளும் உயிருக்கு உயிராய் உள்ள பொருளும் உயிர்விளைவிற்கு கருவாய் உள்ள பொருளும் எல்லாம் இரண்டு இரண்டாகவே இருக்கும் பொழுது அவனால் ஆக்கபெற்ற அன்னப்பறவைகள் மட்டும் வேறுபாடு கொண்டு வெறித்துக்காண்பது ஏன் என்று கேள்வி நமக்கு எட்டாத சூனியமாக இருக்கின்றது. அதில் தேடிக் காணும் தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை வருமாறு.

உலகிற்கு ஒளி விளக்காய் அமைந்த ரவிமதி இரண்டாகவே இருக்கின்றது. அதில் வேறுபாடு ஏதும் இல்லை. அவ்வொளி விளக்கத்தை நமக்குத் தந்த முதற் பொருளாகிய இறைவனும் உமையோர் பாகனாகவே இருந்து மகிழ்கின்றான் உயிர்த்தோற்றத்திற்கு காரணமாய் உள்ள கருவும் இரண்டாகவே இருக்கின்றன. அப்படியிருக்கும் பொழுது தண்ணம் பறவையாகிய அன்னம் இரண்டாக அமைக்கப் பெற்றது ஏன் மாறுபாடுகின்றது என்று ஆராயும் போது அவன் ஒன்றாக மாறுபாடின்றி வாழவே அப்பறவைகளை அமைத்திருக்கின்றான் அவைகள் தண்ணம் பறவைகள் குளிர்ச்சியை விரும்பும் பறவைகள் குளிர்ச்சி இல்லையேல் அப்பறவைகள் வாழமுடியாது. அப்பறவைகளினுடைய வாழ்விடம்

நீர்நிலையும் அதிற்றலை தூக்கி நிற்கும் தாமரையும் ஆகும். அக்குளிர்ச்சிக்கு எதிரிடையான பாப காரியமாம் தீச்செயலை நாம் செய்கின்ற பொழுது அவைகள் தவித்து மாறுபாடு அடைகின்றன. குளமாகிய வாசியும் அதில் பூத்த தாமரை மலராகிய மணமும் தீச்செயலால் வெதும்பாமல் புண்ணியப் புனலால் சலனமற்று நிற்க அதில் மனமாகிய மலர் மலர்ந்து நின்றால் அன்னப் பறவை என்னும் வாசி நடை நேர்மாறு கொள்ளாமல் ஒன்றையொன்று தழுவி நிற்கும். அவ்வாறில்லாமல் தீச்செயல்களால் வெம்மை ஏற்படின் அவ்வாசி நடைமாறு கொண்டு நிற்கும். வாசிநடை மாறுபட்டால் ஊழ்விளைவும் மாறுபடும். அவ்வாறான மாறுபாடின்றி அன்னம் வாழவேண்டும் என்றால் இமயநியமாதி ஒழுக்கத்தை கைவரப் பெறவேண்டும் அப்பொழுது அந்த அன்னம் என்னும் ஹம்சம் பரம அம்ஸமாகும் பரமன் இரண்டு கூடிய ஓர் உருவம். அதனுடைய செயற்பாடுகளும் இரண்டு ஒன்று கூடியதாகவே இருக்கின்றன. அன்னமானது தீச்செயல்களால் வெதும்பப்பெற்று வெறிகொள்ளச் செய்யும் தீச் செயலை விடுத்து பரம அம்ஸமாகும் செயலை நாம் புரிய வேண்டும் என நம்மை சிந்திக்க வைப்பதே தொடர்பறு நிலைச்சூனியத்தில் தேடிக்கண்ட தேட்டமாம் சூனிய சம்பாதனை உரை என்றறிக.



உ
சிவமயம்
அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை



இந்நூலைப்பற்றி...............

சிவபுண்ணியசீல மெய்யன்பர்கள் அனைவருக்கும் முத்தமிழ் வேதத் திருச்சபையோரின் அன்பு வணக்கம்.

திருமூலரின் சூனிய சம்பாதனை எழுபது மந்திரங்களுக்கு ஞானத் தெளிவு உரை எழுதி வெளியிட்டுள்ளோம்.

மாதவம் செய்து கிடைத்த மானிடப் பிறவிப்பயனை அடைய சும்மா இருந்து அம்மா பொருள் என்னும் சோராமல் காணும் சுகம் சூனியத்தில் சம்பாதனையாக உள்ளது என்பதை ஞானத் தெளிவாக காட்டியுள்ளோம்.

**ஆரும றியாதவ் வண்டத்திருவுருப்**
**பார்முத லாகப் பயிலுங் கடத்திலே**
**நீரினிற் பால்போல் நிற்கின்ற நேர்மையைச்**
**சோராமற் காணுஞ் சுகமறிந் தேனே** - என்ற ஆகமச்

செம்மல் பெற்ற பேரின்பத்தை எல்லோரும் பெற்று இனிதே வாழ இந்நூல் உறுதுணை புரியும். வாசிக்க வாசிக்க இனிமை பெருகும் என்பதை எழுதி நிறைவு செய்கிறோம்.

இங்ஙனம்

**முத்தமிழ் வேதத் திருச்சபையார்**

## எமது இதர வெளியீடுகள்

௧. இராமாயண இலக்கியம் . ரூ. 27/- (௨௰௭)

௨. நாதாந்தம் என்னும் பண்ணிலக்கணச் சூக்கம் (இசை இலக்கணம்) ரூ. 25/- (௨௰௫)

௩. கரண இலக்கணம் ரூ. 10/- (௰)